..க வெளியீடு, ௪௩௪

# மொழி நூல்






ஆசிரியர்:

டாக்டர் மு வரதராசன், M A, M O L, Ph D
தமிழ்த்துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம்








திருநெல்வேலித் ெ ன்
சைவசித்தாந்த நூற்பதிப்ட,
திருநெல்வேலி - 6.

1

# முதற்பதிப்பின் முன்னுரை

எல்லார்க்கும் ஒத்த உரிமை நல்கும் குடியாட்சி முறை (Democracy), அரசியலில் இன்னும் ஒரு கொள்கையாக நிலவு கின்றதே அல்லாமல், நிலைபெற்றுவிட்ட அமைப்பாக உருப்பெற வில்லை. உருப்பெற முடியுமோ என்று ஐயுறுவோரும், முடியாது என்று மறுப்போரும் உள்ளனர். அதன் நிலைமை இவ்வளவிலேயே உள்ளது. ஆனால் மொழித்துறையில்—மொழியின் ஆட்சியில் இந்த முறை பழங்காலம் முதல் தொடர்ந்து இருந்துவருகின்றது.

மக்கள் மற்ற உயிர்களைவிடச் சிறந்து விளங்குதல் போலவே, மக்கள் படைக்கும் பொருள்களும் மற்ற இயற்கைப் பொருள்களை விடச் சிறந்து விளங்குகின்றன. இந்த உண்மையை மக்கள் படைத்து வளர்த்துப் போற்றும் மொழி விளக்கிவருகின்றது.

பயனுள்ளது வாழும்; பயனில்லாதது வீழும். வேண்டாத ஒன்று தானே அழிதல் இயற்கை; அந்த அழிவும் ஆக்கம் கரு தியதே. மாறுதல் ஒவ்வொன்றும் முன்னேற்றத்தின் படியே. இவ்வளவும் உயிர்வாழ்க்கையின் மற்றத் துறைகளில் காணப் படுதல் போலவே மொழித் துறையிலும் காணப்படுகின்றன.

மொழியைப் பேசுவோர்க்கும் எழுதுவோர்க்கும் பிணக்கும் போராட்டமும் உள்ளன. மொழியின் பழமையைப் போற்று வோர்க்கும் மொழியின் வளர்ச்சியை விரும்புவோர்க்கும் பகை பெருகுகின்றது. இந்தப் பிணக்கு, போராட்டம், பகைமை எல்லாம் வேண்டாதவை; வீண். இவ்வாறு உணர்த்த வல்லது மொழியின் ஆராய்ச்சியே.

இலக்கியத்தில் காண்பது மொழியின் பதிவுபெற்ற பழைய வடிவம். இலக்கணம் என்பது மொழியின் இறந்தகால நிலையை விளக்கி நிகழ்கால நிலையைச் சொல்ல முயல்வது. மொழியியல் என்பது மொழியின் வரலாற்றை விளக்குவதோடு நிகழ்கால நிலையைத் தெளிவாக்கி எதிர்காலப் போக்கையும் அறிவிக்க வல்லது.

இவை போன்ற அரிய உண்மைகளையும் கருத்துக்களை கற்கத் தொடங்குவார்க்கு மொழிநூல் ஒரு தனிக்கலைய விளங்கும். உயிர்நூல் உளநூல் முதலியனபோல மொழிநூ சிறப்புடைய ஒரு கலையே என்று கண்டமையால்தான் செ நூற்றாண்டில் ஐரோப்பிய அறிஞர்கள் இத்துறையில் ஓயா உழைத்தனர்; அந்த உழைப்பிலே இன்பமும் கண்டனர். இ நூற்றாண்டிலும் ஆட்டோ யெஸ்பெர்ஸன் வாழ்நாள் முழு மொழிநூல் கல்வியே பொழுதுபோக்காகக் கொண்டு பல சிற நூல்களை எழுதியுள்ளார். அவர் எழுதிய நூல்களைக் கற்றுக் கலை பித்தர் ஆனவர் பலர். அவருள் கேம்பிரிட்ஜ் பேராசிரி டார்ன்லி நாய்லர் (Prof. H. Darnley Naylor) என்பவர் ஒரு அவரை, ஒரு பல்கலைக் கழகம் (University of Adelaide) பட் மளிப்பு விழாச் சொற்பொழிவு ஆற்ற அழைத்தபோது யெஸ் ஸன் இயற்றிய "மொழியும் அதன் இயல்பும் வளர்ச்சியும் தோ மும் (Language, Its Nature, Development and Origin)" என் ஒரு நூலைப் பற்றிய சுருக்கமான ஆராய்ச்சியையே சொற்பொ வாக ஆற்றினர். இவ்வாறு, மொழியியல், பலர் உணர்ந்த ஒ கலையாக விளங்காவிட்டாலும், ஆற்றல் மிக்க ஒரு கலையாக திகழக் காண்கின்றோம்.

இந்த அருங்கலை தமிழ்நாட்டில் பரவுதற்குக் காரண இருந்து மொழித்தொண்டாற்றியவர் டாக்டர் கால்டுவெ திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்னும் அவர்தம் நு குறையுள்ள முதல் முயற்சியே ஆயினும், ஒப்புயர்வற்றதா அமைந்து அறிஞர்க்கு வழிகாட்டிவருகின்றது. அவர்தம் ஆராய்ச் கொண்டு தொல்காப்பியம் முதலான பழைய நூல்களைக் காண காண, தமிழ் மொழியின் சிறப்பும் தமிழ்ச் சான்றோரின் பெரு யும் நன்கு விளங்கிவருகின்றன. ஆதலின் அறிஞர் கால்டுவெ ஆற்றிய மொழித்தொண்டு, தமிழகம் என்றும் மறவாது போற்ற தக்க பேருதவியாகும். இத்துறையில் ஆர்வம்கொண்டு தமி மொழியிலே நூல்கள் இயற்றியுதவிய பேராசிரியர்கள் வி. கோ சூரியநாராயண சாஸ்திரியார், மாகறல் கார்த்திகேய முதலியா கா. சுப்பிரமணிய பிள்ளை ஆகியோர். அறிஞர் பலர் இன்று நம்மிடையே இருந்து மொழியியல் நூல்களும் கட்டுரைகளு எழுதி உதவிவருகின்றனர்.

சென்னைப் பல்கலைக் கழகத்து மொழிநூல் பாடத்திட்டதை ஒட்டி, பச்சையப்பன் கல்லூரியில் பி. ஓ. எல். ஆனர்ஸ் O. L. Hons.) வகுப்பிற்கு 1942-இல் மொழிநூல் பாடம் பிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தபோது, எனக்கு இந் லைப் பற்றிய எண்ணம் அரும்பியது. முதலில் மாணவராக ந்த திருவாளர் போ. குருசாமி, சி. வேங்கடசாமி, ச. ரகு பகம், ரா. சீனிவாசன் ஆகியோர் அந்த எண்ணத்தை மேன் லும் வளர்த்துவந்தனர். யான் சொல்லியவற்றை அவர்கள் ழுதி வைத்த குறிப்புக்களே இந்நூல் வடிவுபெற்றன.

இதனை அழகுற அச்சிட்டு வெளிப்படுத்தச் சைவசித்தாந்த ற்பதிப்புக் கழகத்தார் முன்வந்தது எனக்கு வாய்த்த நல்லுதவி கும்.

மேற்குறித்த அனைவர்க்கும் நன்றி செலுத்துகின்றேன். மிழகம் என் சிறு முயற்சியை வரவேற்று ஊக்கமளிக்கும் என புகின்றேன்.

ன்னை,
5-1947.

மு. வரதராசன்

## பொருளடக்கம்

---

# மொழி நூல்



## க. ஒலி வகை

### ஒலி மொழியாதல்

சில வகை அசைவுகள் செவிப்புலனைத் தாக்கும் போது உணரப்படுவதே ஒலியாகும். மொழியும் இவ்வாறு உணரப்படுவதே. மொழி என்பது பேசுவோரின் குரலில் பிறந்து பொருளுடைய அறிகுறிகளாக அமைந்து கேட்போரால் பொருள் உணரப்படும் ஒலிவகை எனலாம்; அது, பெரும்பாலும் பேசுவோர் கேட்போர் ஆகிய இருதிறத்தார்க்கு இடையே நிகழ்ந்து, ஒருவர் உணர்ச்சியையோ கருத்தையோ மற்றவர் உணர்வதற்குப் பயன்படுகிறது. பேசுவோரின் மூளையில் ஓர் எண்ணம் எழுகிறது; கேட்போரின் மூளை அதை உணர்ந்துகொள்கிறது; பேசுவோர் கேட்போர் ஆகிய இருவர்க்கு இடையே—இருவரின் உடல் நரம்புகளுக்கு இடையே—மூளைகள் உறவுகொள்ளத்தக்க தொடர்பை ஏற்படுத்துவதே மொழிமுதற் காரணமான ஒலி.

இவ்வாறு பயன்படும் ஒலி ஒவ்வொரு மொழியினர்க்கும் ஒவ்வொரு வகையாக அமைகிறது. ஒவ்வொரு குழுவினர் கூடிப் பொதுவாக உணர்வதற்கு ஏற்றவாறு, அந்த ஒலிவகை தொன்றுதொட்டு அறிகுறிகளாக அமைந்து வழிவழியாக வளர்ந்து பயன்படுவதால், மொழிக்கு ஒரு வரலாறும் உளதாகின்றது. மொழி அல்லாத மற்ற ஒலி

வகைகளுக்கு இத்தகைய வளர்ச்சியும் இல்லை; வரலாறும் இல்லை.

பேசுவோர் ஒருவகை ஒலியைப் பேச, கேட்போர்க்கு அது விளங்காமற் போகுமாயின், அவருடைய மொழி வேறு, இவருடைய மொழி வேறு என்கின்றோம். எனவே, பேசுவோரும் கேட்போரும் அறிந்து போற்றுமாறு பொதுவான தன்மைகளும் குறியீடுகளும் கொண்டு விளங்கும்போது, அது ஒரு மொழி ஆகின்றது. இவ்வாறு பேசுவோர்க்கும் கேட்போர்க்கும் பொதுவாக வளர்ந்த ஒரு மொழியில் உள்ள ஒலிகளையே சொற்றொடர்கள் என்றும், சொற்கள் என்றும் பிரித்தறிகின்றோம். அந்தச் சொற்களில் பல வேறு சிறு சிறு ஒலித் துணுக்குகள் இருத்தலை உணர்ந்த முன்னோர் அவற்றை ஆராய்ந்து பாகுபாடு செய்து எழுத்துக்கள்[1] என வகுத்தனர்; அவற்றை மேலும் ஆராய்ந்து, உயிர் எனவும் மெய் எனவும் பிரித்து உணர்த்தினர்.

### ஒலிகள் பலவகை

பேசுவோர் இந்த ஒலிவகைகளை எல்லாம் வேறுபடுத்தி உணர்ந்து, குறியீடுகளாகப் போற்றி, உணர்த்தும் பொருள் வேறுபாடுகளைத் தெளிந்து ஒலிக்கின்றனர். அவர்கள் அவ்வாறு ஒலிப்பதற்குக் கருவிகளாகப் பயன்படுவன, நுரையீரல், குரல், நா, அண்ணம், மூக்கு, பல், இதழ் ஆகிய உறுப்புக்கள் ஆகும். அவை அவ்வப்போது வெவ்வேறு வகையாகத் தொழிற்படுகின்றன. நுரையீரலிலிருந்து எழும் காற்று அவற்றால் தடையுற்று வெளிப்

1. இங்கு எழுத்துக்கள் என்று குறிக்கப்படுவன அ ஆ இ எனச் செவியால் கேட்டு உணரப்படும் ஒலி வடிவங்களே; எழுதப்பட்டுக் கண்ணால் காணப்படும் வரிவடிவங்கள் அல்ல.

படுவதே எல்லா ஒலிகளும் பிறக்கக் காரணம்;[1] அக்காரணம் கருதும்போது எல்லா ஒலியும் ஒன்ருகவே தோன்றும். ஆயின் நா முதலிய உறுப்புக்கள் பல்வேறு வகையாய் நின்றும் அசைந்தும் தொழிற்படுவதால், ஒலியும் பல வேறு வகைப்படுகின்றது. ஒலிக்கும் உறுப்புக்களாக மிகுதியாய்த் தொழிலாற்றுபவை, உண்பதற்கும் உயிர்ப்பதற்கும் உரிய உறுப்புக்களே. அவை எந்நேரமும் தொழிலாற்றிப் பண்பட்ட உறுப்புக்களாதலால், பல்வேறு நிலையில் நின்றும் இயங்கியும் பலவகை ஒலிகளை எழுப்புதல் எளிதாகின்றது.

ஒலிகள் எவ்வெவ்வாறு பிறக்கின்றன, எவ்வெவ்வாறு வேறுபடுகின்றன என்பவற்றைத் தெளிவாக ஆராய்வதற்கு இக்காலத்தில் கருவிகள் பல உள்ளன. லாரிங்கோஸ்கோப் (laryngoscope) என்னும் கருவி கண்ணடிபோல் ஒலி பிறக்குமுறையைக் காட்டுகிறது. எக்ஸ்ரே நிழற்படக்கருவி ஆகியவற்றைக்கொண்டும் ஒலிகளை ஆராய முடிகிறது. பேசிய நொடிப்பொழுதிலேயே அழிந்து போகும் ஒலியை ஆராய்வது அரிதாக இருத்தலின், பேசும்போதே ஒலிகளைப் பதிவுசெய்யும் கருவிகளைப் பயன்படுத்துகின்றனர். ஒலிநூலாரின் ஆராய்ச்சி இந்நூற்றுண்டில் வளர்ந்துவருவதற்கு இவையெல்லாம் துணைசெய்கின்றன. இந்த ஆய்வு முறைகள் palatography, linguography, rontgenogaphy முதலான பெயர்களால் வழங்குகின்றன.

---

1. The Speaker's vocal chords, tongue, lips, and so on interfere with the stream of his outgoing breath, in such a way as to produce sound-waves. —Bloomfield, Language, p, 31.

Most speech-sounds are produced by interference with the outgoing breath. Ibid—93.

**பயிற்சியால் வேறுபடல்**

பலவகை ஒலிகளுக்கும் பிறப்பிடமாகிய உடலின் உறுப்புக்கள் எல்லா மக்களுக்கும் ஒரே தன்மையவாக அமைந்துள்ளன. எனினும், ஒரு மொழியைப் பேசும் மக்கள், மற்றொரு மொழியின் ஒலிகளை அவ்வளவு நன்றாக ஒலிக்க இயலாமல் இடர்ப்படுகின்றனர். காரணம் என்ன? உடலின் உறுப்புக்கள் ஒரே தன்மையவாக இருப்பினும், சிலவகை ஒலிகளை ஒலித்துப் பழகிவிட்ட பிறகு, அவை பயிற்சி மிகுதியால் அவ்வொலிகளுக்கே ஏற்றாற்போல் அமைந்துவிடுகின்றன. இடமிருந்து வலம் நோக்கி எழுதிப் பழகிய கை, வலமிருந்து இடம் நோக்கி எழுத முனைந்தால் இடர்ப்படுகின்றது அன்றோ? அதுபோலவே, ஒலிக்கும் உறுப்புக்களும் பயிலாத ஒலிகளை ஒலிக்கும்போது இடர்ப் படுகின்றன.

ஆயின், குழந்தைப் பருவத்திலிருந்தே பழகுவோமானால் எந்த மொழியின் ஒலிகளும் பழக்கமாகிவிடும். தமிழ்க் குழந்தை ஒன்றைத் தனியே பிரித்து வளர்த்துச் சீனமொழியின் ஒலிகளைப் பயிலுமாறு செய்தால், மற்றச் சீனக் குழந்தைகளைப் போலவே அதுவும் பிற்காலத்தில் சீன மொழியை நன்கு ஒலிக்க வல்லதாகும்; அவ்வாறே குழந்தைப் பருவத்திலிருந்தே ஆங்கில ஒலிகளைப் பயிலுமாறு செய்தால், ஆங்கில மக்களைப் போல் பேசும் திறனைப் பெற்றுவிடும். நடையுடை முதலியன போல், ஒலிமுறையும், பயிலும் பயிற்சியால் பெறக்கூடியதே ஆகும்.

நாட்டின் தட்ப வெப்பநிலை, உணவுமுறை முதலியவற்றால், ஒலிக்கும் உறுப்புக்களில் சிறுசிறு மாறுதல்கள் நேர்தல் உண்டு என்பர். மலையில் வாழும் மக்களும் திறந்த வெளியில் உழைத்து வாழும் மக்களும் உரத்த குரலுடன்

வல்லொலிகளை ஒலிக்க வல்லுநர் ஆவர்; கடற்கரையிலும் நகரங்களின் இடையிலும் வாழ்வோர் மெல்லொலிகளை மிகுதியாக ஒலிப்பர். சிலர் மூக்கொலிகளை மிக ஒலிப்பர். ஆயினும், இவ்வேறுபாடுகள் பெரும்பாலும் தட்பவெப்ப நிலை முதலியவற்றைக் கடந்து நிற்கின்றன என்பர் மொழி நூலார். பயிற்சி மிக்கவர் எந்த ஒலிகளையும் நன்கு ஒலித்தல் இயலும்.

குழந்தைகள் பேசத் தொடங்கும்போது, ஒலிக்கும் முறையில் வேறுபாடுகள் உள்ளன. சில குழந்தைகளுக்குத் த ஒலிக்க வருவதில்லை. வேறு சில குழந்தைகள் த ஒலிக்கும்; ஆனல் ர ஒலிப்பதில்லை. இன்னும் சில குழந்தைகளுக்கு ட ஒலி வருவதில்லை. இப்படியே ஒவ்வொரு குழந்தையும் கற்கும்போது எத்தனையோ இடர்களை உற்ற போதிலும், நாளடைவில் பேசப் பழகிப் பழகி எல்லாரையும் போல அந்த மொழியை நன்கு கற்றுக்கொள்கிறது. வளர்ந்த பிறகும், மக்கள் ஒலிக்கும் முறையில் சிற்சில வேறுபாடுகள் உள்ளன எனினும், குழந்தைப் பருவத்தில் இருந்த அவ்வளவு வேறுபாடுகள் இல்லை. நா முதலிய உறுப்புக்கள் வெவ்வேறு இடத்தில் நின்று இயங்குதலே பல்வேறு வகையாக ஒலி வேறுபடுதற்குக் காரணம் அன்றோ? குழந்தைப் பருவத்தில் பயிற்சி இல்லாத காரணத்தால் நாக்கு முதலிய உறுப்புக்கள் எண்ணியவாறு தொழிலாற்ற முடிவதில்லை; அதனல் ஒலிக்கும்போது இடர்ப்பாடு நேர்கின்றது. பயிற்சி மிக மிக, எண்ணிய வாறு அவற்றைத் தொழிற்படுத்த முடிவதால், மற்றவர்களைப் போல் பேசும் திறன் அமைகின்றது. நாட்டுக்கு நாடு வெவ்வேறு மொழி பேசும் மக்களும், வெவ்வேறு வகையான ஒலிகளை ஒலித்தபோதிலும், பிற மொழியைப் பேசிப் பேசிப் பயில்வார்களானல், முயற்சியில் ஓரளவு

வெற்றி பெறமுடியும். நாட்டின் தட்ப வெப்பம் முதலிய வற்றின் விளைவுகளை எளிதில் கடந்து பிறமொழிகளைக் கற்றுப் பேச முடியும். ஆகையால், எல்லா நாட்டு மக்களுக்கும் ஒலிக்கும் ஆற்றல் ஒரே தன்மையாக அமைந்திருக்கின்றது என்பது உண்மை.

சுருங்கக் கூறின், பிறப்பு, சூழ்நிலை தட்பவெப்பம், உணவு முதலிய எக்காரணத்தையும் கடந்து எவ்வகை ஒலிகளையும் ஒலிக்கத் தக்கவாறு மக்களின் உடலில் உறுப்புக்கள் அமைந்துள்ளன. ஆயின், சிலவகை ஒலிகளில் இளமையில் பயிற்சி பெற்றவர், பிறகு வேறுவகை ஒலிகளை எளிதில் ஒலிக்க இயலாமல் தடுமாறுவர்.

ஆகவே, ஒலியியல் ஆராய்வோர், எல்லா மொழிகளுக்கும் பொதுவான அடிப்படை ஒலிமுறையை ஆராய்வதுடன், தனித்தனியே ஒரு சில மொழிகளின் சிறப்பியல்புகளையும் ஆராய்தல் வேண்டும். அத்தகைய ஆராய்ச்சியே மொழியின் ஒலி எத்தன்மைத்து என்பதை விளக்க வல்லதாகும்.

சிறப்பியல்புகள்

ஒவ்வொரு மொழியிலும் சிற்சில ஒலிகள் செல்வாக்கு உடையனவாக விளங்கும். சில மொழிகளில் மூக்கொலிகள் ஆட்சி செலுத்தும். சில மொழிகளில் வல்லொலிகள் சிறப்புடன் நிற்கும். வேறு சில மொழிகளில் உயிரெழுத்துக்களில் குறில்நெடில் வேறுபாடு இன்றியமையாததாக இருக்கும். இன்னும் சில மொழிகளில் சிலவகை ஒலித்திரிபுகள் பெரிதும் போற்றப்படும். ஒரு மொழி பேசுவோர் வேறொரு மொழியைப் பேசக் கற்கும்போது சில இடர்ப்பாடுகளை உறுகின்றனர். அவற்றை ஆராய்ந்தால், அவருடைய தாய்மொழியில் உள்ள குறைகள் இன்ன என்றும்,

கற்கப்படும் மொழியில் உள்ள சிறப்பியல்புகள் இன்ன என்றும் தெரிந்துகொள்ளலாம். ஆங்கிலேயர் தமிழைக் கற்கும்போது ள, ழ, ட, ண, ற ஆகியவற்றை ஒலிக்க இடர்ப்படுவர். ஆதலின், அவை ஆங்கிலத்தில் இல்லாத ஒலிகள் என்பதை உணரலாம். தமிழ்ச் சிறுவர் ஆங்கிலம் கற்கும்போது என்ன என்ன இடங்களில் இடர்ப்படுகின்றனர் என்பதை ஆராய்ந்து, தமிழொலிகளின் குறைகளை உணரலாம்.

இவ்வாறு ஒவ்வொரு மொழியிலும் ஒவ்வொரு வகையில் வேறுபட்ட வளர்ச்சி இருப்பதற்குக் காரணம் இன்னது என்று தெளிவுறுத்தல் இயலாது. உடை அணி முதலியவற்றில் எத்தனையோ வகையானவை உலகில் தோன்றியபோதிலும், சிலவகையானவை மட்டும் எளிதில் நாடெங்கும் மக்கள் எல்லோரிடத்திலும் நாகரிகமாகப் பரவி விளங்குகின்றன அல்லவா? அதற்குக் காரணம் இன்னது என்று கூறுதல் இயலுமோ? புகழ்நிலையில் வாழும் சிலர் முன்னே அவற்றைப் போற்ற, மற்றவர்கள் அவர்களைப் பின்பற்றிக் கண்மூடிப் போற்றியதாலேயே அவைகள் நாகரிகமான உடை அணி வகைகளாகப் பெருவாழ்வு பெறுகின்றன. மொழிகளிலும் சிலவகை ஒலிகளும் திரிபுகளும் செல்வாக்குப் பெறுவதற்கு இவ்வாறான காரணங்கள் உண்டு. இத்தகைய சிறப்பொலிகளாலேயே ஒலிகள் மொழிக்கு மொழி வேறுபடக் காண்கின்றோம். ஓரினமாக உள்ள மொழிகளிலும், இத்தகைய ஒலி வேறுபாட்டைக் காணலாம். மலையாளத்தில் மூக்கொலி மிக்கு நிற்றல், தெலுங்கில் உயிரொலியியைபு (harmonic sequence of vowels) என்னும் திரிபு பயின்று வழங்கல், கன்னடத்தில் ப குறைந்து ஹ ஒலி பெருகல் முதலியவை திராவிட இனமொழிகளில் எடுத்துக்காட்டுகளாகும்.

முதல் : வகை

ஆங்கிலத்தில் l என்ற ஓர் எழுத்தே ல ள ழ என்ற மூன்று ஒலிகளையும் குறிக்கவேண்டியுள்ளது; n என்ற ஓர் எழுத்தே நணன என்ற மூன்றையும் குறிக்கவேண்டியுள்ளது. இங்கிலை ஆங்கிலத்தின் குறை அன்று. k, g என்ற ஆங்கில ஒலிகளுக்கு ஈடாகத் தமிழில் உள்ள எழுத்து க என்ற ஒன்றே. p, b; t, d; ch, j என்னும் ஒலிகளுக்கு ஈடாகத் தமிழில் ஒவ்வோரெழுத்தே உள்ளமை காணலாம். இது தமிழின் குறையும் அன்று. எல்லா ஒலிகளும் ஒவ்வொரு மொழிக்கும் இருத்தல் வேண்டும் என்னும் கட்டாயம் இல்லை.

கமம், கடல்—k அகம், புகழ்—g

இவ்வாறு க, க என்ற ஈரொலியும் தமிழில் இருப்பினும், தமிழ் மெய்யெழுத்துக்களுள் க என ஒன்றே கொண்டனர். இவ்வாறு கொள்வது தமிழ்மொழி வழக்குக்குப் போதுமானதாகவும் பொருத்தமானதாகவும் உள்ளது. இவ்வாறு அந்தந்த மொழிவழக்கு நோக்கிக் கொள்ளப்படும் அடிப்படை ஒலி (பொருள் வேறுபாடு உணர்த்தும் ஒலி) முதலொலி (phoneme) எனப்படும்.[1] பொருள் வேறுபாடு உணர்த்தாமல் இடத்தால் மட்டும் வேறுபடும் ஒலிகள் வகையொலிகள் (allophones) எனப்படும். ஆகவே,

---

1. The phonemes of a language are not sounds, but merely features of sound which the speakers have been trained to produce and recognize in the current of actual speech-sound. —Bloomfield, Language, p. 80.

A phoneme is either a single speech-sound or a group of similar speech-sounds, which in a given language function in the same way.

—Sturtevant, An Introduction to Linguistic Science, p. 15.

தமிழில் க (k) முதலொலி எனவும் க, க, (k, g) இரண்டும் அதன் வகையொலிகள் (allophones) எனவும் கொள்ளல் வேண்டும்.

ஒரு மொழியில் முதலொலிகளாக (phonemes) இருப்பவை எல்லாம் மற்றொரு மொழியிலும் முதலொலிகளாக இருக்கவேண்டியதில்லை. ஒரு மொழியில் முதலொலியாக இருப்பது மற்றொரு மொழியில் வகையொலியாக இருத்தல் உண்டு. ஒரு மொழியின் வகையொலி வேறொரு மொழியில் முதலொலியாகவே இருத்தலும் உண்டு. ல ள இரண்டும் தமிழில் முதலொலிகள்; ஆங்கிலத்தில் ல மட்டும் முதலொலி; ள வகையொலி. p b இரண்டும் ஆங்கிலத்தில் முதலொலிகள்; தமிழில் p மட்டும் முதலொலி; b வகையொலி. இவ்வாறே காண்க. ஒரே மொழியின் கிளைகளுக்குள்ளும் இத்தகைய வேறுபாடு உண்டு. வெவ்வேறு கிளைமொழிகள் வழங்கும் பகுதிகளின் எல்லையில், இந்த வேறுபாடு தெளிவாகத் தோன்றும். எடுத்துக்காட்டாகத் தமிழ்நாட்டின் வடக்கு மாவட்டங்களில் சட்டி, சாமான், சங்கு முதலியவற்றின் சகரத்தை ஒலிக்கும் முறைக்கும் தென் மாவட்டங்களில் ஒலிக்கும் முறைக்கும் வேறுபாடு உண்டு. இவற்றின் இடையே உள்ள எல்லையை வேற்றெல்லை (isogloss) எனலாம். மொழிகளின் ஒலியாராய்ச்சிக்கு இந்த வேற்றெல்லைகளைப் பற்றிய அறிவு துணைசெய்யும். பொதுவாக நோக்கின், ச என்பது தமிழில் உள்ள ஒரு முதலொலியாகும்; ஜ, ஸ என்பன அதன் வகையொலிகள்.

இம் முறைப்படி ஆராயும்போது பேச்சுமொழியின் ஒலிகளையே கொள்ள வேண்டும். 'கடல்' என்பதை மூன்று எழுத்தாக எழுதும் முறை கண்டு, மூன்று ஒலிகள் உள்ளனவாகக் கூறல் பொருந்தாது.

க் அ ட் அ ல்

என மூன்று மெய்யும் இரண்டு உயிரும் இருத்தலை உணரல் வேண்டும்.

'உயிரும் உடம்புமா முப்பது முதலே'[1] என்று இலக்கண நூலார் வகுத்தது இங்கு மிகப் பொருந்துகிறது. இவ்வாறே ஆங்கிலத்தில் thick என்ற சொல் ஐந்து எழுத்துக்களால் எழுதப்பட்டபோதிலும், த் இ க் என்ற மூன்று முதலொலிகளே உள்ளன என்று உணரல் வேண்டும். ஆங்கிலத்தில் உள்ள எழுத்துமுறை ஒலியியலுக்கு ஒத்து வாராததாக இருத்தலின், இத்தகைய குறைகள் உள்ளன. தமிழிலும் குறைகள் உண்டு; எனினும் முதலொலி (phoneme) வகையொலி (allophones) என்ற பாகுபாடு கொண்டு ஆராய்ந்தால், தமிழின் எழுத்துமுறை சிறந்த தொன்றாக இருத்தலை உணரலாம். ஆங்கிலத்தில் முதலொலிகள் (phonemes) நாற்பத்தாறு இருப்பதாகக் கூறுவர். இருபத்தாறு எழுத்துக்களைக்கொண்டு நாற்பத்தாறு முதலொலிகளையும் (phonemes) பல வகையொலிகளையும் (allophones) உணர்த்துவது ஆங்கிலம். முப்பது எழுத்துக்களைக்கொண்டு, முப்பது முதலொலிகளையும் பல வகையொலிகளையும் உணர்த்துவது தமிழ்.[2] இவ்வாறே ஒவ்வொரு மொழியிலும் காணலாம்.

---

1. நன். எழுத்: ௬.

2. தமிழின் கிளைமொழிகளை (dialects) ஆராய்ந்தால் முதலொலிகள் இன்னும் குறைவாக இருத்தல் காணலாம். சில கிளைமொழிகளில் ழகரம் இல்லை; பலவற்றில் றகரம் இல்லை. றகரம ரகரமாகவோ (அறிவு - அரிவு) தகரமாகவோ (விற்று - வித்து, நாற்று - நாத்து) ஒலிக்கப்படுகிறது; பலவற்றில் ஐ, ஔ இரண்டும் அய் அவ் என இரண்டு இரண்டு முதலொலிகளாக ஒலிக்கப்படுகின்றன.

பாகுபாடு

பறவைவிலங்குகளின் குரலில் எழும் ஒலிவகைகள் ஓர் அளவில் அடங்குவனவாக உள்ளன. மக்களின் குரல் ஒலியோ பலவகைப்படுவதாய், அளவற்ற வேறுபாடுகள் உடையதாய் விளங்குகின்றது. மொழிகளை ஆராய்ந்து ஒலிகளைப் பாகுபாடு செய்யும் இலக்கண நூல்கள் அந்த ஒலிவகைகளை எல்லாம் வரையறைப்படுத்தியுள்ளன என்று கூறுவதற்கில்லை; மக்களின் குரலில் எழும் ஒலிவகைகள் கணக்கற்றவை; அவற்றுள் சிலவற்றை மட்டும் பயன்படும் முறை கருதி எழுத்துக்களாக அமைத்துள்ளனர் முன்னோர்.

ஆங்கில மொழியில் a, e, i, o, u என்னும் எழுத்துக்கள் ஒவ்வொன்றும் பல்வேறு வகையாய்—மூன்று வகை முதல் ஒன்பது வகை வரையில் வேறுபடுவனவாய் ஒலிக்கப்படுகின்றன என்றும், ஆயினும் குறியீடு ஒவ்வொன்றும் பலவகைப்பட்ட ஒலிகளுக்கும் பொதுவாய் நின்று பயன்படுகின்றது என்றும் கூறுகின்றனர்.[1]

உயிரொலிகள் மட்டும் ஐம்பதுக்கு மேற்பட்டவை இருத்தலைச் செவி கொண்டு கேட்டுணரலாம் என்றும், ஆயினும் ஒரு சில உயிரொலிகளையே ஒவ்வொரு மொழியினரும் போற்றிக் காத்து எழுத்துவடிவம் தந்துள்ளனர் என்றும் ஜோன்ஸ் என்னும் அறிஞர் கூறுகிறார். ஒலிக்கும் உறுப்புக்கள் ஒரே நிலையில் நின்றபோதிலும், மூச்சு வரும் வழி குறுகியும் விரிந்தும் பல்வேறு வகையாய்த் திரிந்தும்

---

1. That our written vowels have from three to nine values each, is owing to the fact that we have altered their original unitary sounds in so many different ways during the historic period.
—Whitney W. D., The Life and Growth of Language, p. 56.

ஒலி பல வகையாய்ப் பிறக்க இடந்தருகின்றன என்றும் அவர் கூறுகிறார்.[1]

தமிழிலும் இந்நிலை உண்டு; எடுத்துக்காட்டாக, ஆமாம், இல்லை, ஒஓ என்னும் ஒலிகளை ஆராய்வோம். ஆமாம் என்பதை ஒருவரே வெவ்வேறு பொருட்குறிப்புடன் ஒலிக்கின்றார். அவர் ஒலிப்பதுபோல் மற்றவர்கள் ஒலிப்பதில்லை; மற்றவர்களுள் ஒவ்வொருவர் ஒலித்தலிலும் சிறுசிறு நுண்ணிய வேறுபாடுகள் உள்ளன. ஓர் இடத்தார் ஒலிக்கும் முறைக்கும் மற்றோர் இடத்தார் ஒலிக்கும் முறைக்கும் எவ்வளவோ வேறுபாடுகள் உண்டு. இவை அனைத்தும் ஆராயின், 'ஆமாம்' என்ற ஒரு சொல் பல்வேறு வகையாய் ஒலிக்கப்படுதலையும், அதில் உள்ள ஆ முதலிய ஒலிகள் வெவ்வேறு வகையாய் ஒலிக்கப்படுதலையும் அறியலாம். அந்நிலையில், பல்வேறு வகையான ஒலிகளையும் எழுத்தில் குறிக்கும்போது வேறுபாடு விளக்காமல் ஒரே வகையாக 'ஆ-மா-ம்' என்று எல்லாவற்றிற்கும் பொதுவாக எழுதிவருதலை உணரலாம். இல்லை, ஒஓ முதலான சொற்களின் ஒலிகளையும் இவ்வாறே வேறுபாடுகள் தோன்றாமல் பொதுப்பட எழுதுகிறோம். எனவே, ஒலிக்கும் ஒலிவகை

1. Different shapes of the passage modify the quality of tone in different ways, and consequently give rise to distinct vowel sounds. Now the shape of passage can be varied very greatly even when the organs are limited to vowel positions. Consequently the number of possible vowels is very large. A good ear can distinguish well over fifty distinct vowels (exclusive of nasalised vowels, etc.) In any one language, however, the number of distinct vowels is comparatively small. In English it is not necessary for ordinary purposes to distinguish more than fifteen.—Daniel Jones, An Outline of English Phonetics. p. 15.

பல என்றும், எழுதும் எழுத்துக்கள் சில என்றும் தெளியலாம். ஒலிவகை பலவற்றையும் குறிக்கத் தொடங்கின், எழுத்துவகை (நெடுங்கணக்கு) அளவுபடாமல் பெருகிப் பயன்படாமற்போகும் என்று அஞ்சியே முன்னேர் ஓர் அளவுக்குள் அமையுமாறு வகுத்துச் சென்றனர்.

கருவிகள் பல பெற்று நுண்ணிய ஆராய்ச்சி நடைபெறும் இக்காலத்திலும், ஆராய்ச்சிக்கு எட்டாத ஒலி நுட்பங்கள் பல உள்ளன. ஒரே வாக்கியத்தைப் பத்துப்பேர் பேசினுல், ஒவ்வொருவரின் பேச்சும் சிறிது சிறிது வேறுபடக் காணலாம். பக்கத்து அறையில் இருபது பேர் பேசிக்கொண்டிருக்கும்போது, ஒருவருடைய குரலேக் கேட்டு, நம் நண்பரின் குரல் என்று அறிகிறேம். ஆதலின், சொற்கள் ஒத்திருந்தாலும், ஒலிகள் ஒத்திருந்தாலும், ஒலிக்கும் முறையும் குரலும் நுட்பமாக வேறுபடக் காண்கின்றேம்.[1] அதனுல் ஒரே மொழி பேசுவோருள்ளும், எல்லா வகையாலும் ஒத்துப் பேசுவோர் இருவரைக் காண்பது அரிது என்பர் அறிஞர்.[2] இங்ஙிலேயில், ஒலி நுட்பங்கள் எல்லாவற்றையும் ஆராய்ந்து பாகுபாடு செய்தல் இயலாத ஒன்று ஆகும். அதனுல் முன்னேர், மொழி பயன்படும் முறை நோக்கித் தேவையான அளவுக்குப் பாகுபாடு செய்தனர் எனலாம்.

இவ்வாறு ஒலிகளே அளவுபடுத்தி வகுத்தபோது, அந்தந்த நாட்டில் இருந்தவர்கள் அவரவர்களின் தேவைக்கு ஏற்றவாறு எழுத்துக்களே அமைத்துக்கொண்

1. No matter into how many successive parts we break up our record for purposes of minute study, an even finer analysis is always conceivable—Bloomfield, Language, p. 76.

2. The phonetician finds that no two utterances are exactly alike—Ibid.

டனர். அதனால்தான், ஒரு மொழியில் முப்பது எழுத்து என்றும், மற்றொரு மொழியில் ஐம்பத்தோரெழுத்து என்றும், இன்னொரு மொழியில் இருபத்தாறு எழுத்து என்றும் எண்ணிக்கை வேறுபடுகிறது; ஒரு மொழிக்கு மிக மிக வேண்டியதான எழுத்து மற்றொரு மொழிக்கு வேண்டாததாக இருப்பதற்கும் காரணம் இதுவே ஆகும். ஆயினும் பழந்தமிழர் ஒலிகளை முதல் சார்பு என வகுத்துப் பயன்படுத்திய முறை மிகச் சிறந்தது என்று ஒலியியல் அறிஞர்கள் இன்று உணர்ந்து போற்றுகின்றனர்.[1] அடிப்படை ஒலிகளாகவும் தம் பொருளுணர்ச்சிக்கு இன்றியமையாதனவாகவும் உள்ளவற்றை மட்டுமே தமிழர் ஒலியெழுத்துக்களாகக் கொண்டனர். அந்தந்த மொழிக்கு உரிய முதலொலிகளை (phonemes) மட்டும் ஆராய்ந்து அவற்றிற்கு ஏற்ற வரி வடிவங்களை அமைத்துக்கொண்ட முறை இந்திய நாட்டு மொழிகளில் காணப்படும் சிறப்பாகும் என்று ஐரோப்பியரும் அமெரிக்கரும் பாராட்டுகின்றனர்.[2]

அந்தந்த மொழியின் முதலொலிகளை (phonemes) ஒட்டி எழுத்துமுறை அமைந்திருத்தல் இயற்கையாதலின், ஒரு மொழியை மற்றொரு மொழியின் எழுத்துக்களால்

---

1. Tamil is a language which illustrates particularly well the grouping of several quite distinct sounds into single phonemes. It is noteworthy that Tamil orthography does not show any difference between all these sounds. Those who originally invented this orthography must have had a clear conception of the phoneme idea, though the theory had never been formulated.—Daniel Jones, The Phoneme Its Nature and Use. p. 22.

2. Alphabetic writing in India approached phonemic perfection more closely than it ever did in Greece.
—Sturtevant, An Introduction to Linguistic Science, p. 16.

எழுத முடிவதில்லை. எழுத முயன்றால், பல ஒலிகளை உணர்த்த முடிவதில்லை. பிற மொழிகளை ஆராயும் வேட்கை வளர்ந்துள்ள இக்காலத்தில் அதற்கு ஒரு புது வழி காண வேண்டியதாயிற்று. உலக ஒலியெழுத்து (International Phonetic Alphabet) என்ற ஒரு முறை அமைத்து, அதில் பிறமொழிகளை எழுதும் வழக்கம் வளர்ந்துவருகிறது.

தமிழ்மக்கள் பேசும் பேச்சைத் தமிழிலே எழுதிக் காட்டுவதற்கும் தமிழ் எழுத்துக்கள் போதவில்லை.[1] இவ்வாறு எந்த மொழியிலும், பேச்சு மொழியை உள்ளவாறு எழுதிக்காட்ட அந்த மொழியின் எழுத்துக்கள் போதவில்லை. அதற்கும் மேற்குறித்த உலக ஒலியெழுத்தைக் கையாளவேண்டியுள்ளது.

அவன் வருகிறான்
அவள் வருகிறாள்
அவர்கள் வருகிறார்கள்

என்ற மூன்று வாக்கியங்களையும் பேச்சுத் தமிழில் ஒலிக்கக் கேட்டால், எழுத்தின் குறைபாடு விளங்கும்.

அவ வறா (அவன் வருகிறான்)
அவ் வறா (அவள் வருகிறாள்)
அவங்க வறாங்க } அவர்கள் வருகிறார்கள்
அவா வரா }

என ஒருவாறு எழுத முயன்றால், அவை உண்மையான பேச்சொலியைப் புலப்படுத்தவில்லை. கிளைமொழிகளை

---

1. மொழியாராய்ச்சி செய்பவர்கள் இலக்கிய மொழியை மட்டும் பெரிதும் போற்றி ஆராய்வதில் பயனில்லை என்பது இக்காலத்து மொழியியலார் கருத்து. இலக்கிய மொழி என்பது இறந்த உயிரினங்களின் எலும்பு முதலியவற்றைப் போன்றது என்றும், பேச்சு மொழியே உண்மையான மொழி என்றும் அறிஞர் கருதுவதால், பேச்சுமொழி யாராய்ச்சி இன்றியமையாததாக உள்ளது.

நுணுகி ஆராய்ந்து வேறுபாட்டைப் புலப்படுத்துவதிலும் இத்தகைய இடர்ப்பாடு உள்ளது. இவ்வகையில் உலக ஒலியெழுத்து ஓரளவு பயன்படுவதாக உள்ளது.

தொடக்கத்தில் மனிதன் ஒலித்தது சொற்றொடர்களையே ஆகும். அதன்பின் சொற்களைப் பிரித்துணரும் நிலைக்கு மனிதன் நாகரிகப் படியில் ஏறி நின்றது பல்லாயிர ஆண்டுகளுக்குப் பிறகே ஆகும். அதற்கு அடுத்தபடியாக அவன் மொழித்துறையில் உயர்ந்து நின்றது, அந்தச் சொற்களை முன்னர் உருவங்களாகவும் பின்னர்க் குறிகளாகவும் எழுதிய காலத்திலாகும். சொற்களை எழுதப் பழகித் தேர்ந்தபிறகே, சொற்களில் உள்ள ஒலிகளைப் பாகுபாடு செய்து தனித்தனியே குறிக்கக் கற்றான். ஆகவே, எழுத்துமுறை தோன்றி வளர்ந்த பிறகே, ஒலிகளைப் பாகுபாடு செய்யும் முறை தோன்றியது. உயிரெழுத்து, மெய்யெழுத்து, குற்றெழுத்து, நெட்டெழுத்து என ஒலியை எழுத்து என்றே குறிப்பிட்டதும் அக்காரணத்தாலேயே ஆகும்.



## உ. உயிரொலிகள்

### குறியீடுகள்

தமிழிலக்கண நூல்களில் உயிரெழுத்து என்றும் மெய்யெழுத்து என்றும் குறியீடுகள் வழங்குகின்றன. உயிர், மெய் என்னும் பெயர்கள் சிறந்த காரணம் பற்றி அமைந்துள்ளன. தனித்தியங்கும் ஆற்றலை உயிர் என்ற பெயரும், உயிருடன் கூடியே இயங்கும் இயல்பை மெய் (உடம்பு) என்ற பெயரும் தெரிவிக்கின்றன. உடலும் உயிரும் போல இரண்டும் கூடி இயங்குதலின் உயிர்மெய் என்ற பெயரும் பொருத்தமாக அமைந்துள்ளது. தனித்த தோர் தன்மையின்றிச் சார்ந்துவருதலே தமக்கு இயல்பாக உடைய எழுத்துக்கள் மூன்றனைச் சார்பெழுத்து என்பர் தொல்காப்பியனார்.[1] அவை குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்பர்.

### பிறப்பும் பாகுபாடும்

ஒலிநூலாரின் கொள்கைப்படி, உள்ளிருந்தெழும் மூச்சு மிடற்றின் முயற்சியால் வாயின் வழியாகத் தடையின்றி வெளிப்படும்போது உயிரொலிகள் பிறப்பனவாம். மிடற்றின் முயற்சியால் பிறக்கும் ஒலிகள் அ, வ், முதலியன (voiced sounds). மிடற்றின் முயற்சியின்றிப் பிறக்கும் ஒலிகள், ப் த் முதலியன (voiceless or breathed

1. அவைதாம்
குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன
—தொல். எழுத்து. உ.

sounds).[1] அவ்வாறு வெளிவரும் மூச்சு வாயில் தடைப்படின் மெய்யொலிகள் பிறக்கும். வாயில் தடையின்றி வெளிப்படின் உயிரொலிகளாம்.[2] இந்த உயிரொலிகள், பிறக்கும் முயற்சி வகையால் பல்வேறு வகைப்படும். தொல்காப்பியனர் பிறப்பியலில் கூறுமாறு பிறப்பிடமும் முயற்சியும் பலவாகும்.

[ உந்தி முதலா முந்துவளி தோன்றித்
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇப்
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புற் றமைய நெறிப்பட நாடி
எல்லா எழுத்தும் சொல்லுங் காலைப்
பிறப்பின் ஆக்கம் வேறுவே றியல.[3] ]

இவ்வகை உறுப்புக்களின் வேறுபட்ட முயற்சியாலேயே ஒலி பல்வேறு வகையாகப் பகுத்தறியக் கிடக்கின்றது.

[ அடிப்படையான உயிரொலிகள் மூன்றே என்பர். அம்மூன்று அ, இ, உ என்பன. அம்மூன்றும் உயிரொலி

1. When the vocal chords are wide apart (i. e. when the glottis is open) and air passes between them, the sound produced is called *breath*; when they are drawn together and air is forced between them so that they vibrate, the sound produced is called *voice*...Every speech sound contains either breath or voice. Those which contain breath are called breathed or voiceless sounds; and those which contain voice are called voiced sounds.—D. Jones, An Outline of English Phonetics. pp. 9, 10.

2. A vowel (in normal speech) is defined as a voiced sound in which the air has a free passage through the mouth and does not produce any audible friction. All other sounds (in normal speech) are called consonants. Ibid—p. 11.

3. தொல். எழுத்து. அ௩.

களும் பிறக்கும் நாநிலைகளை ஆராய்ந்தால் ஓர் உண்மை புலனாகும். அதாவது, நா அடியில் படிந்திருக்கும் நிலையில் அகரம் பிறத்தலும், முன் அண்ணம் நோக்கி மேலெழுங்கால் இகரம் பிறத்தலும், உண்ணாக்கை நோக்கி எழுங்கால் உகரம் பிறத்தலும் உணரப்படும். இப் பிறப்பிடங்களை ஒரு முக்கோணத்தின் மூலைகளுக்கு ஒப்பிடலாம். இதனை உயிர்முக்கோணம் (vowel triangle) என்றும், இம் மூன்று ஒலிகளே உயிரொலிகளுக்கு அடிப்படை என்றும் கூறுவர். சிவஞான முனிவரும் உயிரெழுத்துக்களின் முறைவைப்பை விளக்கும்போது இவ்வுண்மையைப் புலப்படுத்துகின்றார்.[1]

உயிரொலிகளின் பிறப்பைக் கூறும்போது தொல்காப்பியனார் இகரத்தோடு எகரத்தையும், உகரத்தோடு ஒகரத்தையும் சேர்த்துள்ளார்.[2] பிறப்பிடமும் முயற்சியும் பற்றி இகரத்தோடு எகரம் தொடர்புடையது; உகரத்தோடு ஒகரம் தொடர்புடையது. இத்தொடர்பு பற்றியே

---

1. இனி, உயிர்களுள், அ இ உ என்பன, முறையே அங்காந்து கூறு முயற்சியானும், அவ்வங்காப்போடு அண்பல்லடி நாவிளிம்புறக் கூறு முயற்சியாலும் அவ்வங்காப்போடு இதழ் குவித்துக் கூறு முயற்சியானும் பிறத்தலான், அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன-

—நன்னூல், எழுத்து. 73 விருத்தியுரை.

2. இஈ எஏ ஐ என இசைக்கும்
அப்பா லைந்தும் அவற்றோ ரன்ன
அவைதாம்
அண்பல் முதல்நா விளிம்புற லுடைய.

—தொல். எழுத்து. ௮௬.

உஊ ஒஓ ஔ என இசைக்கும்
அப்பால் ஐந்தும் இதழ்குவிந் தியலும்.

—தொல். எழுத்து. ௮௭.

யாப்பிலக்கணக்காரர் இவற்றை இனவெழுத்தாகக்கொண்டு மோனைத் தொடை கொள்வர்.[1]

இகரத்திற்கும் எகரத்திற்கும் உள்ள உறவைப் பின் வரும் சொற்கள் விளக்கும் :—

| | | | |
|---|---|---|---|
| எழுத்து மொழியில் | —இலை; | பேச்சு மொழியில் | —எலை |
| ,, | —இணை; | ,, | —எணை |
| ,, | —இழை; | ,, | —எழை |
| கன்னடத்தில் | —இலி; | தமிழில் | —எலி |
| தமிழில் | —சிதல்; | தெலுங்கில் | —செதலு |
| ,, | —சில; | கன்னடத்தில் | —கெலவு |

தமிழிலேயே: சிவந்து>சேந்து; இயலும்>எலும்.

உகரத்திற்கும் ஒகரத்திற்கும் உள்ள உறவை விளக்கும் சொற்கள் :—

| | | | |
|---|---|---|---|
| எழுத்து மொழியில் | —உலகம் : | பேச்சு மொழியில் | —ஒலகம் |
| ,, | —உரல்; | ,, | —ஒரல் |
| ,, | —உடம்பு; | ,, | —ஒடம்பு |
| ,, | —உயரம்; | ,, | —ஒயரம் |
| ,, | —உயர்த்தி; | ,, | —ஒசத்தி |
| ,, | —உவகை; | சில இடத்தில் | —ஓகை |
| தமிழில் | —உடல்; | தெலுங்கில் | —ஒள்ளு |

அகர இகரங்களுக்கு இடையே எகரம் பிறத்தலும், அகர உகரங்களுக்கு இடையே ஒகரம் பிறத்தலும் பற்றி ஒலிநூல் கூறும். இவ்வுண்மை தமிழ் இலக்கண நூலார்க்கும் உடன்பாடே.[2] அந்த முக்கோணத்தில், எகர ஒகரங்கள்

1. இகரம் ஈகாரம் எகரம் ஏகாரம் இவை தம்முள் இனமாம். உகர ஊகார ஒகர ஓகாரங்கள் தம்முள் இனமாம். —யாப்பருங்கல விருத்தி. 53.

2. எகரமாவது அகரக்கூறும் இகரக்கூறும் தம்முளொத் திசைத்து நரமடங்கல்போல் நிற்பதொன்றாகலானும், ஒகரமாவது அகரக்கூறும் உகரக்கூறும் தம்முளொத் திசைத்து அவ்வாறு நிற்பதொன்றாகலானும்...—நன்னூல், எழுத்து, 73 விருத்தியுரை.

பிறக்குமிடங்களை முறையே அகர இகரங்களுக்கும் அகர உகரங்களுக்கும் இடையே சுட்டுவர்.

நாவின் முன்னோக்கிய எழுச்சியால் இ ஈ எ, ஏ பிறத்தலால் அவற்றை முன்னண்ண உயிர் (front vowels) என வகுப்பர்.[1] அவ்வாறே உ ஊ, ஒ ஓ ஆகியவை நாவின் பின்னோக்கிய எழுச்சியால் பிறத்தல் பற்றி அவற்றைப் பின்னண்ண உயிர் (back vowels) என வகுப்பர்.

உ ஊ, ஒ ஓ ஆகியவற்றை ஒலிக்கும்போது இதழ் குவிதல்பற்றி அவற்றை இதழ்குவியுயிர் (rounded vowels) என்றும், ஏனையவற்றை இதழ்குவியாவுயிர் (unrounded vowels) என்றும் வகுப்பர்.[2]

அ இ உ எ ஒ என்னும் ஐந்தும் குறுகியொலிக்கும் போது குறில் எனவும், நீண்டு ஒலிக்கும்போது நெடில் எனவும் பெயர்பெறும். குறிலை ஒலித்தல் அருமையாகவும் நெடிலை ஒலித்தல் எளிமையாகவும் இருத்தல் பற்றி, அவற்றை அரியன என்றும் எளியன என்றும் (tense vowels, lax vowels) குறிப்பர்.

இப் பாகுபாடுகளுள், குறில், நெடில் என்பன அளவு (மாத்திரை) பற்றி ஏற்பட்டவை. ஏனையவை அவற்றின் பிறப்பிடம் பற்றியும் முயற்சி பற்றியும் ஏற்பட்டவை.

குறில் நெடில் வேறுபாடு தமிழ்மொழிக்கு இன்றியமையாதது. மற்றத் திராவிட மொழிகளிலும் இந்த

---

1. இஈ எஏ ஐஎன இசைக்கும்
அப்பால் ஐந்தும் அவற்றோ ரன்ன;
அவைதாம்
அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய.
—தொல். எழுத். 86.

2. உஊ ஒஓ ஔஎன இசைக்கும்
அப்பால் ஐந்தும் இதழ்குவிந் தியலும்.
—தொல். எழுத். 87.

வேறுபாடு இன்றியமையாததாகவே உள்ளது. வேறு வகை மொழிகள் சிலவற்றில், எடுத்துக்காட்டாக, பிரெஞ்சு மொழியில் உயிரொலிகளில் குறில் என்றும் நெடில் என்றும் செய்யும் வேறுபாடு அவ்வளவாகத் தேவை இல்லை. ஜெர்மன் மொழியில் தேவையாக உள்ளது. இத்தகைய தேவை எல்லாம் அந்தந்த மொழி வளர்ந்தமைந்துள்ள நிலையை ஒட்டியதே ஆகும். குறில் நெடில் வேறுபாடு இல்லாவிட்டாலும் பிரெஞ்சு மொழியில் சொற்களுக்குப் பொருள் தெளிவாக விளங்குகின்றது. ஜெர்மன் மொழியில் வேறுபாடு செய்யத் தவறின், எத்தனையோ சொற்களில் பொருள் தெளிவில்லாமல் குழப்பம் நேர்கின்றது. தமிழில் அல் - ஆல், பல் - பால், நில் - நீல், புண் - பூண், எங்கு - ஏங்கு, கொல் - கோல் முதலிய பல சொற்களின் பொருளுணர்ச்சிக்கு அடிப்படையாகக் குறில் நெடில் வேறுபாடு அமைந்துள்ளது. அதனால்தான் அது தமிழ் மொழிக்கு இன்றியமையாதது எனப் போற்றப்படுகின்றது. அக்காரணம் பற்றியே குறில்போலவே நெடிலும் தமிழில் முதலொலிகளாகக் (phonemes) கொள்ளப்படுகின்றன.

ஆங்கில மொழியில் உயிரொலிகளில் குறில் நெடில் வேறுபாடு தேவையில்லை என்றும், நன்கு அமையவில்லை என்றும் ஒலியியல் அறிஞர் டேனியல் ஜோன்ஸ் கருதுகிறார்.[1]

---

1. The custom of regarding certain vowels as long and certain others as short is, to say the least of it, unsatisfactory. The length of the long vowels is very variable and depends on a variety of circumstances; the so-called "short" vowels on the other hand are sometimes quite long, and no definite rules can be laid down for the use of the long forms.

—Daniel Jones, An Outline of English Phonetics. p. 109.

இவ்வாறு முதலில் மூன்றாக இருந்த உயிர்கள் ஐந்தாய் வளர்ந்து,[1] பிறகு குறுகியும் நீண்டும் ஒலித்தல் பற்றிப் பத்தாய்ப் பெருகின என்று கண்டோம்.[2] தமிழில் இவையே அல்லாமல், ஐ ஔ என இரண்டு உயிர்கள் உள்ளன. அவற்றை இலக்கண நூலார் சந்தியக்கரம் (diphthong) என்பர். அவை பற்றிப் பின்னர் ஆராய்வோம்.

சில உயிர்கள் சில மெய்யொலிகளை ஒட்டி ஒலிக்கும் தன்மை உடையன. இகரமும் உகரமும் இத்தன்மை உடையவை. அதனால்தான் இ என்றும் உ என்றும் தூய உயிரெழுத்துக்களாக அவற்றை ஒலிக்காமல், யி என்றும் வு என்றும் தவறாக ஒலிக்கக் கேட்கின்றோம். அவை யகர மெய் போலவும் வகரமெய் போலவும் ஒலித்தலால், யகரத்தோடும் வகரத்தோடும் அவற்றிற்கு உள்ள நெருங்கிய தொடர்பு புலனாகும்.[3]

---

1. The chief vowels of well-defined quality may be conveniently classed in five groups, known as vowels of the *i* type, vowels of the *e* type, vowels of the *a* type, vowels of the *o* type and vowels of the *u* type

—Daniel Jones, An Outline of English Phonetics, p. 16

2. ஆங்கிலத்தில் உயிரெழுத்துக்கள் a, e, i, o, u என்னும் ஐந்தே உள்ளன. ஆயின் உயிரொலிகள் பதினைந்து இன்றியமையாதனவாக உள்ளன. இவ்வாறே எல்லா மொழியிலும் ஒலிக்கப்படும் உயிரொலிகள் பலவாக இருந்தும், எழுதப்படும் உயிர் வடிவங்கள் சிலவாக உள்ளன. நுணுகி ஆராய்வார்க்கு ஐம்பதுக்கு மேற்பட்ட உயிரொலிகள் புலனாகும் என்று ஒலிநூலறிஞர் ஜோன்ஸ் கருதுகின்றார்.—Ibid, p. 15.

3. Semi-vowels are defined as vowels used in the capacity of consonants- They may also be defined as fricative consonants in which the friction is practically imperceptible. ......The consonantal character of a semi-vowel is due to the sudden increase of sonority when passing from it to the vowel.

ஒலிநூலார் கொள்கைப்படி யகரமும் வகரமும் அரையுயிர் (semi-vowels) எனப்படும்; உயிரோடொத்தன என்பது கருத்து. உயிரொலிகள் பிறக்கும்போது மூச்சு வாயின் வழியாகத் தடையின்றி வெளிவரும் என அறிந்தோம். அப்போது மிகச் சிறுதடை நிகழுமேல் யகரமோ வகரமோ பிறக்கும். இவை பிறக்கும்போது க ங முதலிய மெய்யெழுத்துக்களின் பிறப்பில் உள்ள அவ்வளவு பெருந்தடை இல்லாமை காணலாம். ஆதலால், இவற்றை உயிரொலிகளுக்கும் மெய்யொலிகளுக்கும் இடைப்பட்ட ஒலிகள் என்பது பொருந்தும். இடையினம் என்று முன்னோர் வகுத்த காரணம் இதுவாகவே இருத்தல் வேண்டும். வல்லினம் மெல்லினம் என்பவற்றிற்கு இடைப்பட்டவை இடையினம் என்று கூறுவது பொருந்தாமையும் ஈண்டுக் கருதலாம்.

யாப்பிலக்கணக்காரர் ய ர ல ழ என்னும் நான்கெழுத்துக்களும் ஆசெழுத்துக்கள் எனக் குறித்து, அவை எதுகைக்குரிய எழுத்துக்களுக்கு இடையே வரினும் எதுகையாகத் தடையில்லை என விதித்ததும் ஈண்டுக் கருதத்தக்கதே.[1]

The English sounds *w* and *y* are usually semi-vowels, being vowels of the *u* type and *i* type respectively, pronounced in such a way as to give to the ear the effect of consonants.- Daniel Jones, An Outline of English Phonetics, p. 64.

It is convenient to regard semi-vowels as consonants rather than as vowels, and to assign special symbols among them. Ibid. p. 12.

1. இனி ஆசிடை யெதுகைக்குச் சொல்லுமாறு :
யாலழ என்னும் ஈரிரண் டொற்றும்
வரன்முறை பிறழாது வந்திடை யுயிர்ப்பின்
ஆசிடை யெதுகைஎன் றறிந்தனர் கொளலே.
—யாப்பருங்கல விருத்தி - 37

உயிரொலிகள் சேர்ந்தொலிக்கும்போது பிறக்கும் உடம்படுமெய்கள் என முன்னோர் கொண்ட மெய் யகரம் வகரம் ஆகிய இரண்டு இடையின ஒலிகளே. இ ஈ ஐ என்னும் உயிர்களை அடுத்து யகர உடம்படுமெய்யும், மற்ற உயிர்களை அடுத்து வகர உடம்படுமெய்யும் வருதல் காண்கிறோம். இவ்வாறு இவை உடம்படுமெய்யாக வரும் முறையும் இவற்றின் இயல்பை விளக்குகின்றது.

மூக்கின உயிர் (Nasalisation or Euphonic Nunnation)

[1] இதுவரை ஆராய்ந்த உயிரொலிகள் எல்லாம் வாயின் வழியாக மூச்சு வெளிப்படுதலால் பிறந்தவையே. இவை பிறக்கும்போது பின்னண்ணம் (உண்ணாக்கை அடுத்த மேற்பகுதி) மேலெழுந்து நின்று மூக்கு வழியைத் தடுத்து நிற்கும். ஆதலால் மூச்சு மூக்கின் வழியாகச் செல்வதில்லை. சில சமயங்களில் பின்னண்ணம் அவ்வாறு தடுக்காமல் தாழ்ந்து வழிவிட்டு நிற்கும். அப்போது மூச்சின் ஒரு பகுதி வாய் வழியாகவும், மற்றொரு பகுதி மூக்கு வழியாகவும் செல்லும். அப்போது பிறக்கும் உயிரொலிகளை மூக்கின் உயிர் (Nasalised vowels) என்பர்.

| | |
|---|---|
| தமிழிலக்கியத்தில் | 'தொடு' |
| கன்னடத்தில் | 'தோடு' |
| இக்காலத் தமிழில் | 'தோண்டு' |
| பூடு> | பூண்டு |
| மோதிரம்> | மோந்திரம் |

1. Most sounds of speech are purely oral; the velum is completely raised and no breath escapes through the nose. If the velum is not completely raised, some of the breath escapes through the nose and the speech-sounds have a peculiar resonance; such sounds are called nasalized sounds.

—Bloomfield, Language, p. 96.

மக்கள் களைத்துள்ள நிலையிலும் இளைப்பாறும்போதும் இவ்வாறு மூக்கினமாக ஒலித்தல் உண்டு என்கிறார் புளூம்பீல்ட்.

திராவிட முதல் மொழியில் மர என்பதே சொல் என்றும், இறுதியுயிர் மூக்கினமாக மாறித் தமிழில் மரன் என்றும் மரம் என்றும் ஆயிற்று என்றும், தெலுங்கில் மரானு>ம்ரானு>மானு என ஆயிற்று என்றும் கூறலாம்.

| கன்னடம் | தமிழ் |
| --- | --- |
| இரடு | இரண்டு |
| இருவை | எறும்பு |
| கறு | கன்று |
| மூனு | மூன்று |

ஆங்கில மொழியில் உயிரொலிகளை இவ்வாறு மூக்கினமாக ஒலித்தல் குறைவு. ஒரு சில பகுதிகளில் மட்டுமே அவ்வாறு ஒலித்தல் உள்ளது.[1] பிரெஞ்சு மொழியில் மூக்கின உயிர்கள் மிகுதியாக உள்ளன. உயிரொலிகளை அடுத்து ம அல்லது ந பிரெஞ்சுச் சொற்களில் காணப்பட்டால், அந்த உயிரொலிகள் மூக்கினமாக ஒலிக்கப்படுபவை என்று உணரப்படும். அத்தகைய சொற்களில் ம அல்லது ந என்னும் மெய்களை ஒலிக்காமல் விட்டு, உயிரை மட்டும் மூக்கினமாக ஒலித்தல் வழக்கம்.[2]

1. Language, p. 96.

2. Nasalisation of vowels in English is either accidental or dialectical, and is generally a more or less negligible quantity as far as vowels are concerned. But there are many languages in which nasalisation plays a very important role.

In the so-called best pronunciation of French; orthographic *m* and *n* merely serve to indicate that the preceding vowel is nasalised, the consonants themselves being silent.

—G. Noel-Armfield, General Phontics, pp. 102—103.

பூ+துகள் — பூந்துகள்
தீ+பால் — தீம்பால்
சே+கன்று — சேங்கன்று

முதலான தமிழ்த் தொடர்களில் இடையில் மிகும் ந ம ங முதலான மெய்யொலிகள், அங்கு உயிரொலிகள் மூக்கின மாக ஒலித்தற்கு அறிகுறியாக உள்ளவை எனலாம். அந்த உயிர்களை ஒலிக்கும்போது, பின்னண்ணத்தைத் தாழ்த்தி மூக்குவழியை அடையாமலே, அடுத்து வரும் த ப க முத லான மெய்களை ஒலிக்க உறுப்புக்கள் விரைந்து முயல்கின் றன. அதனால் மூச்சு மூக்கின் வழியாக வெளியாகி, அந்த உயிர்கள் மூக்கினமாக ஒலிக்கப்படுகின்றன.

உயிரின் சிறப்பியல்புகள், திரிபுகள்

அ, ஆ: (Glottal vowels)

அ – குறில் ஆ—நெடில்

இரண்டு குறில் சேர்ந்ததே நெடில் என்கிறார் கால்டு வெல்.[1] ஆனால், அது தொல்காப்பியனார் முதலானோர் கருத்துக்கும் இக்காலத்து மொழிநூலறிஞர் கருத்துக்கும் மாறாக உள்ளது. நெடிலை ஒலிக்கும் முயற்சி வேறு குறிலுக்குரிய முயற்சி வேறு. அவற்றின் ஒலிப்பிறப்பே வேறுபாட்டை நன்கு தெரிவிக்கின்றது. அ-அ எனக் குறிலை இருமுறை ஒலிப்பதால் நெடில் பிறக்காததால் கால்டுவெல் கருத்துப் பொருந்தவில்லை.

உயிரொலிகளுள் அகரம் அடிக்கடி மாறுகின்றது; காரணம் அதனை ஒலித்தல் அருமையாக இருத்தலேயாகும். பல இடங்களில் அது எகரமாக மாறுகின்றது.

1. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 133.

(வடமொழி) ஜப < செபம் (தமிழில்)
(தமிழ்) சா (பகுதி) < செத்தான்

சகர மெய் அகரத்தோடுகூடி மொழிமுதல் ஆகாது என்பர் தொல்காப்பியனார். அது அவர்காலத்துத் தமிழின் இயல்பு. திராவிட மொழிகளில் சொற்களின் இறுதியில் நிற்கும் அகரம் திரிகின்றது.

| தமிழ் | தெலுங்கு | கன்னடம் | மலையாளம் |
|---|---|---|---|
| கடை | கட | கடெ | கட |
| கரை | கர | கரெ | கர |
| அவை | அவி | அவு | அவ |
| சில | | கெலவு | |
| தலை | தல | தலெ | தல |
| மலை | மல | மலெ | மல |
| மனை | | மனெ | மன |
| தோகை | தோக | சோகெ | தோக |
| நெருநை | நின்ன | நின்னெ | இன்னலெ |
| தந்தை | தண்ட்ரி | தந்தெ | தந்த |

ஆ, ஓ எனத் திரிகின்றது. அது பெரும்பாலும் மகரத்தை அடுத்து வரும்பொழுதே ஆகும். மகரம் இதழ் பற்றிப் பிறப்பதாகலால், ஆகாரம் இதழ் குவிந்து பிறக்கும் ஒகாரமாக மாறுகின்றது. இதுபோன்ற மாறுதல்களை இதழ்பற்றிய திரிபு (Labialisation) என்பர். மலையாளத்தில் அகரமும் இவ்வாறு மாறும் (கும்பம்>கும்பொம்). 'ஆ ஓ ஆகலும் செய்யுளுள் உரித்தே' எனத் தமிழிலக்கணம் குறிப்பதும் இதனையே. (வந்தாம்>வந்தோம். வருவாம்> வருவோம்.)

இ, ஈ: (Velar vowels)

இவை ஓரினம்.

(இகரம் எகரமாதல் முன்னர்க் கண்டோம்).

குற்றியலிகரம்

கேண்மியா, சென்மியா முதலான வழக்கிறந்த சொற்களில் மகரம் ஊர்ந்துவரும் இகரம் குற்றியலிகரம் எனப் படும். அதன் ஒலிஅளவு அரை மாத்திரை. குற்றிய லுகரம் யகர முதன்மொழியோடு புணரும்போது, குற்றிய லிகரமாக ஒலிக்கும். நாகியாது வரகியாது முதலிய தொடர்களில் குற்றியலிகரம் காண்க. இவற்றைப் பண் டைக் காலத்தில் எழுதும்போது புள்ளியிட்டு வேறுபடுத் தினர்.[1]

உ, ஊ : (Labial vowels)

இவை ஓரினம்.

(உகரம் ஒகரமாதல் முன்னர்க் கண்டோம்.)

குற்றியலுகரம்

குறிலாகிய உகரம் வேறு; சார்பொலியாகிய குற்றிய லுகரம் வேறு. இதுவே தொல்காப்பியனார் கருத்து. கால்டுவெல் அவ்வாறு கருதவில்லை. குறிலாகிய உகரம் உயிரொலிகளுள் மிக எளியது என்றும், நிலைபேறில்லாதது என்றும், இதுபற்றியே அது ஒலித்துணையாகப் பல சொற் களின் இறுதியில் ஒலிக்கப்படுகின்றது என்றும் அவர் கருதுகின்றார்.[2]

---

1. குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்
யாஎன் சினைமிசை உரையசைக் கிளவிக்கு
ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே.
புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே
உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்.
யகரம் வருவழி இகரம் குறுகும்
உகரக் கிளவி துவரத் தோன்றாது.
—தொல். எழுத்து க,உ, சக0.

2. Short *u* is of vowels the weakest and lightest, and is largely used, especially at the end of words, for euphonic purposes, or as help to enunciation.—Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 134.

தெலுங்கு மொழியில் ஒவ்வொரு சொல்லும் உயி ரீருகவே இருக்கவேண்டும் என்பது இலக்கணம். இயல்பாக உயிரீறு பெருத சொற்களின் இறுதியில் உகரம் சேர்க்கப் படுகிறது (கண்—கன்னு, மண்—மன்னு). புதுக் கன்ன டத்தில் இவ்விதி உள்ளது. அம்மொழியில் அகர ஈருக உள்ள சொற்களுக்கும் உகரம் சேர்க்கப்படுகின்றது, (சில>கெல>கெலவு. பல>பலவு).

தமிழில் வல்லின மெய்கள் ஈருக வரும்போது குற்றிய லுகரம் ஒலிக்கப்படும். வல்லின மெய்யினை மொழியிறுதி யில் ஒலித்தல் அருமையாதலால், இவ்விதி முற்றிலும் பொருத்தமானதே.

நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி ஈற்றும்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே

என்பது தொல்காப்பியம்.[1] இக்காலத்துப் பேச்சுமொழி யிலோ, மெல்லின இடையின ஈருக வரும் சொற்களிலும் குற்றியலுகரம் ஒலிக்கின்றது எனலாம் (மண்ணு, பொன்னு, கொள்ளு). 'சொல்லு' முதலிய சொற்கள் எழுத்து வழக்கிலும் உள்ளன.

இந்த இறுதியுகரம் ஐரோப்பிய மொழிகளில் இல்லாத ஒன்று. இது வடமொழி ஒலியமைப்பிலும் காணப்படா தது. 'வாக்' முதலான வடசொற்களும் தமிழில் புகும் போது இக்குற்றியலுகரம் பெறுகின்றன (வாக்>வாக்கு).

கால்டுவெல் கூறுமாறு இக்குற்றியலுகரம் ஒலித்துணை யாக (euphonic purpose) வருவது என்பதைவிட, முயற்சி எளிமை (economy of effort) காரணமாக வருவது என்பது மிகப் பொருத்தம். காட், நாட், பாக் என்பவற்றைவிடக்

1. தொல். எழுத்து. ௬௬.

காடு, நாடு, பாக்கு என்பவை ஒலிக்கும் முயற்சிக்கு எளியனவாக உள்ளன.

இக் குற்றியலுகரத்தின் ஒலியளவு (மாத்திரை) மிகக் குறுகியது என்றும், அரை மாத்திரை என்றும் இலக்கண நூலார் கூறுவர். நச்சினார்க்கினியர் என்னும் உரையாசிரியர் மற்றுமொரு வேறுபாடும் கூறுவர். உகரத்திற்கு உள்ள இதழ் குவிக்கும் முயற்சி குற்றியலுகரத்திற்கு இல்லை என்பர்.[1]

மலையாளத்தில், குற்றியலுகரம் நிற்றற்குரிய இடத்தில் அகர உயிர் நிற்பது உண்டு. குற்றியலுகரம் மலையாளத்திலும் உண்டு. அது சில சொற்களில் அரை மாத்திரையும் பெறுமல் வரும்போலும். அதனல் அதனை உகர வடிவிற்ருக எழுதாமல் அதற்குரிய மெய்யெழுத்தின்மேல் ஒரு புள்ளியோ சிறு வட்டமோ வரையப்படும். பண்டைத் தமிழிலும் குற்றியலுகரம் இக்காலத்தில் எழுதுவது போல் எழுதப்படாமல், புள்ளியிட்டு எழுதப்பட்டுவந்தது எனலாம்.

எ, ஏ, ஒ ஓ :

குற்றெழுத்துக்களாகிய எகரமும் ஒகரமும் வடமொழியில் இல்லை. ஆனல், அதன் இனமாகிய ஐரோப்பிய மொழிகளில் இருந்திருக்கின்றன. திராவிட மொழிகளில் அவை பெரு வழக்கின; திராவிட மொழிகளுக்கு மிக மிக இன்றியமையாதன.

திராவிட மொழிகளில் எகர ஒகரக் குறில்களுக்கும் அவற்றின் நெடில்களுக்கும் உள்ள வேறுபாடு ஒலிநயம் பற்றியோ, புணர்ச்சி வேறுபாடு பற்றியோ அமைந்தது அன்று. அடிச்சொற்கள் எனப்படும் பகுதிகளைப் பிரித்து

1. தொல். எழுத்து. சூ அ. நச்சினார்க்கினியர் உரை.

உணர்தற்கு இவ்வேறுபாடு வேண்டும். ஆதலின் இவ் வேறுபாடு மொழிக்கு அடிப்படையாக நிற்கின்றது :

தெள் — தெளிவு
தேள் — நச்சுப்பூச்சி
தொல் — பழமை
தோல் — உடல்மேலுள்ளது
கொல் வேறு; கோல் வேறு.
மென்மை வேறு; மேன்மை வேறு

ஐ - சந்தியக்கரம்

ஓர் உயிரை ஒலித்த பிறகு மற்றோர் உயிரினை ஒலிக்கும் பொருட்டு நா முதலிய உறுப்புக்கள் மாறும் இடைக் காலத்து மிடற்று முயற்சி (voice) சந்தியக்கரம் (diphthong) ஆக அமையும். எனவே, சந்தியக்கரம் என்பது இரண்டு உயிர்களின் கூட்டொலி அன்று; இரண்டன் கூட்டால் அமைந்த இரண்டுமல்லாத தனி யொலியாகும்.[1]

வடமொழியிலுள்ள ஐ சந்தியக்கரமாகும். தமிழி லுள்ள ஐ சந்தியக்கரமா என்பது ஐயுறக் கிடக்கின்றது. அது அகரவுயிரும் யகரமெய்யுமாக யாண்டும் கொள்ளத் தக்கதாக இருக்கின்றது.[2] உரைநடை, செய்யுள், பேச்சு எங்கும் இதைக் காணலாம்.

---

1. The term diphthong is applied to the emission of two vowel sounds in one and the same syllable with one and the same breath impulse, giving to the untrained ear the impression of single sound—G. Noel-Armfield, General Phonetics, p. 35.

2. ஐய்வனம் அய்வனம் என வரும் என உரையாசிரியர் கள் சான்று காட்டி,

அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்
(தொல். எழுத்து. ருு)

என்னும் சூத்திரத்தினை விளக்குதல் காண்க.

உரைநடை : ஐயர் — அய்யர்
செய்யுள் : கைவேல் — கய்வேல்
பேச்சு : கை — கய்

பனங்காடு (பனை + காடு, பனய் + காடு, பனங்காடு) முதலிய சொற்களின் புணர்ச்சியும், நாரை (நாரய்>நாராய்) முதலிய சொற்களில் விளிவேற்றுமையின் மாறுதல்களும், இக் கருத்தை வலியுறுத்துகின்றன.[1] ]

'இகர யகரம் இறுதி விரவும்' என்ற தொல்காப்பியச் சூத்திரத்திற்கு நாய்—நாஇ எனச் சான்று காட்டினர்

---

பேச்சுத் தமிழிலும் (எழுத்துத் தமிழிற் போலவே) ஐ என்பதை அய் எனவே ஒலித்தல் உள்ளது. ஆங்கிலத்தில் tax என்னும் சொல் taks என்றும், examine என்னும் சொல் egsamine என்றும் ஒலிக்கப்படுதலால், x மிகை என்று கருதுவர் புளூம்பீல்ட் (Language, p. 2). அன்றியும் x என்பது ஓர் எழுத்தே ஆயினும் ks அல்லது gs என இரண்டு முதலொலிகள் (phonemes) என்பர் அம்முறைப்படி நோக்கின், ஐ என்பது தமிழுக்கு மிகை என்றும், அது ஓர் ஒலி அன்று என்றும், அ - ய் என்னும் இரு முதலொலிகள் (phonemes) கொண்டது என்றும் கொள்ள நேரும்.

1. ஐகார வீற்றுப் பெயர்கள் விளியேற்கும் முறைமையை நோக்கினும், ஐ (முன்னிலை ஒருமைவிகுதி) என்பது அய் என்பதன் திரிபே என்பது போதரும். அன்னை—அன்னாய்; கிள்ளை—கிள்ளாய் என்னுமிடங்களில் ஐகாரம் ஆய் எனத் திரிந்துளது என்பது அமைதியன்று. தோன்றல்—தோன்றால்; மக்கள்—மக்காள் என்பவற்றில், லகர ளகர வீற்றுப் பெயர்களின் ஈற்றயல் அகரம் ஆகாரமாயிற்று என்பது போல, அன்னாய், கிள்ளாய் என்பவற்றிலும் யகர வீற்றுப் பெயரின் ஈற்றயல் அகரம் ஆகாரம் ஆயிற்று என்றலே முறைமையாகும். என்னெனின், ய, ல, ளக்கள் ஓரினங்களாகலின், அவ்வீற்று மொழிகளெல்லாம் விளிக்கண் ஒரே விதி பெறுதலே முறைமை என்க. இவ்வாறாயின், அன்னை என்பது அன்னய் என யகர வீறாகும். அதன் ஈற்று அய், ஆய் என நீண்டு விளிக்கண் வருதல் இயல்பே. இக்கூறியவற்றால், ஐ என்பது அய் என்பதன் திரிபே என்பது நன்கு விளங்கும்.

—வே. வேங்கடராசுலு ரெட்டியார், திராவிட மொழியின் மூவிடப் பெயர். ப. 52, 53.

இளம்பூரணர்[1] (பேரி என்பது பேரய் என்று திரிந்த திரிபிற்கு இலக்கணம் கூறுவது இச் சூத்திரம்.) தலய், தலஇ என்பன தலை என்னும் சொல்லின் வடிவங்களாகக் கருதப் பட்டன. அதன் காரணம் 'அகர இகரம் ஐகார மாகும்'[2] என்று சந்தியக்கரமும் உடன் கருதப்பட்டமையே ஆகும்.

டாக்டர் கால்டுவெல், அ இ என்னும் இரண்டும் ஐகார மாயின எனக் கொள்ளாமல், எகர இகரம் இரண்டும் ஐகார மாயின என்பர். தலை என்னும் சொல் தமிழில் தலெ என்று ஒலிக்கப்படும். மலையாளத்தில் தல என்று உள்ளது. கன்னடத்தில் தலெ என்று உள்ளது. எனவே, எ இ இரண்டும் சேர ஐகாரம் பிறந்தது எனக் கால்டுவெல் கூறுகிறார். வரிவடிவில் கிரந்தத்திலும் மலையாளத்திலும் இரண்டு எகரங்களால் ஐகாரத்தைக் குறித்தலும், தெலுங்கு கன்னடத்தில் எகர இகரங்கள் சேர்ந்த வடிவால் எழுது தலும் அவர் சான்றாகக் காட்டுவர்.[3] வரிவடிவு ஒலியின் உண்மையைப் புலப்படுத்தாது.[4] ஆதலின் இச்சான்று கொள்ளத்தக்கது அன்று.

ஔ - சந்தியக்கரம்:

'இது தமிழுக்கும் ஏனைய திராவிட மொழிகளுக்கும் உரியதோர் எழுத்து அன்று என்றும், வடமொழியைப் பின்பற்றி நுழைக்கப்பெற்றதே என்றும் கால்டுவெல்

1. தொல். எழுத்து. ௰௪.

2. தொல். எழுத்து. ௫அ.

3. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 133.

4. Our conventions of writing are a poor guide— Bloomfield, Language, p. 79.

முதலானோர் கருதுகின்றனர்.[1] வடசொற்களில் இது மிகுதியாக வழங்குகின்றது. ஔகாரம் உள்ள தமிழ்ச் சொற்கள் மிகச் சிலவே; அவையும் அகரஉயிரும் வகர மெய்யுமாக எழுத இடந்தருகின்றன.[2]

அவ்வை, அம்மை என்பதன் திரிபாதலால், ஔவை என்று எழுதும் முறை காலத்தால் பிந்தியது எனலாம். வௌவால் என்னும் சொல்லை வவ்வால் என்று எழுத இடம் உள்ளது; அது வாவல் என்னும் பழைய சொல்லின் திரிபே. அந்தச் சொல் வடிவத்தில், வாவுதல் என்னும் தொழிலின் காரணமாகப் பெயர் அமைந்த உண்மை புலனாகின்றது. 'சௌக்கியம்' முதலான வடசொற்களையும் 'சவுக்கியம்' முதலான வடிவுகளில் எழுதும் வழக்கும் காணலாம்.

---

1. Ibid. p. 136.

முன் ஐகாரத்திற்குக் கூறிய கருத்தையே இங்கும் கொள்க. முதலொலிகள் (Phonemes) பற்றிய கொள்கையின்படி, ஔ மிகை என்றும், அ-வ் என்னும் முதலொலிகளால் ஆயது என்றும் கொள்ள நேரும் (Bloomfield, Language, p. 82). ஆங்கில முதலிய ஐரோப்பிய மொழிகளில், முதலொலிகளை ஆராய்வோர் எழுதப் படும் முறையை நோக்காமல், ஒலிக்கப்படும் முறையை நோக்கி உண்மை காண்கின்றனர். key என்ற சொல் k-e-y என மூன்று எழுத்தாக இருப்பினும் ki (கீ) என்று ஒலிக்கப்படுதலால், இரண்டு முதலொலிகள் கொண்டது என்பர் அறிஞர். Sun, Son என்னும் இருசொற்களும் ஒரே வகையாக ஒலிக்கப்படுதலின் முத லொலிகளுள் வேறுபாடு இல்லை என்பர்.

2. "அகரத்தின் பின்னர் உகரமேயன்றி வகரப் புள்ளியும் ஔகாரம்போல வருமென்று கொள்க" என்று நச்சினார்க்கினியர் எழுதி, "ஔவை அவ்வை என வரும்" என மேற்கோளும் காட்டு கின்றார் (தொல். எழுத்து. ௬௬).

தொல்காப்பியனாரின் கருத்துப்படி அகரமும் உகரமும் சேர்ந்து ஔகாரம் அமைவதாகும்.

அகர உகரம் ஔகார மாகும். —தொல். எழுத். ௫௫

'சந்தியக்கரம் என்பது நெடிலைப் போல் இரண்டு மாத்திரை ஒலியளவு உடையதாகும்.[1] ஆயின், தமிழில் உள்ள ஐ ஔ என்னும் ஒலிகள் தம்மைச் சுட்டும் இடமும் அளபெடுக்கும் இடமும் தவிர மற்ற இடங்களில் ஒன்றரை மாத்திரையளவே ஒலிக்கின்றன;[2] அய் அவ் என்னும் கூட்டொலிகளின் அளவே (அ-ஒரு மாத்திரை; ய் அல்லது வ் அரைமாத்திரை; ஆக ஒன்றரை மாத்திரை) ஒலிக்கின்றன. எனவே, ஐ ஔ என்பவை அய் அவ் என்பவற்றின் வேறு அல்ல என்றும், சந்தியக்கரம் அல்ல என்றும் கருதுதற்கு இடம் உள்ளது.

உயிரளபெடை

செய்யுளில் இசைநீட்டம் வேண்டும்போது உயிரொலி நீண்டொலிக்கும். அப்போது அந்த நெட்டெழுத்தின் இனமான உயிர்க்குறில் அதனை அடுத்து எழுதப் பெறும் (ஆஅ, கோஒ என); இதனை உயிரளபெடை (உயிர் ஒலியளவின் நீட்டம்) என்பர்.

> 'நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
> கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்.'
> குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
> நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே.[3]

என்பன தொல்காப்பிய விதிகள்.

இவ்வாறு நெடிலும் குறிலும் அடுத்து வரும்போது அவ் வுயிர்களுக்கிடையே உடம்படுமெய் யகரமோ வகரமோ வாராது. காரணம், குறில் தனியொலியாக நில்லாது

1. The diphthongs are of the same length as the long vowels—Daniel Jones, An Outline of English Phonetics, p.104.
2. தற்சுட் டளபொழி ஐம்மூ வழியும்
   நையும்; ஔவும் முதலற் றுகும்.—நன்னூல், எழுத். ௬0.
3. தொல். எழுத்து. ௬, ௩௩.

முன்னின்ற நெட்டெழுத்தின் நீட்சியாகவே நிற்றலாம். ஆதலின்,

தெய்வந் தொழாஅள்.[1]

என நிற்கும்.

அளபெடை என்பது மற்ற மொழிகளின் இலக்கணத்தில் விளக்கப்படவில்லை. ஆயினும் மற்ற மொழிகளில் இல்லை என்று கூறல் பொருந்தாது. புளூம்பீல்ட் என்னும் அமெரிக்க அறிஞர் ஒலித்திரிபுகளை ஐவகையாகப் பாகுபாடு செய்து, அவற்றுள் முதலாவதாகக் கூறுவது இந்த அளபெடையே ஆகும். ஓர் ஒலியை அதற்கு உரிய கால அளவிற்கு (மாத்திரைக்கு) மேலும் நீட்டிப்பதே அத்தகைய திரிபு என்றும், அதை உணர்த்த வரிவடிவில் : என்னும் இருபுள்ளி இடப்பெறும் என்றும், சில மொழிகளில் அந்த உயிரெழுத்தையே மற்றொரு முறை எழுதுவது உண்டு என்றும் கூறி, ஜெர்மன், பின்னிஷ் முதலான மொழிகளை எடுத்துக்காட்டாகத் தந்துள்ளார்.[2]

உயிரொலியியைபு (Harmonic sequence of vowels) :

தானி + கு = தானிகி
ஆவு + னி = ஆவுனு

இவை இரண்டும் தெலுங்கு மொழியின் சொற்கள். (i) 'கு' என்னும் நான்கனுருபு 'கி' என்று திரிந்தது. காரணம் 'தானி' என்னும் சொல்லில் உள்ள இகரவுயிரின் ஆற்றலே. (ii) 'னி' என்னும் உருபு 'னு' என்று மாறிற்று. காரணம் 'ஆவு' என்னும் சொல்லில் உள்ள உகர உயிரின் ஆற்றலே. கத்திக்குப் பிடி இல்லை, பெட்டிக்குச் சாவி இல்லை என்ற வாக்கியங்களைப் பேசும்போது, கத்திக்கி

1. திருக்குறள். ௫௫.
2. Bloomfield, Language, p. 109.

பெட்டிக்கி என வாய் தவறி ஒலித்தல் இத்தகைய மாறு தலேயாகும்.

முன்னண்ண உயிராகிய இகரம், பின்னண்ண உயி ராகிய உகரம் என்னும் இரண்டு உயிர்களுக்கும் ஏனைய உயிரொலிகளேத் தம்போல் மாற்றும் ஆற்றல் உள்ளது. தெலுங்கில் உள்ளவாறு துளு மொழியிலும் ஓரளவு காணப்படுகின்றது. ஏனைய திராவிட மொழிகளில் இல்லே என்று கூறிவிட முடியாது. ஆயினும் தெலுங்கில்தான் பெருவழக்கிற்ருக உள்ளது.

இது துருக்கி, மங்கோலியம், பின்னிஷ் (Turkish, Mangolian, Finnish) முதலான சித்திய மொழிகளிலும் காணப்படுகிறது.[1] ஐரோப்பிய மொழிகளில் இல்லே.

மேற்கண்டவற்றில் நிலேமொழியின் உயிரொலிக்கு ஏற்ப, வரும் உயிர்களும் மாறி அமைகின்றன. பெயர்ச் சொல்லில் உள்ள உயிர் அவ்வாறு மாறுதலேக் கண்டோம். அன்றியும், சேர்க்கப்படும் இடைச்சொல்லின் உயிர், பெயர்ச் சொல்லின் உயிரொலியை மாற்றியமைத்தலும் உண்டு.

கத்தி - பெயர்ச்சொல்

லு - தெலுங்கில் பன்மை உணர்த்தும் இடைச்சொல்.

கத்தி + லு = கத்திலு என்ருே கத்திலி என்ருே ஆகாமல் கத்துலு என்ருகும்.

1. Some languages have the peculiar restriction, known as vowel-harmony, of tolerating only certain combinations of vowels in the successive syllables of a word. Thus in Turkish, the vowels of a word are either all front vowels (i, y, e, o) as in sevildiremememek (not to be able to cause to be loved) or all back vowels (i, u, a, o) as in jazildiramamak (not to be able to cause to be written),—Bloomfield. Language, p. 181.

கத்தி + கு = கத்திகி என்றுவது கண்டோம்.

ஆனால், கத்தி + லு + கு = கத்துலுகு என்றாகும்.

ஒவ்வொரு சொல்லையும் ஒலிக்கும்போது, அதன் பல ஒலிகளையும் (உயிர்களையும் மெய்களையும்) ஒலிப்பதற்கு மூளை கட்டளையிடுகின்றது; அதன் கட்டளைக்கு இணங்கி நா முதலிய உறுப்புக்கள் ஒலிக்கின்றன. ஓர் ஒலியை ஒலிக்குமாறு உறுப்புக்களுக்குக் கட்டளை அனுப்பும் மூளை எக்காரணத்தாலோ அதற்கு முந்திய ஒலியையோ அல்லது அடுத்துவரும் ஒலியையோ நினைந்துவிடுமானால், அந்தச் சொல் அப்போது திரிபடையும். அல்லது, தவறு இன்றி மூளை ஏவியபோதும், ஒலிக்கும் நா முதலியவை உரிய முயற்சியைச் செய்யாமல் தடுமாறி, முந்திய ஒலி அல்லது அடுத்த ஒலிக்கு உரிய நிலையில் நிற்குமானால், அப்போதும் சொல்லின் ஒலியுருவம் மாறுதலடையும். தானிகு என்பதில் முந்திய ஒலியாகிய இகரத்தின் செல்வாக்கால் கு-உருபு கி எனத் திரியும். கத்திலு என்பதில் அடுத்து வரும் ஒலியாகிய உகரத்தின் செல்வாக்கால் கத்தி என்பதன் இகரம் உகரமாகத் திரியும்.

தண்ட்ரி + லு < தண்ட்ருலு
தல்லி + லு < தல்லுலு
பனி + லு < பனுலு

எனத் தெலுங்கு மொழியில் பலசொற்களில் இத் திரிபைக் காணலாம்.

அன்றி இன்றி என்பவை தமிழில் வினையெச்சங்கள். அவற்றின் இறுதியில் உள்ள இகரம் சில இடங்களில் உகரமாகத் திரிதல் உண்டு என்று இலக்கணம் கூறும்.[1]

---

1. அன்றி இன்றிஎன் வினையெஞ் சிகரம்
தொடர்பினுள் உகரம் ஆய்வரின் இயல்பே.
—நன்னூல். ௧௭௬.

நாளன்றி + போகி—நாளன்றுபோகி
பதனன்றி + புக்கு—பதனன்றுபுக்கு
அது + அன்றி—அதாஅன்று.

இவ்வாறு பழந்தமிழில் காணப்படும் திரிபுகள் இத்தகைய மாறுதலாகக் கொள்ளப்படும். அடுத்துள்ள சொல்லின் உயிர் உகரத்தின் இனமாதலின், இவற்றின் இறுதி இகரம் உகரமாகத் திரிந்தது.)

உயிர் இடம்பெயரல் : (Euphonic displacement of vowels)

மூன்று உயிரொலிகளைக் கொண்ட உயிர்முதன் மொழியாக வரும் தெலுங்குச் சொற்களில் ஒரு புதுமை யான முறையில் உயிரொலி இடம் பெயர்ந்து நிற்கக் காண்கின்றோம்.

(அவர்>) அவரு > அ + வ் + ரு > வ் + அ + ரு
> வ் + ஆ + ரு > வாரு
இவரு > இ + வ் + ரு > வ் + இ + ரு
> வ் + ஈ + ரு > வீரு

அதி, இதி முதலான சொற்களிலும் மற்றோர் இடைச் சொல் சேர்ந்து உயிரொலி மூன்றாகும்போது இம்மாறுதல் காணப்படுகின்றது.

அதி + னி > அதினி > தானி
இதி + னி > இதினி > தீனி

இவற்றில் காணும் மாறுதல் என்ன ? முதலில் உள்ள உயிர் இரண்டாமிடத்திற்குப் பெயர்ந்து சென்று,

---

இன்றி என்னும் வினையெஞ் சிறுதி
நின்ற இகரம் உகர மாதல்
தொன்றியல் மருங்கின் செய்யுளுள் உரித்தே.
—தொல். எழுத். உஉள.

1. புறநானூறு, 124.

அங்குள்ள உயிரைக் கெடுத்து, அதற்கு ஈடாக நீண்டு நிற்றலே இம் மாறுதலாகும்.

மேற்காட்டிய எடுத்துக்காட்டுக்கள் அனைத்தும் சுட்டுப் பெயர்களேயாம். கீழ்வருவன ஏனைப் பெயர்களாம்:

உரல் > உரலு > ஒரலு > ரோலு
உகிர் > உகிரு > ஒகிரு > கோரு

இத்தகைய மாறுதல் நிகழும் சொற்களை ஆராயுமிடத்து இடையிலுள்ள மெய் ர, ல, வ என இடையின மெய்களாகவே பெரும்பாலும் இருக்கக் காண்கிறோம். அவற்றின் திட்பமின்மையே இம் மாறுதலுக்குக் காரணம் எனலாம்.

இவ்வொலி மாறும் விதியின் உண்மையை உணர்ந்த பின், பல தெலுங்குச் சொற்கள் இவ்வாறு உயிர் பெயர்ந்து திரிந்த திரிபுகளாக இருத்தல் புலனாகின்றது.

தமிழில் — ஆகாது > காது - தெலுங்கில்
தமிழில் — இலது > எலது > லேது - தெலுங்கில்
தமிழில் — உள் > ஒல் > லோ - தெலுங்கில்
(அதனுள் > தானிலோ)

தமிழில் உவகை என்னும் சொல் ஒகை எனத் திரிதல் இதுபோன்றதே ஆகும்.

உயிர் நீட்சி: (Compensatory lengthening of vowel)

சில சொற்களில் மெய்யெழுத்து ஒன்று கெடின், அந்த இழப்புக்கு ஈடுசெய்யும் பொருட்டு அதற்குமுன் உள்ள உயிர் நீண்டு ஒலிக்கும்.[1]

---

1. The weakening or loss of consonants is sometimes accompanied by compensatory lengthening of a preceding vowel.—Bloomfield, p. 379.

பகல் (பகுத்தல்) > ப(க)ல் > பால் (இலக்கியத்தமிழ்)
மிகுதி>மி(கு)தி> மீதி
பகுதி>ப(கு)தி > பாதி

உடம்படுமெய்: (Prevention of hiatus)

வடமொழியில் பெரும்பாலும் நிலைமொழியிலும் வருமொழியிலும் உள்ள இர்ண்டுயிரும் ஒன்று சேர்ந்து ஒருயிராக மாறி ஒலிக்கும். ஐரோப்பிய மொழிகள் பலவற்றில் இவ்வாறு ஓர் உயிர் அடுத்துவரும் உயிரோடு இணைந்து ஒன்றுபடல் (assimilation of vowels) உண்டு. அதனால் இரண்டு உயிரொலிகளுக்கு இடையே நேரும் விட்டிசை (hiatus) தடுக்கப்படுகிறது. தமிழில் அது மிகச் சில சொற்களில் மட்டும் உள்ளது.

வடமொழியில் : மட + அதிபதி > மடாதிபதி
தமிழில்:

சிறுபான்மை : பரு + அரை > பராரை
பெரும்பான்மை: சில + அணி > சிலவணி

ஒலிக்கும் முயற்சியை எளிதாக்க வேண்டியும், பகுதி முதலியவற்றைத் தெளிவாகக் காக்க வேண்டியும், தமிழ் முதலாய திராவிட மொழிகளில் எல்லா உயிரொலியும் தனித்தனியே தெளிவாக ஒலிக்கப்படுகின்றன. ஆயினும், உயிரொலி இரண்டு விட்டிசைத்தால் ஒலிக்கும் முயற்சி அரிதாகுமாதலின், அது நேராதவாறு, இரண்டுயிர்க்கும் இடையே (உயிரோடொத்த இடையினமாகிய) யகரமோ வகரமோ சேர்ந்து ஒலித்தல் வழக்கமாயிற்று. அந்த யகரம் அல்லது வகரத்திற்கு உடம்படுமெய் என்பது பெயர்.

பல + அரசர்      மணி + அழகு

இஈ ஐவழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுன்இவ் இருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்[1]

என்ற விதியால் எங்கெங்கு யகரம் வரும், எங்கெங்கு வகரம் வரும் என்பது அறியப்படும். சிறுபான்மை மாறாக வரும் இடமும் உண்டு (ஆயிடை, கோயில் முதலியன). யகர வகரமாகிய இவ்விரு மெய்களையும் ஒலி நூலார் அரையுயிர் (semi-vowels) என்பர். அவை உயிரிடையே வரும் மெய்யா தற்கு உற்ற தகுதியை அது புலப்படுத்துகிறது.

தெலுங்கில் 'ன்' உடம்படுமெய்யாக உள்ளது என்றும், தமிழிலும் பொருளன, காட்டின முதலிய சொற்கள் பொருளவ, காட்டிய என்பவற்றோடொத்தவை என்றும் கூறுவர் கால்டுவெல்.[2] அந்த னகரம் அன், இன் என்னும் சாரியைகளில் உள்ள மெய்யேயாகும்; உடம்படு மெய் அன்று.

தெலுங்கில் மகரமும் உடம்படுமெய் என்பர். அது வகரத்தின் திரிபே. (வகரம் மகரமாதல் ஒலி நூலார்க்கு உடன்பாடு. தமிழிலும் 'என்னவோ' என்பதை 'என்னமோ என்று ஒலித்தல் காண்க.)

கால்டுவெல், 'காரும்' என்ற சொல்லில் ரகரம் உடம்படுமெய் என்பர் (கா + உம் > காரும்). தெலுங் கில்,

1. நன்னூல் எழுத்து. கசுஉ.
தொல்காப்பியனார் இவ்வாறு வரையறை செய்யாது பொது வாக விதித்தார்.

எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருவுகொளல் வரையார்.
—தொல். எழுத்து. கசய

2. A Comparative Grammar of the Dravidian Languages, p. 177.

பொத + இல்லு > பொதரில்லு (இலைவீடு)

என்றாகும். தெலுங்கில் சில இடங்களில் ககரம் உடம்படு மெய்யாம்:

பத + ஒண்டு > பதகொண்டு (பதினொன்று)
அறவர் (தமிழ்) > ஆறுகுரு (தெலுங்கு)

'கூ' முதலான இலக்கிய வளமற்ற மொழிகளிலும் உடம்படுமெய் புணரும் இம்முறை அமைந்துள்ளது.

விட்டிசையை(hiatus)த் தடுப்பதில் திராவிடமொழி களுக்கு உள்ள இயல்பையும் ஒலிநய உணர்வையும் இதனல் அறியலாம்.

—

## ௩. மெய்யெழுத்துக்கள்

பாகுபாடு

தமிழிலக்கண நூலார் மெய்யொலிகளை வல்லினம் மெல்லினம், இடையினம் என வகுப்பர்.

வல்லினம்—க ச ட த ப ற (Surds)
மெல்லினம்—ங ஞ ண ந ம ன (Nasals)
இடையினம்—ய ர ல வ ழ ள (Liquids)

வல்லினம் மார்பையும், மெல்லினம் மூக்கையும், இடையினம் மிடற்றையும் இடமாகக் கொண்டு பிறப்பன என்பது அவர்களின் கருத்து.[1]

ஒலிநூலார் மெய்களைப் பாகுபாடு செய்யும்போது, ஒலிக்கும் கருவிகளாகிய இதழ், பல், அண்ணம் முதலியவற்றால் பிறத்தலை ஒட்டிப் பகுப்பர்.[2] அம்முறைப்படி தமிழ் மெய்யெழுத்துக்களின் பாகுபாடு வருமாறு :—

---

1. அவ்வழி
ஆவி இடைமை இடம்மிட றாகும்
மேவும் மென்மை மூக்(கு) உரம்பெறும் வன்மை.
—நன்னூல், எழுத்து. ௭௫.

2. Apart from the division into the two groups "breathed" and "voiced" consonants may be classified (i) according to the organs which articulate them, (ii) according to the manner in which the organs articulate them.

If we classify them according to the organs which articulate them, we distinguish six main classes :

I. Labial or lip sounds.

II. Dental sounds, viz., sounds articulated by the tip or blade of the tongue against the upper teeth or teeth ridge.

III. Palatal sounds, viz., sounds articulated by the front of the tongue against the hard palate.

IV. Velar sounds, viz:, sounds articulated by the back of the tongue against the soft palate.

இதழினம்: ப ம வ (Labials)
நுனிநாப் பல்லினம்: த ந (Dentals or alveolars or gingivals)
இடைநா முன்னண்ணவினம்: ச ஞ ய ர ல ற ன (Palatals)
அடிநாப் பின்னண்ணவினம்: க ங (Velar)
மடிநா இடையண்ணவினம்: ட ண ள ழ (Cacuminal and retroflex)

தொல்காப்பியனார் இவற்றின் பிறப்புப் பற்றிக் கூறுவது இப்பாகுபாட்டுக்கு இயைந்ததாக உள்ளது. அவர் கூறுமாறு :—

க ங — அடிநாவும் அண்ணமும் உறுதல்
ச ஞ — இடைநாவும் அண்ணமும் உறுதல்
ட ண — நுனிநாவும் அண்ணமும் உறுதல்
த ந — நாநுனி அண்பல்லினடியை ஒற்றல்
ற ன — நாநுனி அண்ணம் ஒற்றல்
ர ழ — நாநுனி அண்ணம் வருடல்
ல — நாவிளிம்பு வீங்கி அண்பல்லினடியை ஒற்றல்
ள — நாவிளிம்பு வீங்கி அண்பல்லினடியை வருடல்
ப ம — மேலிதழும் கீழிதழும் இயைதல்
வ — மேற்பல்லும் கீழிதழும் இயைதல்
ய — மிடற்றுவளி அண்ணம் கண்ணுறல்.[1]

---

V. Uvular sounds, viz., sounds articulated by the back of the tongue and the extremity of the soft palate or the uvula.

VI. Glottal or laryngeal sounds, viz., sounds articulated in the glottis.—D. Jones; An Outline of English Phonetics, pp. 13, 14.

1. ககார ஙகாரம் முதல்நா அண்ணம். —தொல். எழுத்து. அக
சகார ஞகாரம் இடைநா அண்ணம். ,, க0
டகார ணகாரம் நுனிநா அண்ணம். ,, கக
அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின்
நாநுனி பரந்து மெய்யுற ஒற்றத்
தாமினிது பிறக்கும் தகார நகாரம். ,, கஉ

இப்பாகுபாடு பற்றிச் சிறிது கருத்து வேறுபாடும் உளது. ஆயினும், மிகப் பழங்காலத்தில் தமிழொலிகளை ஆராய்ந்து திட்பநுட்பமாக விளக்கிய தொல்காப்பியனாரின் திறன் வியக்கத்தக்கதாக உள்ளது.

தொல்காப்பியனாரின் விளக்கத்தின்படி, மெய்யெழுத்துக்களுள் ப ம வ இதழால் பிறப்பவை. த ந ல ள என்பவை நா அண்ணத்தில் பல்லடியை உறுதலால் பிறப்பவை. மற்றப் பதினொன்றும் நாவும் அண்ணமும் (மேல்வாய்ப் பகுதியும்) ஒவ்வொரு வகையில் ஒவ்வோரிடத்தில் உறுதலால் பிறப்பவை. அவற்றுள் அண்ணத்தின் முன்பகுதியில் நா உறுதலால் பிறப்பவை ச ஞ ய ர ற ன என்னும் ஆறுமாகும். அண்ணத்தின் இடைப்பகுதியில் அல்லது இன்னும் சிறிது பின் சென்று நா உறுதலால் பிறப்பவை ட ண ழ என்னும் மூன்றும். அண்ணத்தின் பின் பகுதியில் (உண்ணாக்கை அடுத்த மேற்புறமாகிய மென்மையான பகுதியில்) நா உறுதலால் பிறப்பவை க ங என்னும் இரண்டும். ஆக, அவர் கருத்துப்படி நா உறும் இடம் நோக்கி மெய்யெழுத்துக்களைப் பின்வருமாறு பாகுபாடு செய்யலாம் :—



---

அணரி நுனிநா அண்ணம் ஒற்ற
றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும்.
—தொல் எழுத்து. ௯௪

நுனிநா அணரி அண்ணம் வருட
ரகார ழகாரம் ஆயிரண்டும் பிறக்கும். ,, ௯௫
நாவிளிம்பு வீங்கி அண்பல் முதலுற
ஆவயின் அண்ணம் ஒற்றவும் வருடவும்
லகார ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும். ,, ௯௬
இதழியைந்து பிறக்கும் பகார மகாரம். ,, ௯௭
பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும். ,, ௯௮
அண்ணம் சேர்ந்த மிடற்றெழு வளியிசை
கண்ணுற் றடைய யகரம் பிறக்கும். ,, ௯௯

ப ம—நா உருமலே இதழால் பிறப்பவை (labials).

வ—மேற்பல்லும் கீழிதழும் உறப்பிறப்பது (labio-dental)

த ந—நா பல்லினடியை (அண்ணத்தின் முன்முனையை) உறுதலால் பிறப்பவை (dentals).

ல ள—ஏறக்குறைய மேற்கூறியவாறு பிறப்பவை.

ச ஞ ய ர ற ன—நா முன்னண்ணத்தை உறுதலால் பிறப்பவை (prepalatals and palatals).

ட ண ழ—நா மடிந்து அதன் பிற்பகுதி இடையண்ணத்தை உறுதலால் பிறப்பவை (retroflex).

க ங—நா பின்னண்ணத்தை உறுதலால் பிறப்பவை (velar).

ஒலிநூலார் இன்றைய தமிழ்மக்கள் பேசும் மொழியில் உள்ள ஒலிகளைக் கொண்டே ஆராய்கின்றனர். தொல்காப்பியனார் காலத்துத் தமிழ்மக்கள் எவ்வாறு ஒலித்தனர் என்பதை அறிவதற்கு வழி இல்லை. ஆகவே, இன்றைய பேச்சுத் தமிழைக்கொண்டு ஆராயும் ஒலிநூலார் சில வேறுபாடுகளைக் கண்டுள்ளனர். அவ் வேறுபாடுகளாவன:

✓ ந ன—பிறப்பிடத்தில் அவ்வளவாக வேறுபாடு இல்லை. இவை ஒரே ஒலியைக் குறித்திடும் இருவேறு எழுத்துக்கள் என்பர்.

✓ ல ள—நா, பல்லினடியை உறுதல் இல்லை. முறையே முன்னண்ணத்தையும் இடையண்ணத்தையும் உறுதல் உண்டு.

✓ ர ற—பிறப்பிடத்தில் அவ்வளவாக வேறுபாடு இல்லை. றகரம் இரட்டித்து வருமிடத்தில் ட்ர என்பது போல ஒலிக்கிறது; பேச்சுத் தமிழில் ற்ற என்பது த்த என ஒலிக்கப்படுகிறது. ஆகவே ர ற என்பவை ஒரே ஒலியைக் குறிக்கும் இரு வேறு எழுத்துக்களாகவே இன்றைய பேச்சில் உள்ளன என்பர்.

இனி நாவின் முயற்சி நோக்கித் தொல்காப்பியனார் செய்யும் பாகுபாட்டையும் ஒலிநூலார் செய்யும் பாகுபாட்டையும் ஆராய்வோம். தொல்காப்பியனாரின் விளக்கம் வருமாறு :—

க ங—அடி நாவின் முயற்சி
ச ஞ—இடை நாவின் முயற்சி
ட ண த ந ற ன ர ழ ல ள—நுனி நாவின் முயற்சி
(apical consonants)
(ப ம வ ய—நா முயற்சி இல்லாதவை)

இன்றைய பேச்சொலியை ஆராய்ந்து கூறும் ஒலி நூலார் வேறுபடும் இடங்களாவன —

ய—இடைநாவின் முயற்சி தேவை. ஆதலின் ச ஞ என்பவற்றோடு ஒருங்கு கருதத்தக்கது.
ல ள—தொல்காப்பியம் கூறுவதுபோல் நாவிளிம்பு வீங்குதல் இல்லை.

நுனி நாவின் முயற்சி பற்றி ஒலி நூலார் மேலும் ஆராய்ந்து சில நுண்ணிய விளக்கங்களைத் தந்துள்ளனர். அவர்களின் கருத்துப்படி, நுனிநாவின் முயற்சியைப்பெறும் ட ண த ந ற ன ர ழ ல ள என்னும் பத்து மெய்களுள் ற ன இரண்டனையும்விட்டு, ட ண த ந ர ழ ல ள என்னும் எட்டு மட்டும் கொள்ளப்படும். அந்த எட்டனையும், த ட; ந ண; ல ள; ர ழ என ஈரிரண்டாகப் பாகுபாடு செய்வர். இந்த இணைகளுள் முதலில் உள்ள த ந ல ர என்னும் நான்கும் ஐரோப்பிய மொழிகளுள் உள்ளன. ஆதலின் அவை ஒலி நூலார்க்குப் பழகியனவே. ஐரோப்பிய மொழிகளுள் இல்லாமல், இந்திய மொழிகளுள் மட்டும் உள்ள ட ண ள ழ என்பவை அவர்களுக்குப் புதியன. அவற்றுள்ளும் ட ண ள மற்ற இந்திய மொழிகளில் காணப் படுகின்றன. ழ மட்டும் தமிழிலும் மலையாளத்திலும் தவிர மற்ற இந்திய மொழிகளில் இல்லை. ஆதலின் ழகரம் பலர்க்கு மருட்சி தருகிறது. இனி அந்த எட்டனையும் பின்வருமாறு இணை இணையாக எழுதிக் காண்போம்.

த ந ல ர—ஐரோப்பியர் பழகியவை
ட ண ள ழ—பழகாதவை

இங்கிலேயில் ட ண ள என்னும் மூன்று மெய்களுக்கும் பெயரிட்டுப் பாகுபாடு செய்வது ஐரோப்பியர்க்குப் பெரிதும் தடுமாற்றம் ஆயிற்று. இவை மூளேயின் அடியிலிருந்து பிறக்கும் மூச்சால் ஒலிப்பவை என்று கூறும் வடமொழியிலக்கணத்தை ஒட்டித் தொடக்கத்தில் இவற்றிற்கு cerebrals என்று பெயரிட்டனர். நாளடைவில் இது தவறு என்பது புலனுகவே, வேறு பெயர் தேடினர். நா நுனி வாயின் உட்புறமாக வளேந்து ஒலிப்பதால் cacuminals என்றனர். மேலும் சிறிது வேறுபாடு காலப்போக்கில் விளங்கியது. நா நுனி அண்ணத்தைத் தொடுவதில் வேறுபாடு கண்டனர். இந்த ஆராய்ச்சிக்குப் புதுக் கருவிகளும் பயன்பட்டன. அவற்றைக்கொண்டு ஆராய்ந்தபோது, சில ஒலிகளில் நா நுனியின் முனே (the edge of the tip of the tongue) அண்ணத்தைத் தொடுதலேயும், வேறு சில ஒலிகளில் நா நுனியின் அடிப்பகுதி (underpart of the tip of the tongue) அண்ணத்தைத் தொடுதலேயும் கண்டனர். நா நுனி முனே உற்றுப் பிறப்பவற்றை cacuminal என்றும், நா நுனியடி உற்றுப் பிறப்பவற்றை retroflex என்றும் வழங்கினர்.

இவ்வளவு நுட்பமான ஆராய்ச்சியும் பாகுபாடும் ஏற்பட்ட பிறகும், தமிழின் சிறப்பெழுத்தாக உள்ள ழகரம் பற்றித் தெளிவு பிறக்காமலே இருந்தது. 1952 முதல் 1954 வரையில் செக் நாட்டுப் பிராக் நகரத்தில் ஆட்ல்ரிச் ஸ்வர்னி என்பவரும், கமில் சுவலெபில் என்பவரும் பல கருவிகள் கொண்டு ஒலியுறுப்புக்களேப் படம் எடுத்து ஆராய்ந்த ஆராய்ச்சியின் பயனுகத் தெளிவான தொரு கட்டுரை[1] 1955-ல் எழுதினர். அக் கட்டுரை இது

1 Some Remarks on the Articulation of the " cerebral' consonants in Indian Languages especially in Tamil- (Archiv Orientalni xxiii 1955).

வரை இருந்துவந்த ஐயத்தையும் தடுமாற்றத்தையும் போக்கியது எனலாம். அவர்களின் ஆராய்ச்சியின்படி,

த ந ல ர
ட ண ள ழ

ஆகிய யாவும் நாநுனி அண்ணத்தை உறுதலால் பிறப்பவை; ஆதலால், இவை நுனிநா ஒலிகள் (apical consonants) எனப்படும். இவற்றுள் ட ஒன்று மட்டுமே நாவளைந்து பின்சென்று நுனியின் முனையால் அண்ணத்தை உற்றுப் பிறப்பது (cacuminal). ண ள ழ ஆகிய மூன்றும் நாவளைந்து பின்சென்று அதன் அடிப்பகுதி அண்ணத்தை உற்றுப் பிறப்பவை (retroflex). ஆகவே, ட ண ள ழ ஆகிய நான்கும் மடிநா ஒலிகள் எனக் குறிப்பிடல் பொருந்தும். மேலும், அவர்களின் ஆராய்ச்சியால் மற்றொன்று புலனாகின்றது. ஒலிக்கும் முறையால், மேல் வரிசையில் உள்ள நான்கனுக்கும் கீழ்வரிசையில் உள்ள நான்கனோடு ஒற்றுமையும் உள்ளது; வேறுபாடும் உள்ளது.

ஒற்றுமை :—

த ட—இரண்டும் வாய்வழியே நேரே மூச்சு வெளிப்படப் பிறப்பவை (oral).

ந ண—இரண்டும் மூக்கு வழியே மூச்சு வெளிப்படப் பிறப்பவை (nasal).

ல ள—இரண்டும் மூச்சை நாவால் பிரித்து வெளிப்படுத்தப் பிறப்பவை (Lateral, liquid).

ர ழ—இரண்டும் ர்ர்ர், ழ்ழ்ழ் என்பனபோல் நாவின் பல சிறு அசைவுகளால் பிறப்பவை.

வேற்றுமை :—

தகரத்தை ஒலிப்பதைவிட டகரத்தை ஒலிப்பதில் நா உயர்ந்தும் பின்னோக்கியும் செல்கிறது.

நகரத்தை ஒலிப்பதைவிட ணகரத்தை ஒலிப்பதில் நா உயர்ந்தும் பின்னோக்கியும் செல்கிறது.

லகரத்தை ஒலிப்பதைவிட ளகரத்தை ஒலிப்பதில் நா உயர்ந்தும் பின்னோக்கியும் செல்கிறது.
ரகரத்தை ஒலிப்பதைவிட ழகரத்தை ஒலிப்பதில் நா உயர்ந்தும் பின்னோக்கியும் செல்கிறது.

ஆகவே,

த ந ல ர—தாழ் நாநுனி ஒலிகள் lower apical consonants)

ட ண ள ழ—உயர் நாநுனி ஒலிகள் (higher apical consonants)

எனப் பாகுபாடு செய்வர். இவ்வளவு விளக்கமும் பாகுபாடும் கிடைத்த பிறகே, ரகத்திற்கும் ழகரத்திற்கும் உள்ள உறவு புலனாகிறது.

மிகப் பழங்காலத்திலேயே தொல்காப்பியனார் ஒலி பிறக்கும் முறையை நுணுக்கமாக ஆராய்ந்து ரகரம் ழகரம் இரண்டனுக்கும் பொதுத்தன்மை இருத்தலை உணர்ந்து,

நுனிநா அணரி அண்ணம் வருட
ரகார ழகாரம் ஆயிரண்டும் பிறக்கும்

என்று ஓதியிருக்கும் திறன், இதனால் வியத்தற்குரியதாக விளங்குகிறது.

பழங்காலத்தில் தமிழரோடு வாணிபம் செய்து பழகிய கிரேக்கர் இந்த உண்மையை உணர்ந்து, சோழர் என்பதைச் 'சோர' என்றும், தமிழகம் என்பதைத் 'தமிரிகெ' என்றும் தம் மொழியில் எழுதியதும் ஈண்டுக் கருதத்தக்கது.

பொழுது > ப்ரொத்து (தெலுங்கு)
கூழ் > கூறு (துளு)
புழு > புரி (துளு), புருகு (தெலுங்கு)
எழுந்து > எர்பு (இலக்கியத்தமிழ்)

முதலிய சொற்களின் திரிபுகளும் இதற்குச் சான்றாக உள்ளன.

முழுகு > முணுகு (தெலுங்கு)
குழி > குணி (கன்னடம்)

முதலிய சில சொற்களில், மடிநா ஒலியாகிய ழகரம் மற்றொரு மடிநா ஒலியாகிய ணகரமாகத் திரிதலும் தமிழில் சில மாவட்டத்தாரின் பேச்சு மொழியில்,

வழக்கம் > வளக்கம்
கிழக்கு > கெளக்கு
தொழில் > தொளில்

என மற்றொரு மடிநா ஒலியாகிய ளகரமாகத் திரிதலும்,

கோழி > கோடி (தெலுங்கு)
எழு > எடு ( ,, )
கூழு > கூடு ( ,, )

என்பவற்றில் இன்னொரு மடிநா ஒலியாகிய டகரமாகத் திரிதலும் காணின், ழகரம் ஒரு மடிநா ஒலி என்று கொள்வதன் பொருத்தம் தெளிவாகின்றது.

மெய்யெழுத்துக்களின் பிறப்பு முயற்சியை நோக்கியும் ஒலிநூலார் அவற்றைப் பாகுபாடு செய்வர். அம்முறை வருமாறு :—

1. வெடியினம்—க, ச, ட, த, ப (Plosives or Stops) (மூச்சுத் தடைப்பட்டு வெடிபோல் வெளியாதல்).
2. மூக்கினம்—ங, ஞ, ண, ந; ம, ன (Nasals) (மூச்சு மூக்கின் வழியாக வெளியாதல்).

---

1. மெல்லெழுத் தாறும் பிறப்பின் ஆக்கம்
சொல்லிய பள்ளி நிலையின ஆயினும்
மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்.
—தொல். எழுத்து. ௧௦௦

3. பிரிவளியினம்—ல, ள (Laterals or Liquids) (மூச்சு வெளிப்படுங்கால் வாயிடையே நாக்குத் தடுத்து நின்று அம்மூச்சைப் பிரித்து வெளிப்படுத்தல்).

4. உரப்பினம்—ர, ழ, ற, (trilled or rolled consonants, ட்ர் என்பதுபோல் நாவின் சில சிறு அசைவு ளுடன் மூச்சு வெளியாதல்).

5. உயிர்ப்பினம்—தமிழில் இல்லை (fricatives) (உஸ்-போலாகும்; ஸ-இவ்வகையைச் சாரும். பசலை, பசி, கசப்பு முதலியவற்றில் சகரம் சில இடங்களில் இவ்வாறு ஒலிக்கப்படுகிறது).

6. அரையுயிர்—ய, வ (semivowels) (உயிருமாகாது, மெய்யுமாகாது இடையினமாக வருவன).

---

1. If we classify consonants according to the manner in which the organs articulate them, we distinguish six main classes:

I. Plosive consonants, formed by completely closing the air passage and suddenly removing the obstacle, so that the air escapes making an explosive sound...

II. Nasal consonants, formed by completely closing the mouth at some point, the soft palate remaining lowered so that the air is free to pass out through the nose...

III. Lateral consonants, formed by an obstacle placed in the middle of the mouth, the air being free to escape at the sides...

IV. Rolled consonants, formed by a rapid succession of taps of some elastic organ...

V. Fricative consonants, formed by narrowing the air passage at some point so that the air escapes making a kind of hissing sound (f, x).

VI. Semivowels, or vowels used in the capacity of consonants.—D. Jones, An Outline of English Phonetics, p.14.

க ச ட த ப ற என்பவற்றைத் தொல்காப்பியனார் வல்லினம் என வகுத்தது பொருந்தியதாகும்[1] ஆயின், ங ஞ ண ந ம ன என்பவற்றை மெல்லினம்[2] என்பதைவிட மூக்கினம் என வழங்குதல் ஒலிநூலுக்கு இயைவதாகும். மெல்லினம் என்ற பெயரின் காரணத்தை விளக்கிய நச்சினார்க்கினியர், "மெல்லென்றிசைத்தலானும் மெல்லென்று மூக்கின் வளியாற் பிறத்தலானும் மெல்லெழுத்தாயிற்று" என்று எழுதியுள்ளார். அக்ஙடல் என்னுமிடத்தில் ககரம் வல்லொலியே; அதன் மெல்லொலி, அங்ஙவை என்பதன் ககரத்தில் உள்ளது; அதன் மூக்கொலி, ஙகரத்தில் உள்ளது ஆதலின், ககரம் முதலியவற்றை வெடியினம் எனக்கொள்ளும் ஒலிநூல், அவற்றையே இரண்டிரண்டாகப் பிரித்து வல்லொலியும் மெல்லொலியும் (surds and sonants) ஆகக் கொள்ளும். ங ஞ ண ந ம ன என்பவற்றை மூக்கினம் (nasals) எனக் கொள்ளும்.

ய ர ல வ ழ ள என்னும் ஆறனையும் இடையெழுத்தெனக் கொண்டார் தொல்காப்பியனார்[3] அவை உயிர்க்கும் மெய்க்கும் இடைப்பட்ட இனமாகத் தோன்றுதலால் இடையெழுத்தெனப் பட்டனவாகக் கொள்ளல் வேண்டும்; வல்லினத்திற்கும் மெல்லினத்திற்கும் இடைப்பட்ட ஒலிகளெனக் கருதுதல் பொருந்தாமை காணலாம்.

வல்லின மெல்லின மாறுதல் (convertibility of surds and sonants):

க ச ட த ப என்னும் வெடியின ஒலி ஐந்தனுக்கும் இன்றுள்ள தமிழில் தனித்தனியே ஈரொலி உள்ளன.

1. வல்லெழுத் தென்ப கசட தபற.—தொல். எழுத்து. சங
2. மெல்லெழுத் தென்ப ஙஞண நமன. ,, ,, சச
3. இடையெழுத் தென்ப யரல வழள. ,, ,, சரு

| வல்லொலி (surds) | | மெல்லொலி (sonants) |
|---|---|---|
| கடன் | — | பகல் |
| அச்சம் | — | பசலை |
| பட்டம் | — | படம் |
| தலை | — | அதனை |
| படம் | — | கொம்பர் |

இவற்றில் க ச ட த ப என்பவற்றிற்கு ஈரொலி இருத்தல் காணலாம்.

இதனைக் கால்டுவெல் வல்லொலி மெல்லொலி மாற்றம் (convertibility of surds into sonants) என்று தனியாக ஆராய்கின்றார்.[1] அவர் கொள்கைப்படி, இவ்வியல்பு தமிழிற்குப் பண்டுதொட்டே இருந்துவந்ததொன்றாகும். அது அஃது என்பவற்றின் வேறுபாடுகளையும், பந்து பத்து என்னும் மென்றொடர் வன்றொடர்க் குற்றுகர வேறுபாடுகளையும் விளக்கிய தொல்காப்பியனார் இந்த இயல்பை விளக்காதது வியப்பாகவே உள்ளது. நகரத்திற்கும் னகரத்திற்கும் உள்ள மிக நுண்ணிய வேறுபாட்டைத் தெளிவாக்கும் ஆசிரியர் இப்பெரிய வேறுபாட்டைப் புறக்கணித்திருத்தல் இயலாது. ஆனால், ஒரு மொழியில் சொற்களும் சொற்பொருள்களும் வளர்ந்து பெருகுதல் போல் ஒலிகளும் வளர்ந்து பெருகியிருத்தல் கூடும்; அவ்வாறு நாளடைவில் தமிழிடையே புகுந்த ஒலிகளே மெல்லொலிகள் என்று சிலர் கருதுவர். அவ்வாறு கொள்வது மொழிநூலார்க்கும். உடன்பாடான கொள்கையே. வல்லொலி மிடற்றில் தடையின்றிப் பிறத்தலையும் (unvoiced) மெல்லொலி தடைப்பட்டுப் பிறத்தலையும் (voiced) ஆராய்ந்து கண்டு, எளிதில் பிறக்கும் வல்லொலிகளையே

1. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages p. 138.

பழங்காலத்துத் திராவிட மக்கள் கற்றிருந்தனர் என்றும், காலஞ் செல்லச் செல்ல நுட்ப முயற்சிகளில் வல்லுநரான பிற்காலத்து மக்களே அரிதில் பிறக்கும் மெல்லொலிகளை யும் கற்றனர் என்றும் அவர் கொள்வர்-[1]

க ச ட த ப என்பவை வல்லொலிகளாயின் மிடற்று முயற்சியின்றி (unvoiced) பிறக்கின்றன என்றும், மெல் லொலிகளாயின் மிடற்றுமுயற்சியால் (voiced) பிறக்கின் றன என்றும் ஒலிநூலார் கூறுவர்.

| | | | |
|---|---|---|---|
| கலம், | தவளை, | பழம் | மிடற்று முயற்சியின்றி (unvoiced) |
| விக்கல், | வித்து, | விட்டு | |
| நகம், | பசலை, | படம் | மிடற்று முயற்சியுடன் (voiced) |
| நங்கை, | நஞ்சு, | நண்டு | |

முதல் வரிசையில் உள்ள சொற்களில் தொடக்கத்தில் உள்ளனவும், இரண்டாம் வரிசைச் சொற்களில் இரட்டித்து வருவனவும் வல்லொலிகள். மூன்றும் வரிசையில் இரண்டு உயிர்களுக்கு இடையில் வருவனவும், நான்காம் வரிசையில் மூக்கினத்தை அடுத்து வருவனவும் மெல்லொலிகள். முன்னும் பின்னும் வரும் உயிரொலிகளும் மூக்கின ஒலி

1. The conversion of a surd letter into its corresponding sonant, or of sonant into surd, is abundantly illustrated in the history of every language. Our own plural sign *s* is pronounced as *s* only when it follows another surd consonant, as in plants, cakes; after a sonant consonant or a vowel, it becomes Z, as in eyes, pins, pegs. A like change is common between two vowels, as in busy; the vowel intonation being continued through the intervening consonant, instead of intermitted during its utterance. So on the other hand, we turn a *d* into a *t* after another surd consonant, where a sonant would be only with difficulty pronounced, as in looked (lookt)...

—Whitney, W.D., Language and the Study of Language. p. 92.

களுமே வல்லொலியின் வன்மையைக் குறைத்து மென்மை யாக்குகின்றன என்பது புளும்பீல்ட் கருத்து.

ripam (Latin) > riba (Spanish)
setam ( ,, ) > seda ( ,, )
focum ( ,, ) > fuego ( ,, )

முதலான சொற்களில் p t c என்னும் வல்லொலிகள் b d g என மெல்லொலிகளாக மாறியதையும் அவர் காட்டுகிறார்.[1] முயற்சிச் சிக்கனமே இவ்வாறு திரிதற்குக் காரணம் என்கிறார்.[2]

இத்தகை ஒலித்திரிபு பல மொழிகளில் உண்டு; எனினும் தமிழில் தெளிவான ஒழுங்குமுறையுடன் அமைந் துள்ளது. க, ச, ட, த, ப என்னும் ஐந்து எழுத்துக்களும் மொழி முதலிலும் மொழியிடையில் இரட்டிக்குமிடத்திலும் வன் மையாக ஒலிக்குமென்றும், ஏனையிடங்களில் மென்மையாக ஒலிக்குமென்றும் கால்டுவெல் கூறுகிறார். மொழியிடையே தனித்து வருங்காலத்திலும், மூக்கினமாகிய ங ஞ ண ந ம என்பவற்றை அடுத்து வரும்போதும் அவை வன்மையாக ஒலிப்பதில்லை என்று வற்புறுத்துகிறார். பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்கும்போதும் இவ்விதி போற்றப் படுகின்றது என்று கூறி, தந்தம் மண்டபம், (*danta*: வடமொழி>*tandam*: தமிழ்; *mantapa*: வடமொழி> *mandalam*: தமிழ்) முதலிய சொற்களை உதாரணமாகக் காட்டுகிறார்.

---

1. Language, p. 374.

2. A very common type of change is the weakening of consonants between vowels or other open sounds. This, too, is akin to assimilation, since, when the preceding and following sounds are open and voiced, the less marked closure of the voicing of a stop or spirant represents an economy of movement. —Ibid.

ஆனால், தொல்காப்பியனார் காலத்தும் அதனை ஒட்டிய காலத்தும் இவ்வெழுத்துக்களுக்கு ஈரொலி இல்லாமையால், இவை சொற்களில் எவ்விடத்தும் ஒரேவகையாக—வன்மையாகவே — ஒலிக்கப்பட்டுவந்தன என்றும். 'இன்பம்' என்பதை நாம் இன்று inbam என்று ஒலித்தபோதிலும் பழங்காலத்து மக்கள் அதை inpam என்றே ஒலித்திருப்பர் என்றும், இன்றும் மற்றத் திராவிட மொழிகளில் சொல்லினிடையே வல்லினத்தை அடுத்து மூக்கினம் வரும் போதும் வன்மையாக ஒலித்தல் உண்டு என்றும் சிலர் கூறுவர். கன்னடத்தில் இம்பு (இனிமை என்னும் பொருளது) *impu* என்றே ஒலிக்கப்படுகின்றது. எந்த (enta), ஆட (ata) முதலிய தெலுங்குச் சொற்களிலும் அவ்வொலி முறை உள்ளது.

ஆயினும், தொடக்கத்தில் எளிய முறையில் இடத்திற் கேற்ப வன்மை மென்மையாக ஒலிக்கும் முறையே இருந்தது என்றும், நாளடைவில் பிறமொழிக் கலப்பாலும், நாகரிக வளர்ச்சியாலும் அம்முறை திரிந்தது என்றும் கொள்ளுதல் பொருந்தும்.

பிறமொழிக் கலப்பு நேர்ந்தபோது, பழைய திராவிட மொழியாகிய தமிழ்மட்டும் விழிப்பாக இருந்து தன் ஒலிகளுக்கு ஏற்பப் பிறமொழிச் சொற்களை மாற்றி அமைத்துக் கொண்டது.

ஆயின் கன்னடம் தெலுங்கு முதலான மொழிகள் திராவிட ஒலிமுறையைக் கைவிட்டுப் பிறமொழிச் சொற்களை வரையறையின்றிக் கடன் வாங்கியதால்,[1] வல்லொலி மெல்லொலி யமைப்பு அவற்றில் இவ்வளவு தெளிவாக இல்லாமற் போயிற்று.

---

1. T. Burrow, Dravidic Studies I, pp. 711-722.

மெய்யெழுத்துத் திரிபுகள்

க், ங்:

க > ழ: தொகுதி > தொழுதி<br>
முகை > முழை

க > வ: ஆகு > ஆவு<br>
நோக > நோவ

க மறைதல்: பகுதி > பாதி; பகல் > பால்

க > ச:

| | | | | |
|---|---|---|---|---|
| கன்னடம் | கேரி | > | சேரி | (தமிழ், தெலுங்கு) |
| ,, | கின்ன | > | சின்ன | ( ,, ) |
| ,, | கிவி | > | செவி | ( ,, ) |
| ,, | கெய்(gey) | > | செய் | ( ,, ) |
| ,, | கெத்தல் | > | சிதல்(தமிழ்), | செதலு (தெலுங்கு) |
| கன்னடம்,தமிழ்: | கெடு | > | செடு | (தெலுங்கு) |
| தமிழ்: | கேர | > | சேர | (மலையாளம்) |
| தமிழ்: | வைக்க | > | வைச்ச | (தெலுங்கு) |
| தமிழ்: | ஒக்கிய | > | ஒச்சிய | (தமிழ் இலக்கியம்) |
| | கொலிய | > | சொலிய | ( ,, ) |

க > ங (ங்க > ங்ங)

பழந்தமிழ்: யாங்கனம் > யாங்ஙனம் (இன்றைய தமிழ்)<br>
நீங்கள் > நிங்ஙள் (மலையாளம்)

மலையாள மொழியில் இத்தகைய திரிபுகள் பெருகியுள்ளன.

ச், ஞ்:

தமிழகத்தில் இப்போது பெரும்பாலான பகுதிகளில் சகரம், வடமொழி 'ஸ' ஒலிப்பதுபோல் ஒலிக்கப்படுகின்றது. இரட்டிக்கும் இடத்தில் மட்டுமே அதன் ஒலி உள்ளது (அச்சம், தச்சர்.) தெலுங்கு பழைய ஒலியைக் காத்துவருகின்றது.

தமிழில் ஞகாரமாகிய மூக்கொலியை அடுத்துவரும் சகரம் வடமொழி 'ஜ' ஒலிப்பதுபோல் ஒலிக்கின்றது (அஞ்சு, பஞ்சம்).

ஞகரம், ஐரோப்பிய மொழிகளுள் பிரெஞ்சு மொழியில் உள்ளது.

கன்னடத்தில் 'ச' உள்ள இடத்தில் தமிழில் 'ய' உள்ளது. (பெசர்>பெயர். தமிழிலும் பசும்>பயும்>பய்ம்>பைம் ஆகியிருக்கலாம் என்கிறார் கால்டுவெல்.[1])

ஞகரம் நகரமாகவும் யகரமாகவும் மாறுகின்றது என்கிறார் கால்டுவெல்.

மலையாளம்: ✓ஞான் > தமிழில் நான், யான்
,, ஞண்டு > ,, நண்டு, கன்னடத்தில் யண்ட்ரி

ட், ண்:

டகரம், ணகரம் போலவே மொழிமுதல் வாரா எழுத்து. பிறமொழிச் சொற்களில் அது மொழி முதலாயிருப்பின், தமிழில் வழங்குங் காலத்து, இகரமோ அகரமோ முதலில் பெற்று வழங்கும் (டம்பம்>இடம்பம்).

தமிழ்ச் சொற்களில் உள்ள ணகரம் தெலுங்கில் னகரமாகக் காணப்படுகின்றது. தமிழ் முறையே திராவிட முதல் மொழியின் முறை எனக் கோடல் தகும். கண்>கன்னு, விண் >வின்னு, மண் > மன்னு.[2]

மலையாளத்தில் னகரத்தின் இடத்தில் ணகரம் காணப்படுகின்றது. நினக்கு > நிணக்கு (மலையாளம்).

தெலுங்கைப்போல் மலையாளத்திலும் சில சொற்களில் ணகரத்திற்குப் பதில் னகரம் உள்ளது. துணிய > துனிய (மலையாளம்)

ணகரம் மகரம் ஆதல்:

என்பது (தமிழ்) > எம்பது (மலையாளம்).

---

1. Ibid. 153

2. வடமொழி ணகரம் இந்தியில் னகரமாகத் திரிந்துள்ளமை ஈண்டு ஒப்பிடத்தக்கது. குண >குன்.

த், ந்:

த > ர: விதை > விரை
த > ச: வைத்த > வைச்ச (தமிழில் போலி என்பர்)
பெரிது > பெரிசு ,,
சிரித்த > சிரிச்ச (மலையாளம்)
ந்த > ஞ்ச: ஐந்து > அஞ்சு.

ஞ, ச என்பவை முன்னண்ண மெய்கள்; இ, ஈ, ஐ என்னும் முன்னண்ண உயிர்களை அடுத்து வரும்போது இம் மாறுதல் ஆகும். ஐந்து > அஞ்சு போன்று திரிந்த சொற்களே மலையாளத்தில் பெரு வழக்கின.

ப், ம்:

தூதமொழியில் ஆங்கிலத்திலுள்ள f ஒலியும் உள்ளது. அது ஏனைத் திராவிட மொழிகளில் இல்லை.

ப > ஹ: கன்னடத்தில் மொழிமுதலிலெல்லாம் இம் மாறுதல் உள்ளது.

பத்து > ஹத்து. (வடமொழி) பண > ஹண.

இம்மாறுதல் புதுக் கன்னடத்தில்தான் உள்ளது. பழங்கன்னடத்தில் பகரமே காணலாம். சீன மொழியின் பகரம் ஜப்பானிய மொழியில் f பகரமாகவும், ஹகரமாகவும் மாறுகின்ற தன்மை இங்கு ஒப்பிடுதற்குரியது.

ப > ம: பதி (தெலுங்கு) > மிதி (தொம்மிதி—ஒன்பது)
உண்பான் (தமிழ்) > உண்மான் (மலையாளம்)
பாம்பு (தமிழ்) > பாமு (தெலுங்கு), ஹாவு (பழங் கன்னடம்)

ப > வ: உண்பான் > உண்ணுவான்
பகு > வகு
ம > ங, ஞ, ந:
பழம்+கண்டார் > பழங் கண்டார்
பழம்+சிறந்தது > பழஞ் சிறந்தது
பழம்+தந்தார் > பழந் தந்தார்

ம > ன : தமிழில் போலி என விதிப்பர்.
மரம் > மரன்; குளம், குளன், கொளனு (தெலுங்கு)
ம > வ : மாமன் > மாவு (குடகு)
மாமி > மாவி ( ,, )
நாம் > நாவு (கன்னடம்), நீம் (நீர்) > நீவு (கன்னடம்)

யரலவழளறன

ய வ ஒழிந்த ஏனைய மொழிமுதல் வாரா. ர ல முதலாகக் கொண்ட பிற மொழிச்சொற்கள், தமிழில் வரின் அ, இ, உ, என்பவற்றில் ஒன்று முன்னிற்கும் (அரங்கம், இராமன், உலோகம்).

ழ, ள, ற, ன என்பவை திராவிட மொழிகளுக்கு உரிய சிறப்பான எழுத்துக்கள்.

ழ

ழகரம் தமிழில்தான் பெரிதும் வழங்குகின்றது. எனினும் பேச்சில் மிகத் தவறாகவும் பல்வேறு வகையாக வும் ஒலிக்கப்படுவது அதுவே. ழகரத்தைச் சில பகுதி களிலுள்ளவர் ளகரமாகவும், சிலர் யகரமாகவும், சிலர் சகர மாகவும் ஒலிப்பர். ழகரத்தை நன்கு ஒலிப்பவர் சிலரே. இலக்கியத்தில் அது கெடுமிடம் உளது (போழ்து > போது). பதினொன்றாம் நூற்றாண்டில் எழுந்த வீரசோழியம் என்னும் நூல் ழகரம் ளகரமாக மாறுதற்கு விரிவாக இலக்கணமும் வகுத்துவிட்டது. தெலுங்கில் அது டகரமாகவும் கன்னடத்தில் ளகரமாகவும் மாறும்.

எழு > எடு > எளு
கோழி > கோடி > கோளி
நீழல் > நீட. கூழு > கூடு
பாழு > பாடு. ஊழியம் > ஊடியமு.

ழகரம் கெடுதலும் உண்டு:

கீழ் > கிந்த (தெலுங்கு)
விழுங்கு > மிங்கு (கன்னடம்)

ழ>ண : முழுகு > முணுகு (தெலுங்கு)
குழி > குணி (கன்னடம்)
ழ>ர: பொழுது >ப்ரொத்து (தெலுங்கு)
கொழுவு (கொழுப்பு)>க்ரொவ்வு( ,, )

ழகரம் மலையாளத்தில் இன்றும் வழங்குகின்றது. தெலுங்கிலும் கன்னடத்திலும் மறைந்தது. பழங் கன்னடத்தில் ழகரம் இருந்தது. ஒன்பதாம் நூற்றாண்டின் கன்னடக் கல்வெட்டுக்களில் இந்த எழுத்து உள்ளது. பிறகு ரகரமாகத் திரிந்து, பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப்பின் ளகரமாக எழுதப்படுவதாயிற்று.

ய

ய>ச: வயிறு >வசறு, வசிறு (கொச்சை)
பையன்கள் >பசங்கள் ( ,, )
ய>ஞ, ந: யான்>ஞான், நான்

இவற்றில் யகரமே முந்தியது; ஏனையவை பிந்தியவை என்பதை வடசொற்கள் தமிழில் அடையும் மாறுதல்கள் தெரிவிக்கின்றன.
யமன் >ஞமன், நமன்
யுக >நுகம்

ர

ர>ழ: ஈர்க்கும் (இலக்கியத் தமிழ்) > இழுக்கும்.
ர>ல: தெரி (தமிழ்)>தெலியு (தெலுங்கு)
பரிசை( ,, )>பலிச (மலையாளம்)

ல

ல>ர, ற: வில் (தமிழ்)>பிர் (துளு)
சில்>சிறந்து.

இதனால் சில—சிறு, பல—பரு, முதலான சொற்களின் பகுதிகள் ஒத்தனவாக இருக்கலாம் என்று கால்டுவெல் ஐயுறுகிறார்.[1]

1. Ibid. 160

ல>ன: பொலம்>பொன்

### வ

வ>ப(b) கன்னடத்தில் காணும் மாறுதல்
வாழ்>பாள் (bal)

வ>க(g) தெலுங்கில் காணும் மாறுதல்
வாரு>காரு. அறுவர்>ஆறுகுரு
பவழம்>பகட
செய்வேன்>செய்கேன் (இலக்கியத் தமிழ்)

### ள

ள>ண: துளுமொழியில் காணும் மாறுதல்
கேள் >கேண் (துளு)
கொள் >கொண் ( ,, ) கொணு (தெலுங்கு)

### ற

இது வடமொழியில் இல்லை. தெலுங்கு இலக்கியத்தில் காணப்படுகின்றது: இலக்கண நூலாரும் இதனை வற்புறுத்துகின்றனர்; இன்று வழக்கில் இது மறைந்து வருகின்றது. கன்னடத்தில் செய்யுளில்மட்டும் ஆளப்படுகின்றது. ஆகையால் தொடக்கத்தில் எல்லா மொழிக்கும் உரிய பொது எழுத்தே என்றும், திராவிட முதல் மொழியில் இருந்திருக்கும் என்றும் துணியலாம்.

ற்ற>ட்ட:

மாற்றம்>மாட (mata) (தெலுங்கு)
மாற்றம்>மாடு (matu) (கன்னடம்)
பற்று >பட்டு (தெலுங்கு)
பட்டு, பத்து, ஹத்து (கன்னடம்)
பதற்றம்>பதட்டம் (பேச்சுத் தமிழ்)

ற்ற>த்த:

பற்று >பத்து (பேச்சுத் தமிழ்)

ற>ன (ன்ற >ன்னு):
நின்ற>நின்னு (மலையாளம்)
குன்ற>குன்னு ,,

ற>ர:
ஒளிறு >ஒளிர்
ஞாயிறு >நேயர் (கன்னடம்)
நூறு நாள்>நூர் நாள்ளு (தெலுங்கு)

ற, ர இரண்டற்கும் பிறப்பிடம் ஒன்றே; முயற்சி மட்டும் வேறு; ஆதலின் இத் திரிபுக்கு இடம் ஏற்பட்டது எனலாம்[1]

ன

ன>ந:
மூன்று >மூந்நு (மலையாளம்)
வென்றவன்>வெந்நவன் ( ,, )[2]

ஷ, ஜ, ஹ, க்ஷ.

இவை தமிழில் இல்லை. திராவிட முதல்மொழியிலும் இவை இருந்ததில்லை. வடமொழிக் கலப்பால், தெலுங்கு முதலியவற்றில் இவை வழங்குகின்றன. தமிழிலோ,

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே.[3]

---

1. பேச்சொலிகளை ஆராயும் இக்காலத்து ஒலி நூலார் பலர், ற ர இரண்டற்கும் வேறுபாடு இல்லை என்றும், ஓர் ஒலிக்கு ஏற்பட்ட இரண்டு வடிவங்களே இவை என்றும் கருதுகின்றனர். றகரம் இரட்டிக்கும் இடத்தில்மட்டும் ட்ர என்பதுபோல் ஒலித்து வேறுபடுகிறது; பேச்சுத் தமிழில் த்த என்ற ஒலியே கேட்கப்படுகிறது.

2. இவற்றையும் மேற்கூறியவாறு ஓரொலியின் இரண்டு வடிவங்கள் (graphemes) என்று ஒலி நூலார் பலர் கொள்கின்றனர். பேச்சொலிகளை மட்டும் ஆராய்ந்து அவர்கள் கொண்ட முடிவு இது. The difference between r and ṟ is, in new Tamil, only an orthographic distinction; the pronunciation of both is identical—Archiv Orientalni, xxx, 1955 p. 388.

3. தொல். சொல். ௪0௧.

என்ற தொல்காப்பிய விதியே இலக்கிய நடையில் இன்று வரையில் கொள்ளப்பட்டு வருகின்றது. கல்லாதவர்க்கு இவை இன்றும் புதிய ஒலிகளே. பிறமொழி கற்றோரே இவற்றை ஒலிக்க அறிவர்.

தமிழில் பிறமொழிச் சொற்களை எழுதும்போது, ஸ என்பதற்கு ஈடாகத் தகரத்தையாவது சகரத்தை யாவது கொள்வர்.[1] சில சொற்களில் அது கெடுதலும் உண்டு.

ஷ என்பதற்கு ஈடாக ட, ச இவற்றில் ஒன்றை எழுதுவர்.

'ஹ' புதுக்கன்னடத்தில் மிகுதியாக வழங்குகின்றது. பழங்கன்னடத்தில் 'ஹ' ஒலி இல்லை.[2]

தமிழில் ஹகர ஒலியோடு கூடிய மெய்கள் (aspirated consonants) இல்லை தமிழில் அவை ஒலித்தற்கு எளி யவை அல்ல; அவை கலப்பொலிகளே அன்றித் தனி யொலிகள் அல்ல. வடசொற்களை எழுதும்பொருட்டு, தெலுங்கு முதலிய மொழிகளின் நெடுங்கணக்கில் அவை உள்ளன. திராவிட மொழிகளுக்கும் அவ்வெழுத்துக் களுக்கும் தொடர்பு இல்லை.

ஹகரம் சேர்ந்த மெய்கள் தனிச்சிறப்புடையவை அல்ல; மிடற்றின் முயற்சியால் ஒலிக்கும் உயிரொலி

---

1. எழாமுயிர் இய்யும் இருவும் ஐவருக்கத்(து)
இடையின் மூன்றும் அவ்வம் முதலும்
எட்டே யவ்வும் முப்பது சயவும்
மேலொன்று சடவும் இரண்டு சதவும்
மூன்றே அகவும் ஐந்திரு கவ்வும்
ஆவீ றையும் ஈயீ றிகரமும் (நன்னூல், எழுத்து. 147).
எனப் பவணந்தியார் விரிவாக வடமொழியாக்கம் கூறியுள்ளார்.

2. ஆங்கிலத்தில் honour, hour முதலான சொற்கள் ஹக ரத்தோடு சேர்த்து எழுதப்படினும், ஹகரத்தை ஒலித்தல் பிழை யாகவும் ஒலிக்காது விடுதல் விதியாகவும் கொள்ளப்படுகின்றன.

களேயே அவ்வாறன்றி மூச்சு வாய்வழியாக நன்கு வெளிப் படுமாறு ஒலித்தால், அவை பிறக்கும். ஆகவே ஒருவகை முயற்சியுடன் உயிரொலிகளை ஒலிக்கும்போது ஹகரம் உடன்சேர்ந்து கேட்கின்றது. வல்லொலிகள் மட்டும் தனித்து ஒலிக்கும்போது அவற்றுள் ஹகரம் ஒலிப்பதில்லை. வல்லொலிகளை அடுத்துவரும் உயிர்கள் மேற்கூறிய வாறு ஒலிக்கும்போதுதான், ஹகர ஒலி அமைகின்றது. எனவே, வல்லொலிகளை ஹகர ஒலியுடன் கூடியவை (aspirated sounds) என்றும், ஹகர ஒலியுடன் கூடாதவை (unaspirated sounds) என்றும் பாகுபாடு செய்வதால் பயன் இல்லை.

உலக மொழிகள் பலவற்றுள் ஹகர ஒலி வழக்கிழந்து வருகின்றது.[1]

**ஆய்தம் ஃ**

வடமொழியில் உள்ள ஹ தமிழில் இல்லை எனினும், அதனினும் நுட்பமான ஒலியைத் தமிழில் ஆய்தம் தர வல்லது. ஆய்தம் என்றால் நுண்ணியது என்பது பொருள். ஆய்தம் மிகுந்த வண்ணத்தைத் தொல்காப்பியனார் நலிபு

---

1. Doubtless some appreciable muscular effort is required to utter the aspirate *h*. Its omission is distinctly easier and therefore nearly all languages in which it has existed have shown a tendency to drop it, and many, such as Greek and the Neo-Latin tongues have dropped it altogether —Tucker, Introduction to the Natural History of Lauguage. p 329.

*h* is occasionally dropped in initial unstressed syllables of longer words, such as *horizon, historical, hotel*—Those who would sound the *h* in hotel when pronounced by itself, would often drop it in a good hotel.—D. Jones, An Outline of English Phonetics, p. 62.

Speakers of French and other Romance languages usually have considerable difficulty in pronouncing *h*. They generally leave it altogether.—Ibid, p. 62.

வண்ணம் என்பார்.[1] வல்லினமெய்கள் நலிந்து—நுண்மையுற்று—ஒலித்தற்கு ஆய்தம் வருகிறது எனலாம்.

ஆய்தம் தொடக்கத்தில் ஒரு தனியொலியாகவும் (phoneme) தனிவடிவெழுத்து (grapheme) உடையதாகவும் இருந்திருத்தல் இயலாது. க ச ட த ப ற என்னும் ஆறு வல்லொலிகளையும் மெல்லொலிகளாக்க அது வழங்கியிருத்தல் கூடும். காலப்போக்கில் அதன் இயல்பை உணராமல், தொல்காப்பியனார் அதனைச் சார்பெழுத்து எனக் குறிப்பிட்டதையும் கருதாமல், அதற்கு ஒரு தனிவடிவம் தந்து எழுதத்தொடங்கியிருக்கலாம். அவ்வாறாயின், உயிரொலிகள் முதலொலிகளாக (phonemes) வழங்க, அவற்றுள் முன்னண்ண உயிர்களின் வகையொலியாகக் (allophone) குற்றியலிகரமும், பின்னண்ண உயிர்களின் வகையொலியாகக் குற்றியலிகரமும் அமைந்ததுபோல், மெய்களுள் வல்லினமாகிய ஆறு முதலொலிகளுக்கும்[2] (phonemes) வகையொலிகளாக (allophones) வருவனவற்றை உணர்த்த ஆய்தம் வழங்கப்பட்டிருக்க வேண்டும்[3] எனக் கொள்ளலாம்.

இது வடமொழி விஸர்க்கத்தோடொத்தது என்றும், இலக்கணக்காரரின் படைப்பு எனச் சிலர் கூறுவர் என்றும்

---

1. நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும்
—தொல். பொருள். ருஉஉ.

2. குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.
—தொல். எழுத். உஅ.

3. சார்ந்துவரின் அல்லது தமக்கியல் பிலஎனத்
தேர்ந்துவெளிப் படுத்த ஏனை மூன்றும்
தத்தம் சார்பின் பிறப்பொடு சிவணி
ஒத்த காட்சியின் தம்மியல் பியலும்.
—தொல். எழுத். கஉ.

கால்டுவெல் எழுதியுள்ளார்.[1] அவை உண்மை அல்ல. தொல்காப்பியனார் இதனைச் சார்பெழுத்து எனக் கூறுவதனாலும், புள்ளிவடிவிற்று என்பதனாலும்[2] இலக்கிய வழக்கில் பயின்று இடம்பெற்றிருத்தலினாலும், இது தமிழ்க்கு உரிய ஒலியே ஆகும்.

ட, ண, ள : மடிநா ஒலிகள்[3] (cacuminal and retroflex)

இவை வாயின் உட்புறத்தே நாமுனையை மடித்து வன்மையாக ஒலிக்கப்படும் மெய்களாகும்.[4] இவை இந்தியாவிலுள்ள எல்லா மொழிகளிலும் உள்ளன; திராவிட

---

1. Caldwell. A Comparative Grammar of theDravidan Languages, p. 130.

2. குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன—தொல். எழுத்.உ.

3. இவற்றை inverted அல்லது domal என்றும் ஒலிநூலார் சிலர் குறிப்பிடுவர். Bloomfield, Language, p. 98.

4. இவற்றைக் கால்டுவெல் linguals, cerebrals என்ற பெயரால் குறிப்பர். இக்குறியீடும் தவறே. (A Comparative Grammar of the Dravidian Languages, p. 147). மூளையின் அடிப்பகுதியில் (cerebrum) பிறக்கும் ஒலிகள் என்று கொண்ட கொள்கையும் தவறே. ஒலிநூலார் இவற்றைக் குறிக்கும் பெயர் cacuminal, retroflex என்பன. "A class of tongue-tip consonants, which are as a rule very difficult for the average European who is not a native of Ireland, Western England, some parts of Scotland and certain districts of Sweden, is that which is produced with the tip of the tongue somewhat curled back, so as to come in contact with that part of the roof of the mouth which lies between the teeth-ridge and the point where the hard and soft palates meet. It is a class of sound very common in the majority of the Indian tongues... They are frequently significant and mispronunciation may lead to serious misunderstanding Indian grammarians class these consonants as cerebrals. The name for them in the terminology of phonetics is retroflex or cacuminal—G. Noel-Armfield, General Phonetics, pp. 113, 114.

மொழிகளிலும் உள்ளன; ஏனைய இந்திய மொழிகளிலும் உள்ளன.[1] ஆனால், எல்லா மொழிக்கும் பொதுவாக உரிய ஒலிகள் என்று கூற முடியாது. ஹிந்தி முதலிய மொழிகள் வடமொழியிலிருந்து இவற்றைப் பெற்றிருத்தல் கூடும். ஆனால், தமிழ் முதலிய மொழிகளும் அவ்வாறு வட மொழியிலிருந்து பெற்றிருக்கும் என்று கூறுவதற்கில்லை. அதற்கு மாறாக, வடமொழி இவ்வொலிகளைத் திராவிட மொழிகளிலிருந்து கொண்டிருக்கும் என்பதற்குப் பின் வரும் சான்றுகள் காட்டுவர் கால்டுவெல்.

(1) பழைய திராவிடமொழிச் சொற்களில் அடிச் சொற்களாக உள்ள பலவற்றிற்குச்—சிறப்பாகத் தமிழ் அடிச்சொற்களுக்கு—இவை இன்றியமையாதவை. ஆனால், இவை வடமொழியில் ஒலிநயத்திற்காகக் கொள்ளப்படு கின்றவையே. (மங்கலம்—மங்களம்.)

(2) வடமொழியோடு ஓரினமாக உள்ள கிரீக், லத்தீன் முதலான ஐரோப்பிய மொழிகளில் இவ்வொலி கள் காணப்படவில்லை. ஆனால், திராவிட மொழிகள் பலவற்றுள்ளும்—பிராஹூய் மொழியினுள்ளும்—இவை என்றும் இருந்துவந்திருக்கின்றன. வடமொழியைவிடப் பிராகிருத மொழிகள் இவற்றை மிகுதியாக ஆண்டிருத்த லும் இங்குக் கருதத்தக்கதே.

(3) வடமொழியிலிருந்து பெறப்பட்ட எல்லா ஒலி களும் தமிழ்க்குப் புதியவையாக இருக்குமேல் தமிழ் ஒலி முறைக்கேற்ப மாற்றியே கொள்ளப்பட்டிருக்கின்றன. உரப்பியும் கனைத்தும் ஒலிக்கும் எல்லா ஒலிகளும் தமிழ்

1. அமெரிக்கர் பேசும் ஆங்கிலத்தில் சில ஒலிகள் இவ்வாறு மடிநா ஒலிகளாக மாறி வருவதாகக் குறிக்கிறார் புளூம்பீல்ட்.

—Language, p. 98.

முறைக்கேற்ப மாற்றப்பட்டுள்ளன. ஆனால் ட, ண, ள என்னும் அத்தகைய ஒலிகள் தமிழ்க்குப் புதியவையானல், மாற்றப்படாமல் கொள்ளப்பட்டிருக்குமோ? அன்றியும் வட சொற்களிலே அல்லாமல் பழைய திராவிடச் சொற்களிலும் அவை அங்கிலேயில் போற்றப்பட்டிருத்தல் முடியாதன்றே?

(4) திராவிட மொழிகளில் தமிழினும் மிகுதியாக வடமொழிக்கலப்பைப் பெற்றது தெலுங்கே. ஆனல், தமிழில் உள்ள அவ்வளவு மிகுதியாக ட, ண, ள ஒலிகள் தெலுங்கில் இல்லை. எனவே வடமொழியிலிருந்து வந்தனவாகக் கொள்ளல் பொருந்தாது.

(5) மற்ற மெய்களுக்கு முற்றிலும் வேறுபட்டவை மடிநா ஒலிகள். அன்றியும் இவ்வேறுபாட்டைப் புறக்கணித்தால், அடிப்படையான பல சொற்கள் பொருள் வேறுபாடின்றிப் பயனற்றுப்போக, மொழியும் ஆற்றல் இழந்து விடும்.

| மற்ற மெய் | மடி நா மெய் |
|---|---|
| குதி | குடி |
| புதை | புடை |
| கத்து | கட்டு |
| கொத்து | கொட்டு |
| என் | எண் |
| மனை | மணை |
| கோல் | கொள் |
| மால் | மாள் |

எனவே ட, ண, ள என்னும் ஒலிகள் திராவிட ஒலிகளே என்றும், ஒலிநயம் கருதிக்கொள்ளப்பட்டன ஆகாமல் மொழிக்கு அடிப்படையாக இன்றியமையாதவை என்றும் துணியலாம்.

ஆட்டோ யெஸ்பர்ஸன் என்னும் மொழிநூலாசிரியர் இவை திராவிட மொழியிலிருந்து வடமொழி கொண்டவை என்று கருதாமல் நாளடைவில் மக்கள் இத்தகைய ஒலிகளை ஒலிக்கக் கற்றல் இயல்பு என்றும், ஒலிகள் சில வர வர இவ்வாறு மாறிவிடுதல் உண்டு என்றும், அமெரிக்க மொழிகளிலும் இவை காணப்படுகின்றன என்றும் கூறுவர்.[1]

க, ச, ட, த, ப: வெடியின ஒலிகள் (Plosive consonants or stops)

இவற்றை ஒலிக்க இருவகை முயற்சி இன்றியமையாதன: (i) ஒலிக்கும் கருவிகள் ஒன்றோடொன்று பொருந்தல் வேண்டும்; (ii) உடனே அவை பிரிதல் வேண்டும். அப்போது வெளிப்படும் மூச்சு வெடிபோல் ஒலிக்கும்.[2] எடுத்துக்காட்டாகப் பகரத்தை ஒலிப்பதானால், இதழ்களை முன்னர்க் குவித்துப் பொருத்தி உடனே பிரித்தல் வேண்டும். எனவே பிரித்தபின் வெளிப்படும் மூச்சு, சிறிது வேறுபட்ட மற்றோர் ஒலியையும் விளைத்தல் காணலாம். அவ்வொலி ஒருவகை உயிராக இருத்தலையும் உணரலாம்.

---

1. It is easy to admit that natives accustomed to one place of articulation of their *d*, *t*, *n* will unconsciously produce the *d*, *t*, *n* of a new language they are learning in the same place; but then they will do it everywhere. This may have happened in India quite independently of the occurrence of the same sounds in other vernaculars. —Jespersen, Language Its Nature etc. p. 196.

2. If we place the tounge or the lips (or the glottis) so as to leave no exit, and allow the breath to accumulate behind the closure, and then suddenly open the closure, the breath will come out with a slight pop or explosion; sounds formed in this way are stops (plosives, explosives).—Bloomfield, Language, p. 97.

ஒரு வேறுபாடு இங்குக் கருதத்தக்கது. பழம் என்பதில் முதல்மெய்யாகிய ப் என்பதை ஒலிக்கும்போது அழுத்தமும் வெளிப்பாடும் ஒருமுறை நேர்கின்றன. அப்பன் என்பதில் பகரம் இரண்டு இருப்பதால் அவை இருமுறை நேரும் என்று கொள்ளலாகாது. இவ்வாறு இரட்டித்து நீண்டு வரும் இடங்களிலும் ஒருமுறையே அழுத்தமும் வெளிப்பாடும் நேர்கின்றன.

'வரப்' என்று நிறுத்தினல் பகரம் நன்கு ஒலிக்காமையும், இதனைப் பிரித்து 'வரப்பு' என மூச்சுவிட்ட பிறகே பகரம் ஒலித்தலும், அவ்வாறு மூச்சுவிடுவதற்குத் துணையாக உகரம்போன்ற உயிரொலி உதவுதலும் காணலாம். அவ்வுயிரொலியையே தமிழர் குற்றியலுகரம் என்பர். அக்குற்றியலுகரம் வல்லினத்தை ஊர்ந்து வரும் என்றதன் உண்மையும், அது உயிரெழுத்தாகிய உகரத்தின் வேறுபட்ட சார்பெழுத்து என்றதன் உண்மையும் இதனை விளக்குகின்றன.[1]

ஓரினமாதல் (Assimilation)

வேறுபட்ட மெய்கள் இரண்டு அடுத்து வரும்போது, அவற்றுள் ஒன்று மற்றொன்ருகவோ, அதன் இனமாகவோ திரிதல் உண்டு. இது ஓரினமாதல் எனப்படும்.

மரம்+கொம்பு >மரக்கொம்பு —மகரம் ககரமாதல்
மரம்+தெரிந்தது>மரந்தெரிந்தது—மகரம் நகரமாதல்

இத்தகைய மாறுதல்களுக்கு ஒலிப்பவரின் மனநிலை காரணம் அன்று; ஒலிக்கும் உறுப்புக்களின் அமைப்பே காரணமாகும்.[2] ஓர் இடத்தில் ஓர் ஒலி பிறந்த பிறகு,

---

1. நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி ஈற்றும்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே. —தொல். எழுத். ௩.

2. Quite commonly, consonant-clusters change by way of assimilation: the position of the vocal organs for the

அடுத்த ஒலி பிறக்கும் இடம் தொலைவில் இருந்தால், முயற்சி பெருகும்; அடுத்த ஒலி பிறக்கும் இடம் அண்மையில் அமைந்தால் முயற்சி சுருங்கும்; இரண்டும் ஓரிடமாகவே அமையின், முயற்சி மிக எளிதாகும். ] ஆகவே, ஒலிப்பவரின் விருப்பு வெறுப்பைக் கடந்து, உறுப்புக்களின் முயற்சி எளிதாகும் வகையில் மாறுதல் தானாகவே நடைபெறுகிறது. தொடக்கத்தில் மாறுதல் அனைவராலும் வரவேற்கப்படாது; புதுமை போலத் தோன்றும். ஆயின் சில முறை ஒலிக்கப்பட்டுப் பழக்கத்தில் வந்த பிறகு, அனைவராலும் பின்பற்றப்படும். நாகரிக வாழ்க்கையில் காணப்படும் மாறுதல்கள்—உடை அணி முதலியவற்றின் மாறுதல்கள்—முதலில் புதுமையாக உணரப்பட்டு, பிறகு நாளடைவில் பழக்கமாகிவிடுதல் போலவே, ஒலி மாறுதல்களும் பழகிவிடுவனவாகும்.

எடுத்துக்காட்டாக இன்று பழகி வழங்கும் சொற்கள் பலவற்றில் ஓரினமாதல் என்ற விதி இயற்கையாகப் பொருந்தியிருத்தலைக் காணலாம்.

இன்று மேம்பாடு உடம்பாடு என்னும் சொற்கள் மேன்பாடு உடன்பாடு என்பவற்றின் திரிபுகளே.[1]

மாந்தரன் சேரல் > மாந்தரஞ் சேரல்
வன்சினம் > வஞ்சினம்

---

production of one phoneme is altered to a position more like that of the other phoneme.—Bloomfield, Language, p. 372.

1. The Latin '*centum*' represents an older '*cemtum*', just as English '*hundred*' represents a more ancient '*humdred*'. It requires little discernment to realise that the successive articulation of two different consonants, one at the lips (m), the other at the teeth (t), requires more muscular exertion than that of two consonants at the same place (viz., *n* and *t*).—T. G. Tucker, Introduction to the Natural History of Language, p. 336.

முதலிய திரிபுகளையும் காணலாம். நன்செய் புன்செய் முதலான சொற்களை நஞ்செய் புஞ்செய் என்றே பலர் ஒலிக்கின்றனர்; சிலர் அவ்வாறே எழுதவும் எழுதுகின்றனர். நற்கீரனார், நற்பூதனார், நற்செள்ளையார் முதலான பெயர்கள் நக்கீரனார், நப்பூதனார், நச்செள்ளையார் எனத் திரிந்து, திரிபுகளே இயல்பான வடிவங்கள்போல் தோன்றுதலும் காண்க.

இம் மாறுதலில் சில எங்கும் விதியாக வருவன (established), சில ஒரோவழி வருவன (accidental).

எங்கும் வருவன —உருள்+து>உருட்டு
ஒரோவழி வருவன—சோழ+நாடு>சோணாடு

நிலைமொழி ஈறு திரிதலும், வருமொழி முதல் திரிதலும், இரண்டும் திரிதலும் என மூவகை உண்டு. ஒன்றை அடுத்து மற்றொன்றாக, இருவேறு மெய்களை ஒலிக்கும்போது, நா முதலிய உறுப்புக்கள் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு மாறவேண்டியுள்ளது. அந் நிலையில், அடுத்துவரும் ஒலி வலியதாயின், முன் நின்ற ஒலியைத் தன் நிலைக்கு இழுத்து மாற்றிவிடும். அதுவே நிலைமொழி யீற்றின் திரிபு (regressive assimilation) எனப்படும்.[1] முதலில் உள்ள ஒலி செல்வாக்குடன் நின்று அடுத்து வரும் ஒலியைத் தனக்கு ஏற்ப மாற்றுதலும் உண்டு. அது வருமொழி முதல் திரிபு (progressive assimilation) எனப்படும்.[2] இருவகை ஒலியும் ஓரளவு விட்டுக்கொடுத்து இரண்டிற்கும் பொதுவான மற்றோர் ஒலியாகத் திரிதலும் உண்டு. அது நின்ற ஒலியும் வந்த ஒலியும் இயைந்த இயைபு (reciprocal assimilation) எனப்படும்.

1. ஆங்கிலத்தில் இது Anticipatory assimilation என்றும் கூறப்படும்.

2. இது lag என்றும் குறிக்கப்படும்.

(i) முள்+செடி>முட்செடி—regressive
(ii) என்+தம்பி>என்றம்பி—progressive
(iii) கல்+தூண்>கற்றூண்—reciprocal

வேறுபட்ட ஒலிகளை இவ்வாறு இணைத்து ஓரினமாக்குதற்கு மாறாக, ஓரினமாக உள்ள ஒலிகளை வேறுபடுத்திவிடும் முறையும் (dissimilation) சில மொழிகளில் உண்டு. (peregrinus) என்ற லத்தீன் சொல்லில் ரகரம் இருமுறை வந்த நிலை மாறி, ஆங்கிலத்தில் (pilgrim) என லகரமும் ரகரமுமாக அமைந்தது காண்க.

அண்ண ஒலி ஆதல்: (Palatalisation)

இ, ஈ, ஐ என்னும் உயிரொலிகளை அடுத்துவரும் தகரம், அண்பல்லைப் பொருந்தி நா நிற்கும் நிலையிலிருந்து, அவ்வுயிரொலிக்குரிய முன்னண்ணத்தை நோக்கிப் பெயர்தலால் சகரமாகத் திரியும். முன்னண்ணத்தை நோக்கிப் பெயர்தற்குக் காரணம், அவ்வுயிர்கள் அங்குப் பிறத்தலே ஆகும்.[1] பல்லினத்தைச் சார்ந்த நகரமும் இவ்வாறே முன்னண்ண இனமாகிய ஞகரமாகத் திரியும்.[2] இவற்றை இலக்கண நூலார் போலி என்பர்.

சிரித்த>சிரிச்ச வைத்த>வைச்ச
கிழிந்த>கிழிஞ்ச ஐந்நூறு>ஐஞ்ஞூறு

---

1. During the production of a consonant the tongue and lips take up, so far as is compatible with the main features of the phoneme, the position of a front vowel, such as *i* or *e*. —Bloomfield, Language, p. 117.

Consonants are often assimilated to the tongue-position of the preceding or following vowels. The commonest case is the assimilations especially of dentals and velars to a following front vowel: This is known as palatalization.
—Ibid. 376.

2. ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகான் உறழும் என்மரும் உளரே (நன். எழு. 124)
எனப் பவணந்தியார் நகரம் ஞகரமாவதற்கு மட்டும் விதி வகுத்துள்ளார்.

கை>செய் (தெலுங்கு) முதலிய திரிபுகளும் இதன் பாற்படும்.[1]

பல்லின ஒலி ஆதல் (Dentalisation)

பற்று >பத்து, விற்றான்>வித்தான் (பேச்சுத் தமிழ்)
மண்ணு>மந்நு (தெலுங்கு), கண்ணு>கந்நு (தெலுங்கு)

ற, ண இவற்றை ஒலித்தல் அருமையாதலின், நாவைப் பின்னோக்கிக் கொண்டுசெல்லாமல், அண்பல்லடியுடன் பொருத்தியே ஒலித்தலினால், இவ்வாறு அவை த ந ஆகின்றன. முயற்சிச் சுருக்கமே இத் திரிபுக்குக் காரணம்.

இதழொலி ஆதல் (Labialization)

வருமொழி முதலொலி இதழொலியாக இருக்குமிடத்து, நிலைமொழியீற்று மெய் அதற்கு ஏற்ப இதழொலியாக மாறுதல் உண்டு.

கால்+பு>காம்பு: லகரம் பகரத்திற்கு ஏற்ப மகரமாயிற்று.

மடிநாவொலி ஆதல் (retroflexion)

நிலைமொழியீறு மடி நா ஒலியாக இருக்குமிடத்து, வருமொழி முதலில் உள்ள மெய்யும் அதற்கு ஏற்ப மடி நா ஒலியாகத் திரிதல் உண்டு.

காண்+து >கண்டு
சுருள்+து >சுருட்டு
வாழ் +நாள் >வாணாள்

---

1. பழைய ஆங்கிலத்தில் ககரத்தோடு இருந்த சில சொற்கள் இன்றைய ஆங்கிலத்தில் ககரத்திற்கு ஈடாகச் சகரம் பெற்று நிற்றலை எடுத்துக்காட்டுபவர் புளூம்பீல்ட். (Language, p. 377)

| பழைய ஆங்கிலம் | இன்றைய ஆங்கிலம் |
|---|---|
| ciese (kiese) | cheese |
| cinn (kin) | chin |
| drencean (drenkan) | drench |
| stice (stike) | stich |
| brycg (brygg) | bridge. |

ஒற்றளபெடை

மெய்யெழுத்துக்கள் தனித்து (உயிருடன் கூடாது) நிற்கும்போது மாத்திரை பெறும். அப்போது அரை மாத்திரை அளவு ஒலிக்கும். உயிருடன் கூடின், அவ் வுயிரின் அளவாகவே ஒலிக்கும்.

செய்யுளில் இசைநீட்டம் வேண்டினல், அந்த மெய் ஒரு மாத்திரையளவாகவும், மிகுதியாகவும் நீண்டு ஒலிக்கும். அதன் அறிகுறியாக அதனையடுத்து அந்த மெய் வரையப்படுகிறது.[1]

"பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே."[2]

ஒலித்திரிபுகளுள் ஒலியளவின் நீட்டம் என்ற திரிபாக இதனைக் குறிப்பிடுகிறார் புளூம்பீல்ட். பின்னிஷ் முதலான சில மொழிகளில் மெய் இவ்வாறு நீண்டொலித்தலை எடுத்துக்காட்டுகிறார்.[3]

அநுஸ்வாரம்

இது வடமொயில் உள்ள மூக்கொலியாகும். தமிழில் மூக்கொலியாகிய மெய்கள் பல (ங ஞ ண ந ம ன) இருக்கின்றன. ஆயின், வடமொழியில் உள்ள அநுஸ்வாரம் இங்கு இல்லை.

தெலுங்கிற்கே சிறப்பாக உரியதும் மிக நுண்ணியதும் ஆகிய மூக்கொலி அர்த்தாநுஸ்வாரம் எனப்படுவது. அதுவும் தமிழில் இல்லை. வாடு-வாண்டு என்னும் இரண்டிற்கும் இடைப்பட்ட வா○டு என்று ஒலிக்க அர்த்தாநுஸ்வாரம் தெலுங்கில் பயன்படுகின்றது.

---

1. அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனர் புலவர்.-தொல். எழுத். ௩௩.

2. கலித்தொகை. 11. 3. Language, p. 110.

அ + கடல் >அக்கடல்<br>
பசி + துன்பம்>பசித்துன்பம்<br>
புலி + தோல் >புலித்தோல்

இவை, க ச த ப மிகும் இடம், மிகா இடம் என்னும் இலக்கணப் பகுதியில் விரிவாக ஆராயப்படும். பொருள் நோக்கி மிகுதலும் மிகாமையும் உண்டு ஆதலால் தொகைச் சொற்கள் வேற்றுமைப் பொருளவா, அல்வழிப் பொருளவா எனப் பகுத்துணர்தல் வேண்டும்.

கன்னடத்தில் இவ்வாறு வருமொழி முதலில் வந்த வல்லினம் மிகாமல் மெல்லினமாக ஒலித்து நிற்றல் உண்டு.

(புலி+தோல்) ஹுலி+தொகலு (huli togalu)<br>
>ஹுலிதொகலு (hulidogalu)

தமிழிலும் அத்தகைய தொகைகள் உள்ளன.

காய்+கொம்பு>காய்கொம்பு (காய்க்கின்ற கொம்பு)

(காய்கொம்பு என்ற இத்தொகை வினைத்தொகை. வல்லினம் மிகின் காய்க்கொம்பு என வேற்றுமைத் தொகையாய், காயினையுடைய கொம்பு எனப் பொருள் வேறுபடும்.)

மெய் இடம் பெயர்தல்
(Metathesis, Euphonic displacement of consonants)

விரைவு காரணமாகவும் ஒலிநயம் காரணமாகவும், ஒரு சொல்லில் மெய்யெழுத்துக்கள் தம்முள் மாறி இடம் பெயர்தல் உண்டு.[1] பெரும்பான்மை பேச்சிலும் சிறு பான்மை இலக்கியத்திலும் காணப்படும்.

| | |
|---|---|
| இடறி >இரடி | கொப்புளம்>பொக்களம் |
| தசை >சதை | விசிறி >சிவிறி |
| வைசாகி >வைகாசி | |

1. Metathesis is the interchange of two phonemes within a word.—Bloomfield, Language, p. 371.

குதிரை > குர்தை > குர்ரம் (தெலுங்கு)
கொப்பூழ் > பொக்கிலி (தெலுங்கு)
> பொக்குழ் (மலையாளம்)
பொக்கிழ் ( ,, )
படர் > பாடு (கன்னடம்)

இவ்வாறு சில ஒலிகள் இடம் மாறி அமைவதற்குக் காரணம் முயற்சிச் சுருக்கம் அன்று; இன்ன சொல்லின் ஒலிகளை ஒலிக்கவேண்டும் என்று மூளை விரைந்து உறுப்புக்களுக்குக் கட்டளை பிறப்பிக்க, உறுப்புக்கள் அந்த ஒலிகளை விரைவுடன் ஒலிக்கும்போது, முறை மறந்து தவறு செய்தல் உண்டு என்றும், அத்தவறே இத்தகைய இடமாறுதலுக்குக் காரணம் என்றும் கூறப்படும்.[1] இவ்வாறு முறை பிறழ்ந்து இடம் மாறிய ஒலி, நயமாக அமைந்து விடுதல் உண்டு; ஒலிநயம் அமைந்ததாயின், சிலரிடம் தோன்றிய இந்தப் புதிய ஒலிமுறை பலரிடமும் எளிதில் பரவிப் பழகிவிடும். இத்தகைய மாறுதல் பெரும்பான்மை ச அல்லது ர என்னும் ஒலிகளில் நிகழும் என்பர் அறிஞர் யெஸ்பர்ஸன்.

அடிச்சொற்களில் மெய்கெடல்
(Rejection of Radical consonants)

தெலுங்கிலும் கன்னடத்திலும் அடிச்சொற்களின் இடையில் உள்ள ர, ல, ழ முதலிய மெய்கெடுதல் உண்டு. தமிழிலும் துளுவிலும் சில உண்டு. கெடுவன வல்லொலி களும் அல்ல; மூக்கொலிகளும் அல்ல; இடையின ஒலி களே ஆகும்.

---

1. The simplest and most frequently occurring cases in which the order for a sound is issued too early or too late are those transpositions of two sounds which the linguists term 'metathesis'. They occur most frequently with *s* in connection with a stop (*wasp, wasps*), and with *r* and with a vowel. —Otto Jespersen - Language, Its Nature etc. pp. 280. 281.

தெலுங்கு :

மருந்து >மந்து
விருந்து >விந்து
திருத்து >தித்து
பருப்பு >பப்பு
நெருப்பு >நிப்பு
பொழுது>பொத்து (தமிழ்-போது)
எருது >எத்து (eddu)

உடல்>ஒள்ளு என்ற தெலுங்கு மொழித் திரிபில் வல்லின மெல்லொலியாகிய டகரமும் அவ்வாறு ஆயிற்று.

கொழுப்பு, கொழுமை>கொவ்வு, கொப்பெ (kobbe).

கன்னடம்:

மருந்து >மத்து (பழங்கன்னடம்—மருது)
எருமை >எம்மெ

தமிழ் :

அரும்பல் >அம்பல்
பெருமான் >பெம்மான்
நெருநல் >நென்னல்
உருண்டை >உண்டை[1]

துளு :

கொழுமை>கொம்மெ

**அசை கெடல் (Haplology)**

ஒரே ஒலியுடைய அசைகள் இரண்டு ஒரு சொல்லிலோ தொடரிலோ வரின், ஓரசை கெடுதல் உண்டு.[2]

அருமருந்தன்ன >அருமந்த
ஆதன் தந்தை >ஆந்தை
பூதன் தந்தை >பூந்தை

இவற்றை இலக்கண நூலார் மரூஉ என்பர்.[3]

---

1. வே. வேங்கடராஜுலு ரெட்டியார், கபிலர்.
2. தொல். எழுத்து. ககக, சஅரு.
3. நன்னூல், 267.

அருமருந்தன்ன என்பதில் ரு ஒலி இருமுறை வந்துள்ளமையும், ஆதன் தந்தை பூதன் தந்தை என்பவற்றுள், ஒவ்வொன்றிலும் தன் (தந்) ஒலி இருமுறை வந்துள்ளமையும் காண்க. வரும் ஒலி ஒருமுறை ஒலிக்கப்பட்டவுடன், அந்த ஒலி இரண்டாம் முறையும் ஒலிக்கப்பட்டு முடிந்ததாக மூளை தவறாக உணர்ந்து அடுத்த ஒலிக்கு விரைகின்றது. அதனால் நா முதலியவை அந்த ஒலியை இரண்டாம் முறையாகத் திரும்ப ஒலிக்காமல் அடுத்த வேறு ஒலியை ஒலிக்கின்றன.[1] இதுவே அசை கெடலுக்குக் காரணமாகும்.

உயிர் தோன்றல் (Anaptyxis)

ஒலித்தற்கரிய மெய்களிடையே ஒலித்துணையாக உயிர் தோன்றும்.

சொல்+கிறு+ஆன்>சொல்லுகிறான்.
வெல்+வ்+ஆன்>வெல்லுவான்

வடசொற்கள் சில இணைந்தியலும் மெய் பெற்றிருப்பன தமிழில் புகுங்கால், அகரம் இகரம் உகரம் என்பனவற்றுள் ஒன்று பெறும்.[2]

| | | |
|---|---|---|
| வாக்யம்>வாக்கியம் | } | யரல முன் இகரம் பெற்றன |
| வச்ரம் >வச்சிரம் | | |
| சுக்லம் >சுக்கிலம் | | |
| பத்மம் >பதுமம் | } | மவ முன் உகரம் பெற்றன |
| பக்வம் >பக்குவம் | | |

---

1. If the mind does not realize how far the vocal organ have got, the result may be the skipping of some sound or sounds; this is particularly likely to happen when the same sound has to be repeated at some little distance, and we then have the phenomenon termed 'haplology.' e.g. simplely>simply; Englaland>England.—Otto Jespersen, Language, Its Nature etc. pp. 281, 329.

2. இணைந்தியல் காலை யரலக் கிகரமும்
மவ்வக் குகரமும் நகரக் ககரமும்
மிசைவரும்; ரவ்வழி உவ்வு மாம்பிற. —நன். எழு. 149.

உயிர்கெடல் (Syncope)

இது மேலே கூறிய உயிர் தோன்றல் என்பதற்கு மாறானது ; இடையே உள்ள உயிர் கெடுவதாகும்.

போகும் >போம்
போலும் >போல்ம்>போன்ம்
கலுழும் >கலுழ்ம்[1]

ஐரோப்பிய மொழிகளில் இது மிகுதியாய்க் காணப் படும்.[2]

மொழிமுதல் துணை (Prothesis)

ர ல முதலிய மெய்களை மொழிமுதலாக உடைய பிற மொழிச் சொற்கள் தமிழில் புகுங்காலத்தில், அ இ உ என்னும் உயிர்களில் ஒன்று முன் நிற்கப்பெறும்.[3] ர ல் முதலிய மெய்களை மொழி முதலாக ஒலித்தல் அரிய முயற்சியாதலின், அம் முயற்சியை எளிதாக்கும்பொருட்டு இவை வந்து முன்நிற்கும்.

ரங்கம் >அரங்கம்
லாபம் >இலாபம்
லோகம் >உலோகம்

---

1. செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொடும் கெடுமே ஈற்றுமிசை உகரம் ;
அவ்விடன் அறிதல் என்மனார் புலவர்.
—தொல். சொல். 238.

2. The effect of simplification appears most plainly in shortening and loss of vowels. —Bloomfield, Language, p. 381.

3. ரவ்விற்கு அம்முத லாமுக் குறிலும்
லவ்விற்கு இம்முதல் இரண்டும் யவ்விற்கு
இய்யும் மொழிமுதல் ஆகிமுன் வருமே.
—நன். எழுத். 148.

## ௬. ஒலியளவு

ஒலியளவு

ஓர் எழுத்துப் பிறந்து நின்று முடியும் கால அளவே அதன் ஒலியளவாகும்.[1] ஒலிக்கும் உறுப்புக்கள் ஓர் ஒலியை ஒலிப்பதற்காக ஒரு நிலையில் நிற்கும் கால அளவே அவ்வாறு குறிப்பிடப்படுவதாகும். அதனைத் தமிழிலக்கண நூலார் மாத்திரை என்னும் பெயரால் ஓர் அளவு கொண்டு அளந்துள்ளனர். கண் இமைத்தல் அல்லது கைநொடித்தல் என்னும் தொழிற்கு உரிய கால அளவே ஒரு மாத்திரை எனப்படுவது.[2] "இயற்கைமகன் தன் குறிப்பின்றி இரண்டிமையும் ஒருகாற்கூடி நீங்கின காலக்கழிவும் அ எனப் பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும்" எனவும், "அது போலவே, நொடித்தற்றொழிலிற் பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக்கழிவும் அ எனப் பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும்" எனவும் நச்சினார்க்கினியர் விளக்கியுள்ளார். கண்ணிமை இயற்கையாக நிகழ்வதாலும், நொடித்தல் "உள்ளத்தான் நினைத்து நிகழ்"வதாலும், முன்னதே சிறப்புடையது என்பது அவர் கருத்து. அறிவியல் முன்னேற்றத்தால் இப்போது ஒலியை அளக்கும் புதுக் கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டு, அவற்றால் ஒலிகளை அளந்தறியும் வாய்ப்பு உள்ளது.

---

1. Duration (or quantity) is the relative length of time through which the vocal organs are kept in a position. —Bloomfield, Language, p. 109.

2. கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே.
—தொல். எழுத். எ.

In dealing with matters of quantity, it is often convenient to set up an arbitrary unit of relative duration, the mora.—Bloomfield, Language, p. 110.

இவ்வாறு அளக்கப்படும் ஒலிகளைப் பொதுவாக மூன்று வகைப் படுத்தலாம்.

1. ஒரு மாத்திரை ஒலிகள்
2. இரு மாத்திரை ஒலிகள்
3. ஒரு மாத்திரைக்குக் குறைந்த ஒலிகள்

குறில் ஒலிகள் ஒரு மாத்திரை அளவின.[1] நெடில் ஒலிகள் இரண்டு மாத்திரை ஒலிப்பன.[2] மெய்யொலிகள், குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் முதலியன ஒரு மாத்திரைக்கும் குறைவாக ஒலிப்பன.[3]

மெய்யொலிகளின் ஒலியளவு அரை மாத்திரை ஆகும்.[4] அவ்வாறு அரை மாத்திரை பெறுவது உயிருடன் கூடாது தனி மெய்யாய் நிற்கும்போதே யாகும். உயிருடன் கூடி உயிர்மெய்யாய் நிற்கும்போது, அம் மெய்க்கு ஒலியளவில்லை; உயிரின் அளவே உயிர்மெய்யின் அளவாகும்.[5] தனித்து நிற்கும் மெய் அரைமாத்திரையில் குறுகுதலும் உண்டு. மகரம் அவ்வாறு குறுகும்போது மகரக் குறுக்கம் எனப் பெயர் பெறும்.[6] அரை மாத்

---

1. அவற்றுள், அஇஉ
எஒ என்னும் அப்பால் ஐந்தும்
ஓரள பிசைக்குங் குற்றெழுத் தென்ப.-தொல். எழுத்.-௩.

2. ஆஈஊ ஏஐ
ஓஔ என்னும் அப்பால் ஏழும்
ஈரள பிசைக்கும் நெட்டெழுத் தென்ப. —ஷை—௪.

If we say that a short vowel lasts one mora, we may describe the long vowels of the same language as lasting, say, one and a half morae or two morae.—Bloomfield, Language, p. 110.

3 அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே. ஷை—௧௨.

4. மெய்யின் அளவே அரையென மொழிப. —ஷை—௧௧.

5. மெய்யோ டியையினும் உயிரியல் திரியா. —ஷை—௧௦.

6. அரையளவு குறுகல் மகரம் உடைத்தே
இசையிடன் அருகும் தெரியுங் காலை. —ஷை—௧௩.

திரைக்கு மேற்பட்டு மெய்யொலிகள் நீண்டு ஒலிக்கும் போது, ஒற்றளபெடை எனப்படும்.

சந்தியக்கரம் எனப்படும் ஐ ஔ இரண்டும் நெடிலின் அளவு பெறுவன.[1] ஆயின், தமிழில் உள்ள ஐ ஔ என்பன சந்தியக்கரம் எனக் கொள்ளத்தக்கன அல்லவாதலின், அய் அவ் என்னும் ஒலிகளின் அளவே பெரும்பாலும் பெறுகின்றன. அவ்வாறு ஒலியளவு குறைதல் உணர்ந்தே இலக்கண நூலார் சிலர் ஐகாரக் குறுக்கம், ஔகாரக் குறுக்கம் எனக் கொண்டுள்ளனர்.[2]

ஆங்கிலம் முதலிய சில மொழிகளில் குற்றுயிர்க்கும் நெட்டுயிர்க்கும் தனித்தனி எழுத்துக்கள் இல்லை. பிரெஞ்சு மொழியில் நெட்டெழுத்துக்கள் என வேறாக இல்லையெனினும், உயிரொலிகளுள் நெடிலாக ஒலிக்கும் இடங்கள் தெளிவாக அமைந்துள்ளன. பெரும்பாலும் மெய்யீற்றுச் சொற்களின் ஈற்றில் ஒலிக்கும் உயிர் நெடிலாக இருக்கும். ஆதலின், அவற்றில், உயிரெழுத்துக்கள் ஓரிடத்தில் நெடிலாகவும் மற்றோரிடத்தில் குறிலாகவும் மாறி ஒலிக்கும். தமிழில் வெவ்வேறு எழுத்துக்கள் இருத்தலால், பொருள் வேறுபாட்டுடன் ஒலியளவின் வேறுபாடும் தெளிவாக விளங்கக் காண்கிறோம்.

---

1. The diphthongs are of the same length as the "long" vowels,—D. Jones, An Outline of English Phonetics, p. 104.

2. தற்சுட் டளபொழி ஐம்மூ வழியும்
நையும் ; ஔவும் முதலற் றாகும். —நன்னூல். 95.
அளபெடை தனியிரண் டல்வழி ஐஔ
உளதாம் ஒன்றரை ; தனிமையு மாகும்.
—அவிநயனார், யாப்பருங்கலவிருத்தி, 2.

3, Bloomfield, Language, p. 110,

## ரு. ஒலியழுத்தம்

[நுரையீரலிலிருந்து எழும் காற்றை வன்மையுடன் வெளிப்படுத்துதலே ஒலியழுத்தத்திற்குக் காரணம் என்பர்.[1] ஓர் உறுப்பின் வன்மையான முயற்சி மட்டும் அன்று, ஒலியுறுப்புக்கள் எல்லாம் வன்மையுடன் செய்யும் முயற்சியே அதற்குக் காரணம் என யெஸ்பர்ஸன் விளக்கு கின்றார்.[2] அதனால்தான் அழுத்தமாக ஒலிக்கப்பட்ட ஒலிகள் மட்டும் தொலைவில் உள்ளார்க்கும் கேட்பனவாய் உள்ளன.] மற்றைய ஒலிகளை ஒலிக்கும்போது உறுப்புக் கள் இத்தகைய முயற்சியின்றி எளிதில் ஒலிக்கின்றன.

வெறுப்பு, வெகுளி முதலிய கடுமையான உணர்ச்சி களுடன் பேசும்போது சில சொற்கள் இவ்வாறு வன்மை யாக ஒலிக்கப்படுகின்றன.

எள்ளல், நகைத்தல், மறுத்தல், உடன்படல் முதலிய வற்றின்போது ஒலிக்கப்படும் ஒலிகளிலும், சில மாறுதல் கள் காணப்படும்; பலவகை உணர்ச்சிகளுக்கு ஏற்ப, ஒலிக்கும் உறுப்புக்களின் முயற்சியில் வேறுபாடு நிகழ் கின்றது.

பொருளுணர்ச்சியில் அமைந்துள்ள சிறு சிறு வேறு பாடுகள் காரணமாகவும், சொற்களின் ஒலிமுறையில் நுண்ணிய வேறுபாடுகள் உள்ளன.

ஆங்கிலம் முதலான மொழிகளில் ஒரு சொல்லில் பல அசைகள் இருந்தால் அவற்றுள் ஒன்றை எடுத்தும், மற்ற

---

1. Stress, that is intensity or loudness, consists in greater amplitude of sound-waves, and is produced by means of more energetic movements, such as pumping more breath, bringing the vocal chords closer together for voicing, and using the muscles more vigorously for oral articulations.—Bloomfield, Language, p. 110.

2. Otto Jespersen. Language, etc., pp. 271–2.

வற்றைப் படுத்தும் நலிந்தும் ஒலிப்பர்.[1] தமிழில் அத்தகைய வேறுபாடின்றி எல்லா அசைகளையும் ஒரே வகையாக ஒலிக்கின்றனர் என்பது சிலர் கருத்து.[2] எடுத்தொலிக்க வேண்டிய இடங்களில் தமிழ்ச் சொற்களுடன் ஏகாரம் முதலிய இடைச்சொற்களைச் சேர்த்து வழங்குவதாகவும் அவர் கூறுவர். உண்மையை ஆராய்ந்தால், அவர் கருத்துப் பொருந்தாமை தெரியவரும்.

ஐரோப்பிய மொழிகளிலும் எல்லா மொழிகளிலும் ஒரே வகையான ஒலியழுத்தமுறை இல்லை. ஆங்கில மொழியிலும் ஆங்கிலேயரின் பேச்சில் உள்ள ஒலியழுத்தமும் அமெரிக்கரின் பேச்சில் உள்ள ஒலியழுத்தமும் வேறுபடுகின்றன[3]

பொதுவாக, ஐரோப்பிய மொழிகளில் உள்ளவாறு அவ்வளவு மிகுதியாக ஒலியழுத்தம் (stress) திராவிட மொழிகளில் இல்லை என்று கூறலாம். ஆனால் திராவிட மொழிகளிலும் அது ஓரளவு அமைந்திருக்கின்றது. தமிழ் மொழியில் அது அமைந்திருத்தலை இலக்கண நூலாரும் உரையாசிரியரும் குறித்திருக்கின்றார்கள்.[4]

---

1. ஆங்கிலத்தில் increase என்ற சொல் பெயராயின் முதலசையை எடுத்தொலிப்பர்; வினையாயின் இரண்டாம் அசையை எடுத்தொலிப்பர்.

2. பிரெஞ்சு மொழியில் இத்தகைய நிலையே உள்ளது. Edgar H. Sturtevent, An Introduction to Linguistic Science, p. 14.

Also, Bloomfield, Language, p. 111.

3. The English and the Amarican differ in stress and pitch also.—Bloomfield, Language, p, 114.

4. எடுத்தல் படுத்தல் நலிதல் உழப்பின்
திரிபும் தத்தமில் சிறி துள வாகும்.—நன்னூல், எழுத். 88.

'வந்தனன்' எனத் தெரிநிலை, தொழின்மை மேற்படத் தொழிலுடைப் பொருள் கீழ்ப்பட முற்றாய் நின்றுணர்த்தியவாறு

எடுத்தல், படுத்தல், நலிதல் என்னும் வேறுபாடுகள்[1] மிக நுண்ணிய முறையில் இருத்தலால் அவற்றைப் பிற மொழியினர் உணர்தல் எளிதன்று. ஆயினும் கால்டுவெல் உணர்ந்து அதன் உண்மையை உடன்பட்டிருக்கின்றார். அவர் கருத்துப்படி, ஒரு சொல்லின் முதலசையை எடுத்தும், பிற அசைகளைப் படுத்தும் ஒலிக்கின்ற முறை தமிழ் முறையாகும். தொகைச்சொற்களில் நிலைமொழியின் முதலசையை மிக எடுத்தும், வருமொழியின் முதலசையை ஓரளவாக எடுத்தும் ஒலித்தல் மரபு. 'அடங்குகிறது' என்ற சொல்லில் 'அட' என்ற முதலசையில் எடுத்தலோசை அமைந்தமை காண்க. ஆனால் 'ஓடுவான்' என்ற சொல் வினைமுற்றாயிருக்கும்போது முதலசையில் எடுத்தலோசையும், அதுவே வினையாலணையும் பெயராக நிற்கும்போது ஈற்றசை பாலுணர்த்தும் சிறப்பால் அதன்கண் எடுத்தலோசையும் அமைந்திருத்தல் காண்க.

தமிழில் முதனிலைத் தொழிற்பெயரென்றும், முதனிலை திரிந்த தொழிற்பெயரென்றும் ஒரு வேறுபாடு காணப்படுகின்றது. பிடி, அடி முதலியன முதனிலைத் தொழிற்பெயர்கள். ஊன், கேடு முதலியன முன்னிலை திரிந்த தொழிற்பெயர்கள். உண், கெடு என்னும் அடிச்சொற்களைப் பொருள் வேறுபடுமாறு எடுத்தொலித்த

போல, 'உடையன்' எனக் குறிப்புவினையும் உடைமை மேற்பட உடையான் மேற்பட முற்றாய் நின்றுணர்த்துதலுங் கொள்க. 'வந்தான்' 'உடையான்' எனப் பெயராயவழித் தொழிலுடைப் பொருளும் உடையானும் மேற்பட்டுத் தோன்றுமா றறிக.

—சேனாவரையர், தொல். சொல். உகடு

1. There are many degrees of stress; but for practical purposes it is sufficient to recognize three at most, which we may call primary, secondary and weak. Weakly stressed syllables may be termed unstressed.—G. Noel Armfield, General Phonetics, p. 54.

காரணத்தால் நாளடைவில் அவற்றின் உயிர் நீண்டு, ஊண், கேடு எனத் திரிந்தன எனலாம். பிடி, அடி முதலியவற்றில் அவ்வாறு எடுத்தலோசை சிறக்காமையால், அவை உயிர் நீளாமல் நின்றன எனலாம். இவ்வாறு எடுத்தல் முதலிய வேறுபாடுகளால் சொற்களின் உருவமும் திரியக் காண்கின்றோம்.

'போகிறான்' என்ற சொல்லை 'போறா' என ஒலிக்கின்றனர். இங்கும் ஓசை வேறுபாட்டால் சொல் லுருவம் மாறுதலைக் காணலாம். 'போ' என்னும் பகுதியில் எடுத்தலோசை இருத்தலால் அது மாறவில்லை. 'கிறான்' என்ற மற்ற அசையில் எடுத்தலோசையின்றிப் படுத்தலோசையும் ஈற்றில் நலிதலோசையும் அமைந்தமையால் 'றா' தெளிவாகக் கேட்க, இடைநிலையின் ககரமெய்யும் இகர உயிரும் இறுதி னகரமெய்யும் மறைகின்றன. ஆயினும் அதன் அறிகுறியாக 'றா' என்பதில் உள்ள ஆகார உயிர் மூக்கின் உயிராக ஒலிக்கப்படுகின்றது.[1] இவ்வாறே வினைமுற்றுக்கள் பலவற்றில் பகுதியொழிந்த அசைகள் திரிந்தும் கெட்டும் போதலைக் காணலாம்.[2] வினைமுற்றுக்களின் பகுதிமட்டும் திரியாதும் கெடாதும் நிற்கும் காரணம், முற் கூறியவாறு எடுத்தலோசை அதனிடத்து நிற்றலேயாகும்.

பல அசைகளைக் கொண்டுள்ள ஒரு சொல்லில், அழுத்தமின்றி ஒலிக்கப்படும் உயிரொலிகள் முதலில்

1. மூக்கினமான மெய்கெடும் சொற்களில், அதனை அடுத்து நிற்கும் உயிர் மூக்கினமாக ஒலிக்கப்படும் என்பது ஒலி நூலார் கண்ட உண்மை. அதனால் "அவ(ன்) போறா" என்ற சொற்றொடரின் வினைமுற்றின் இறுதியில் உள்ள ஆகார உயிர் மூக்கினமாக ஒலிக்கிறது.

— Bloomfield, Language, p. 380.

2. In English, unstressed phonemes have been subjected to a series of weakenings and losses...Ibid, p. 364.

மென்மையாக ஒலிக்கப்பட்டு, பின்னர் நாளடைவில் ஒலிக்கப்படாமலே போதல் உண்டு.[1] அவ்வாறு உயிரொலிகள் மறையும்போது, அவற்றைச் சார்ந்த மெய்யெழுத்துக்களும் மெல்ல மெல்ல ஒலிக்கப்படாமல் போகும். இத்தகைய மாறுதலால், நீண்ட பல அசைச்சொற்கள் குறுகிக் குறுகி ஓரசைச்சொற்களாகிவிடும். சீன மொழியில் ஓரசைச்சொற்கள் பெரும்பான்மையாக இருப்பதற்கும், ஆங்கில மொழியில் ஓரசைச்சொற்கள், மிகுந்துவருவதற்கும் காரணம் இதுவே. Strife, knife, stretched, pledged, strength, wealth முதலான ஆங்கிலச் சொற்களில் பல எழுத்துக்கள் இருந்தும், அவை ஓரசைச்சொற்களாகவே இருத்தல் கருதத்தக்கது.[2] தமிழ் முதலான மொழிகளில் நெடுங்காலமாகவே தெளிவாக வழங்கிவந்த ஒலிமுறை உள்ளது; தொன்று தொட்டே ஒலிமுறைப்படி அமைந்த எழுத்து முறையும் உள்ளது. உண்டோ இல்லையோ என்று ஐயுறக் கூடிய நிலையிலேயே எடுத்தல் படுத்தல் வேறுபாடுகள் நுட்பமாக அமைந்து அளவுகடந்து பெருகாமல் உள்ளன. அதனால் இம்மொழிகளில் பல வசைச்சொற்கள் ஓரசைச்சொற்களாக மாறும் மாறுதல் அவ்வளவாகக் காணப்படவில்லை. இரண்டு, நிரம்ப முதலான மூவசைச் சொற்கள் ரெண்டு, ரொம்ப என ஈரசைச்சொற்களாக ஒலிக்கப்படினும், அவை கொச்சை

1. Languages with strong word-stress often weaken or lose their unstressed vowels.—Ibid, 382.

2. What are the causes that have led to this predominant monosyllabism in English? In the first place we must here mention the tendency found in all languages, but stronger in English than in most other languages, to pronounce non-stressed vowels indistinctly and finally to leave them out altogether, if superfluous for the understanding.- Otto Jespersen, Linguistica. p. 386.

ஒலிகளாகவே கருதப்படும் நிலைமை உள்ளது. மகன் மகள் முதலான ஈரசைச் சொற்கள் மோன் மோள் என ஓரசைச்சொற்களாக மலையாளத்தில் ஒலிக்கப்படுதலும் கொச்சையாகவே கருதப்படுகிறது. உவகை ஓகை என்றும், சிதல் செல் என்றும் அசை குறைந்து திரிந்த திரிபுகள் சில தமிழில் உள்ளன. அவை சிறுபான்மையே ஆகும்.

செய்யுளில், மோனை எதுகை என்னும் தொடையமைந்த சொற்களின் முதலசைகள் மற்ற அசைகளை விட எடுத்தொலிக்கப்படுகின்றன. ஒவ்வோரடியிலும் பெரும்பான்மையும் முதற் சீரும் மூன்றும் சீரும் மோனையாக அமைதலின் அவற்றின் முதலசைகள் எடுத்தொலிக்கப் பெறும். ஒவ்வொரு செய்யுளிலும் அடிதோறும் முதலசையில் எதுகை அமைதலின் அம் முதலசைகளும் எடுத்தலோசை பெற்றவையாகும்.

ஒரு சொல்லின் ஒலியழுத்தத்தில், சொல்லின் முதனிலை இறுதிநிலைகளை எடுத்தும் படுத்தும் ஒலித்தல் உண்டெனக் கண்டோம். ஒரு வாக்கியத்திலும் இவ்வாறே ஒலியழுத்தம் (pitch) உண்டு.[1] வாக்கியத்தை ஒலிக்கும் போது, ஒரு சொல்லை எடுத்தும் ஒரு சொல்லைப் படுத்தும் ஒலித்துப் பொருள் வேறுபாடு உணர்த்தும் முறை தமிழில் உள்ளது. நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்திற்கு உரை செய்யும்போது பல சூத்திரங்களில் இவ்வாறு சொற்களை

1. We do not utter all the words of a sentence, nor all the syllables of a word, nor indeed, all the sounds of a syllable at the same musical level or pitch. This rise and fall in musical pitch is called, in the language of phonetics, intonation. Intonation very often seems to modify the meaning of a word or of a sentence.—O. Noel-Armfield, General Phonetics, pp. 67, 69.

எடுத்தும் படுத்தும் ஒலித்துப் பொருள் காண்கின்றார்.[1] பேச்சுவழக்கில் இம்முறை இயல்பாக அமைந்துள்ளது. "நான் பூனையைப் பார்த்தேன்" என்னும் வாக்கியத்தில் உள்ள மூன்று சொற்களில் ஒன்றை எடுத்தும் ஏனையவற்றைப் படுத்தும் ஒலித்து மூன்று வேறு வேறு பொருள்களை உணர்த்தலாம் :

(1) 'நான்' என்னும் எழுவாயை எடுத்தொலித்தால், "நான்தான் பார்த்தேன்; வேறு யாரும் பார்க்கவில்லை" என்று பொருள்படும்.

(2) 'பூனையை' என்னும் செயப்படுபொருளை எடுத்தொலித்தால், "நான் வேறொன்றையும் பார்க்கவில்லை; பூனையைமட்டும் பார்த்தேன்" என்று பொருள்படும்.

(3) 'பார்த்தேன்' என்ற சொல்லை மட்டும் எடுத்தொலித்தால், "நான் வேறொன்றும் செய்யவில்லை; பூனையைப் பிடிக்கவில்லை; வாளா பார்த்தேன்" என்று பொருள்படும்.

இது வாக்கிய ஒலியழுத்தம் எனலாம்.

வாக்கியம் முழுதினையும் ஒலித்திடும்போது எடுத்தல் படுத்தல் இல்லாமலும் ஒருவகை வேறுபாட்டை உண்டாக்கலாம். இதுவும் பேச்சுவழக்கில் இயல்பாக அமைந்தது "நீ சொன்னது மெய்" என்னும் வாக்கியத்தை ஒலிக்கும் வகையால் (1) நீ சொன்னது உண்மைதான் என்ற எளிய பொருளையும் (2) நீ சொன்னது பொய் என்ற எதிர்மறைப் பொருளையும் உணர்த்தலாம். இவ்வாறே ஒவ்வொரு வாக்கியத்திற்கும். எதிர்மறைப் பொருளை

1. முற்படக் கிளந்த என எடுத்தல் ஓசையாற் கூறவே, பிற்படக் கிளந்த எழுதிணை உளவாயிற்று.

—நச்சினார்க்கினியர், தொல். பொருள். ௧.

உணர்த்தும் ஒலிவகை உள்ளது. இந்த எதிர்மறைப் பொருளை எள்ளுங் குறிப்போடு கலந்து உணர்த்துதலும் உள்ளது. "நீ எவ்வளவு பெரியவன்!" என்னும் வாக்கியத்தை அவ்வாறு ஒலித்துக் காணலாம்.

"அவன் இங்கே வந்தான்" என்னும் வாக்கியம் செப்பாக வழங்குவதே பெரும்பான்மை. ஆயின், அந்த வாக்கியத்தை ஒலிக்கும் வேறுபாட்டால், "அவன் இங்கே வந்தானோ?" என்ற வினாவாகப் பொருள் பயக்கச் செய்யலாம். இவ்வாறே, ஆ ஓ என்ற வினா இடைச்சொல் இல்லாமல், "நீ வந்தாய்" முதலான வாக்கியங்களை வேறுபட ஒலித்து "நீ வந்தாயா" முதலான வினாப்பொருளை உணர்த்தலாம்.

"அவன் பேசினான்" என்ற வாக்கியத்தை,

அவன் பேசினான்.
அவன் பேசினான்?
அவன் பேசினான்!

என மூவகைப் பொருளில் பயன்படுத்தலாம். அவனுடைய செயலை எடுத்துரைப்பது முதல் வாக்கியம். செயலைப் பற்றிக் கேட்டறியும் வினா இரண்டாம் வாக்கியம். அவன் பேசியிருக்கமாட்டானே, அவன் எப்படிப் பேசினானோ தெரியவில்லையே என்ற வியப்பைப் புலப்படுத்துவது மூன்றும் வாக்கியம்.

இவ்வாறு எதிர்மறைப் பொருளும் எள்ளல் பொருளும் வினாப் பொருளும் வியப்புப் பொருளும் உணர்த்தும் இடைச் சொற்கள் இன்றியே அவ்வப்பொருள் உணர்த்தப்படல் காணலாம். அவ்வப்பொருளை உணர்த்துவது ஒலி வேறுபாடே ஆகும்.

சொற்களிலும் வாக்கியங்களிலும் உள்ள இத்தகைய ஒலியழுத்தங்களையும் (stress, pitch) சில மொழிகளில் முதலொலிகளாகவும் சில மொழிகளில் வகையொலிகளாகவும் கொள்ளலாம் என்கிறார் அறிஞர் புளூம்பீல்ட்.[1] பேச்சு மொழியில் அவை அத்துணை இன்றியமையாதனவாக இருக்கின்றன.

"இல்லை" என்ற சொல்லையே வெவ்வேறு பொருளுணர்ச்சிக்கு ஏற்றவாறு வெவ்வேறு வகையாக ஒலிக்கக் கேட்கின்றோம். ஒருவர் கூறிய கூற்றைக் கேட்டவர் கவலை இன்றி மறுக்கும்போது ஒருவகை, அழுத்தம் திருத்தமாக மறுக்கும்போது மற்றொருவகை, வியந்து கேள்வியுறும் போது இன்னொருவகை, வினவாகக் கூறி மறுமொழி எதிர்பார்க்கும்போது ஒருவகை, தான் மறுத்துரைக்கத் தொடங்கும் தொடக்கத்திற்குப் பயன்படுத்தும்போது வேறொருவகை என இவ்வாறு பல்வேறு வகையில் அந்த ஒரு சொல்லே ஒலிக்கப்படுகின்றது. இத்தகைய ஒலி வேறுபாடு (intonation) எழுத்து முறையால் புலப்படுத்த இயலாதது; எனினும் பேச்சுமொழிகள் எல்லாவற்றிலும் இது இயல்பாக அமைந்துள்ளது.

---

1. Language, pp. 90—91.

## ௬௩. ஒலியசை முறை

எழுத்துக்கள் சில சேர்ந்து சொற்களாக அமைகின்றன. அவ்வாறு சொற்கள் அமையும் முறையில் எளிமையும் உண்டு, அருமையும் உண்டு. திராவிடமொழிகளில் எளிமையே காணப்படுகின்றது. ஒலித்தற்கரிய கூட்டொலிகளையும் ஒலியமைப்பிற்குக் கூடா ஒலிகளையும் திராவிட மொழிகள் ஒதுக்கிவந்திருக்கின்றன. உயிரும் மெய்யும் சேர்ந்து ஒலித்தற்கு எளியனவாக உள்ள அசைகளே சொற்களாக அமைந்துள்ளன. 'த்வ' முதலான கூட்டொலிகள் 'தத்வம்' முதலிய சொற்களில் உள்ளன. அத்தகைய வடசொற்கள் தெலுங்கு, கன்னட, மலையாள மொழிகளில் காணப்பட்டாலும், அவற்றை அந்த மொழிகளின் இயற்கையான ஒலிகளாகக் கருதலாகாது. பிற மொழியின் சொற்களை அவ்வாறே ஏற்றுக்கொள்ளுவதால், அக் கூட்டொலிகள் அம் மொழிகளில் காணப்படுகின்றன. பிறமொழிச் சொற்களை அவ்வாறே ஏற்றுக் கொள்ளாமல், திராவிட ஒலிமுறைக்கேற்ப அமைத்துக் கொள்ளும் மொழி தமிழே. தமிழ்மொழியில் பழைய திராவிட மொழியின் ஒலியமைப்பு, இன்னும் மாறாமல் இருந்துவரக் காரணம் அதுவே.

சொல்லின் முதலில் உயிரேனும் மெய்யேனும் வருதல் உண்டு. தமிழ்மொழியில் உள்ள பன்னிரண்டு உயிரும் மொழிமுதலாக வரும்.[1] மெய்யெழுத்துக்களில் க ச த ந ப ம வ ய ஞ என்பவை முதலில் வருவன.[2]

---

1. பன்னீ ருயிரும் மொழிமுத லாகும்.

—தொல். எழுத். ௬௪.

2. மொழிமுதல் எழுத்துக்களில் ஙகரம் ஒன்றெனத் தொல்காப்பியனார் விதிக்கவில்லை. ஆயின், பவணந்தியார்,

ஏனைய மொழி முதலில் வாராக் காரணம், அவை முதலில் ஒலித்தற்கு அரிய ஒலிகளாக இருத்தலே யாகும்.

இந்த மெய்யெழுத்துக்களும் மொழி முதலாக வரும் போது உயிருடன் கூடியே வருமெனத் தொல்காப்பியனர் கூறியுள்ளார்.[1] மற்றொரு மெய்யுடன் கூடி முதலில் வருதல் இல்லை. ஆங்கிலம் முதலான மொழிகளில் இரண்டு மெய்யும் மூன்று மெய்யும் மொழிமுதலில் வரக் காண் கின்றோம்.

State — இருமெய் முதலில் வரல்
Strong — மூன்று மெய் முதலில் வரல்

தமிழில் இவ்வாறு இருமெய் (Consonant clusters) வாராமை கண்ட தொல்காப்பியனர், மெய் மொழிமுத லாகும்போது உயிருடன் கூடியே வருமென்று விதித்துள் ளார். மெய்யெழுத்துக்கள் இரண்டனைச் சேர்த்து ஒலிக்குங் கால் மூச்சுத்தடை மிகுவதால், முயற்சி அரிதாகின்றது.[2] மொழி ஒரு கருவியே ஆதலின், அதனை எளிதாக்கிச் சிறந்த

---

சுட்டியா எகர வினவழி அவ்வை
ஒட்டி ஙவ்வும் முதலா கும்மே. நன்னூல் எழுத். 106

என விதித்துள்ளார். ஙனம் என்பது ஒரு சொல் எனத் தவருகக் கொண்டமையால், அங்ஙனம் இங்ஙனம் முதலிய சொற்களைக் கருதி இவ்வாறு விதிக்கலானர். ஆங்கனம் ஈங்கனம் முதலிய சொற்களின் திரிபே அவை என்னும் உண்மை உணர்ந்திருப்பின் இவ்விதி பிறந்திருக்காது.

1. உயிர்மெய் அல்லன மொழிமுதல் ஆகா.
—தொல். எழுத். கூ

2. The difficulty is increased when we have to pronounce two or more consonants together......Accurate pronunciation therefore requires great effort, and since, according to an observation of Locke, labour for labour's sake is against nature, the tendency always exists of making as little effort as is consistent with the necessity of making oneself understood.—R. G. Bhandarkar, Collected Works, Vol. IV p. 251.

வகையில் பயன்படுத்த விரும்பும் மக்கள் இத்தகைய சீர்திருத்தம் செய்துகொள்ளுதல் இயற்கை. அதனால், ஒலித்தற்கரிய கூட்டொலிகளை ஆங்கில மொழியினரும் ஒலிக்காமல் விட்டு வருகின்றனர். Knife, know, gnaw முதலான சொற்களில் உள்ள முதல்மெய் ஒலிக்கப்படாமைக்கு இதுவே காரணமாகும்.[1]

பழைய ஆங்கிலத்தில் பல சொற்களின் முதலில் இரண்டு மெய்யாக இருந்தவற்றுள் ஒன்று கெட்டு, இன்றைய ஆங்கிலத்தில் ஒரு மெய்யே நிற்றல் காணலாம்:—

| பழைய ஆங்கிலம் | இன்றைய ஆங்கிலம் |
|---|---|
| hring | ring |
| hleapan | leap |
| hnecca | neck |

சொல்லின் முடிவிலும் இரண்டு மூன்று மெய்யெழுத்துக்கள் நிற்றல் இல்லை.[2] 'போன்ம்' என்னும் சொல்லின்

---

1. We know that it is not because, by any force inherent in the word itself, the fuller form grew into the simpler, but because the combination *kn*, as initial, was somewhat difficult for men's organs to utter...the corruption went on gaining in popularity, until it because the rule of our speech to silence before the nasal in all such words (as in knife, knit, gnat, gnaw; etc.)—W. D. Whitney, Language and the Study of Language, p. 42.

The general direction of a great deal of sound - change is toward a simplification of the movements which make up the utterance of anv given linguistic form. Thus, consonant-groups are often simplified.—Bloomfield, Lauguage, p. 370.

2. வடமொழியிலும் இரண்டு மெய்யெழுத்துக்கள் இறுதியில் நிற்றல் இல்லை. கிரேக்க மொழியில் ந, ச, ர என்னும் மெய்யெழுத்துக்கள் மட்டுமே ஈற்றெழுத்தாவன. சீனமொழியில் மூக்கின மெய் மட்டுமே ஈற்றில் நிற்கும். இத்தாலிய மொழியிலும் பாலினேஷிய மொழியிலும் உயிரெழுத்தே இறுதியில் வரும்.

இறுதியில் னகரமும் மகரமும் ஈரொற்ருய் நிற்கும் என்றும், அவ்விடத்தும் மகரம் முற்றிலும் ஒலிக்காமல் குறுகி ஒலிக்கும் என்றும் தொல்காப்பியனர் கூறி யுள்ளார்.[1]

தனி மெய்யாக நிற்குமிடத்தும், எல்லா மெய்களும் ஈற்றில் நிற்கத்தக்கன அல்ல. இடையினமாகிய எல்லா மெய்களும் மொழியிறுதியில் நிற்பன. மூக்கினத்துள் ஙகரம் நிற்றல் இல்லை. அதனை ஈற்றில் ஒலித்தல் அருமையாகும். ஏனைய ஞ, ண, ந, ம, ன என்னும் ஐந்து மூக்கின மெய்களும் ஈற்றில் நிற்பன. வல்லினமாகிய க, ச, ட, த, ப, ற என்னும் ஆறு மெய்யும் ஈற்றில் நின்று ஒலித்தல் பெருமுயற்சியாகும். வெடியினம் (Plosives) என்று ஒலி நூலார் பெயரிட்டதற்கேற்ப, ஓர் உறுப்பு மற்ருேர் உறுப்போடு உறப்பொருந்தித் திடீரெனப் பிரிந்தால் அவை பிறக்கும். இத்தகைய முயற்சி சொல்லின் முடிவில் இருத்தல் தக்கது அன்று. ஆதலின், இந்த மெய்கள் ஆறும் குற்றியலுகரத்தின் துணை கொண்டு சொல்லின் இறுதியில் நிற்றல் உண்டு என்று தொல்காப்பியனர் ஓதி யுள்ளார்.[2] அழுத்தமாகப் பொருந்திய உறுப்புக்கள் பிரிந்து மூச்சு வெளிப்பட்டு முயற்சி எளிமையாவதற்குக் குற்றியலுகரம் துணையாகின்றது.

---

ஆங்கில மொழியில் மட்டுமே ஓர் உயிர் எழுத்தைச் சூழ்ந்து ஆறு ஏழு மெய்யெழுத்துக்கள் நின்று சொல் அமையும் முறை உளது, splints, strands twelfths போல.—Whitney, Language and the Study of the Language, p. 95.

1. செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்
னகார மகாரம் ஈரொற் ருகும்.
னகாரை முன்னர் மகாரம் குறுகும்.
—தொல். எழுத். ௰௪, ௰௨.

2. நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி யீற்றும்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே.—தொல். எழுத். ௩௬.

எனவே, தமிழில் சொல்லின் இறுதியில் நிற்கும் மெய்யெழுத்துக்கள் ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள என்னும் பதினொன்றே யாகும்.[1] உயிரெழுத்துக்கள் பன்னிரண்டும் இறுதியில் வரும். தெலுங்கு கன்னடம் துளு என்னும் திராவிட மொழிகளில் ஒவ்வொரு சொல்லும் உயிரீறாக முடியும். மலையாளம் தமிழ்முறை யைப் பின்பற்றிய போதிலும், எல்லாச் சொற்களையும் உயிரீறாக முடிக்கவே பெரும்பாலும் முயல்கின்றது. ஒலி யெளிமை கருதியே இந்த முறை இம் மொழிகளில் காணப் படுகின்றது. மண், பொன், நெல் என்னும் மற்ற மெய் யீற்றுச் சொற்களும் மிக எளிமையாக ஒலிக்கப்படும் பொருட்டு, தமிழ்மக்களின் பேச்சில், மண்ணு, பொன்னு, நெல்லு என்று ஒலிக்கப்படுகின்றன.

சொல்லின் இடையே உயிரெழுத்துக்கள் இரண்டு (vowel clusters) சேர்ந்து வருவதில்லை. அவை இரண்டு வரின், அவற்றை உடன்படுத்த வகரம் அல்லது யகரம் உடம்படுமெய்யாக வரும். சொல்லின் இடையே மெய் யெழுத்துக்கள் பலவாறு மயங்கி வரும். தொல்காப்பியனர் கூறியுள்ளவாறு:

| | |
|---|---|
| வெட்கம், கட்சி, பெட்பு<br>விற்க, முயற்சி, கற்பு<br>வெல்க, வல்சி, வள்பு | ட ற ல ள முன்<br>க ச ப[2] |
| கொல்யானை<br>நல்வழி<br>வெள்யாறு<br>கள்வர் | ல ள முன்<br>ய வ[3] |

---

1. ஞணநமன யரல வழள என்னும்
அப்பதி னொன்றே புள்ளி யிறுதி.—தொல். எழுத். எஅ.
2. டறலள என்னும் புள்ளி முன்னர்க்
கசப என்னும் மூவெழுத் துரிய. ,, உந.
3. அவற்றுள்,
லளஃகான் முன்னர் யவவும் தோன்றும். ,, நச.

| | |
|---|---|
| எண்கு, பண்பு, வெண்மை<br>நன்கு, அன்பு, மென்மை | ண ன முன்<br>க ச ஞ ப ம ய வ[1] |
| ஆய்க, ஆர்க, ஆழ்க<br>பாய்ச்சு, பார்த்தல், கீழ்மை<br>சாய்வு, சார்பு, வாழ்வு | ய ர ழ முன்<br>மொழி முதல் மெய்கள்[2] |

தொல்காப்பியனார் காலத்து வழங்கிய சில அரிய ஒலிகள் இக்காலத்து இல்லாமற் போயின. காலஞ் செல்லச் செல்ல, இவ்வாறு சில ஒலிகள் குறைதல் இயல்பே. எடுத்துக்காட்டாக ஞ ந ம வ என்னும் மெய்யெழுத்துக் களை அடுத்து யகரம் நிற்றல் உண்டு எனத் தொல்காப்பிய னார் கூறியுள்ளார். ஆயின், அவ்வாறு நிற்றலை விளக்குஞ் சொற்கள் இல்லாமை கண்ட நச்சினார்க்கினியர், "இங்ஙனம் ஆசிரியர் சூத்திரம் செய்தலின் அக்காலத்து ஒருமொழி யாக வழங்கிய சொற்கள் உள என்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன" என்றார்.[3] மகரத்தின் முன் வகரம் நிற்கும் என்று தொல்காப்பியனார் கூறியதற்கும் இவ்வாறே, "இதற்கும் உதாரணம் இக்காலத்து இறந்தன" என்றார்.[4] ஆதலின், காலப்போக்கில் ஒலியசை முறையில் மாறுதல்கள் நிகழ்ந்துகொண்டே வருகின்றன என அறியலாம்.

ங, ஞ, ண, ந, ம, ன என்னும் மூக்கின மெய்களை அடுத்து அவற்றின் இனமாகிய க ச ட த ப ற நிற்றல் பெரு வழக்காகும்.[5]

---

1. அவற்றுள், ணனஃகான் முன்னர்க்
   கசஞப மயவவ் வேழும் உரிய. —தொல். எழுத். உசு.
2. யாழ என்னும் புள்ளி முன்னர்
   முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும். " உகூ.
3. தொல். எழுத். உஎ.
4. " உஅ.
5. ஙஞண நமன எனும்புள்ளி முன்னர்த்
   தத்தம் இசைகள் ஒத்தன நிலையே. " உரு.

அங்கு, அஞ்சு, அண்டு, பந்து, கம்பு, கன்று.

இவையெல்லாம் ஒரு மெய்யின் முன் வேறு மெய் மயங்கும் வேற்றுநிலை மெய்ம்மயக்கமாகும். இவ்வாறு மயங்காத மெய் நான்கு; க ச த ப என்பன. இவற்றின் முன் வேறுமெய் வருவதில்லை; அந்த அந்த மெய்யே வரும்.

விக்கல், அச்சம், அத்தன், செப்பம்.

இவ்வாறு ஒரு மெய்யின் முன் அம் மெய்யே வந்து மயங்கும் மயக்கம் உடனிலைமெய்ம்மயக்கம் எனப்படும்.[1] அவ்வாறு மயங்காத மெய் இரண்டே; அவை ர ழ என்பன.[2]

இம்முறைக்கு வேறான ஒலியசைமுறை வடமொழி முதலான பிற மொழிகளில் அமைந்துள்ளது. ஆதலின், பிறமொழிச் சொற்கள் தமிழில் புகும்போது, மெய்களுக்கிடையே உயிர் புகுத்தியோ, மெய்களில் ஒன்றை மற்றொன்றாகத் திரித்தோ (anaptyxis or assimilation) ஒலித்தற்கு எளியன ஆக்குவர். ஏனைத் திராவிட மொழிகளில் வடசொற்கள் பல கலந்து அந்த ஒலிமுறை பழகிவிட்டமையால் இவ்விதிகள் போற்றப்படுவதில்லை; தமிழில் மட்டும் போற்றப்படுகின்றன.

---

1. கசதப ஒழித்த ஈரேழன் கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ரழஒழித் தீரெட்
டாகுமிவ் விருபால் மயக்கும் மொழியிடை
மேவும்; உயிர்மெய் மயக்கள வின்றே.
—நன். எழுத். ௧௫0.

2. மெய்ந்நிலை சுட்டின் எல்லா எழுத்தும்
தம்முன் தாம்வரூஉம் ரழஅலங் கடையே.
—தொல். எழுத். ௩0.

தத்வ>தத்துவ—உயிர் புகுதல்
க்ருஷ்ண>கிருட்ண
>கிருட்டின—"
சக்தி>சத்தி—மெய் திரிதல்[1]
பக்தி—பத்தி ,,

ஆங்கிலச் சொற்கள் தமிழில் புகும்போதும் இவ்வாறு மாறுதலடைந்து தமிழின் ஒலிமுறையைப் பெறுகின்றன.

இங்க்லாந்>இங்கிலாந்து>உயிர் புகல்
க்றைஸ்ட்>கிறிஸ்து
>கிறித்து —திரிதல்

தெலுங்கு முதலியவற்றில் இவ்விதிகள் போற்றப்படவில்லை ஆதலின், இவை திராவிட மொழிச் சொற்கள் என்றும், இவை பிறமொழிச் சொற்கள் என்றும் ஒலியமைப்பை நோக்கிப் பிரித்துவிடலாம். தமிழில் புகும் பிறமொழிச் சொற்கள் திரிந்தே புகுவதால், தமிழ்ச் சொற்கள் போன்றே அமைந்துள்ளன. தமிழ்மொழியில் பழைய ஒலியமைப்பு முறை எவ்வாறு போற்றப்பட்டு வருகின்றதென்பது இதனால் அறியப்படும்.

ஆயினும், வடமொழியின் கலப்பால் நாளடைவில் மேற்கண்ட விதிகள் மெல்ல மெல்ல மாறத்தொடங்கியுள்ளன. இன்று பக்தி, யுக்தி, தத்வம் என்று பேசவும் எழுதவும் காண்கிறோம். நெடுங்காலத்திற்கு முன்னரே பவணந்தி முனிவர் மொழிமுதல் வரும் எழுத்துக்களைப்

---

1. ஆங்கிலத்திலும் பின்வரும் சொற்களில் இத்தகைய மாறுதல் காணலாம்:

dis - fuse>diffuse
in - possible>impossible
ad - pend>append
ad - firm>affirm
ad - sign>assign

பற்றிய விதிகளை மாற்றத் தொடங்கினர். எடுத்துக் காட்டாக,

சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அஐ ஔஎனும் மூன்றலங் கடையே[1]

எனத் தொல்காப்பியனார் கூறியிருக்க, இரண்டாயிரம் ஆண்டுகள் கழித்து வந்த பவணந்தியார் சகரம் எல்லா உயிருடனும் மொழிமுதலில் வரும் எனக்கொண்டு, அவ் விதியை மாற்றத் தொடங்கினர். காரணம் என்னவெனில், தொல்காப்பியனார் காலத்தில் வழங்காத சங்கு சங்கம் சகடம் முதலான வடசொற்கள் நன்னூலார் காலத்தில் பயின்று வந்தமையே ஆகும்.[2]

யகர மெய் இன்ன உயிரோடுகூடி மொழிமுதலில் வரும் என விதிக்கும் தொல்காப்பியனார்,

ஆவோ டல்லது யகர முதலாது[3]

என விதித்திருக்க, நன்னூலாரோ,

அஆ உஊ ஓஔ யம்முதல்[4]

என்றார். யவனர், யானை, யுகம், யூகி, யோகம், யௌவனம் என்பன உரையாசிரியர் காட்டும் உதாரணங்கள். யானை என்பதொன்று தவிர ஏனைய தமிழ் அல்ல.

---

1. தொல். எழுத்து. சுஉ.

2. இனி முதலா மென்ற பத்துயிர்மெய்யுள் வகர முதலிய நான்கினையும் விதந்து கூறவே, ஒழிந்த ஆறு மெய்யும் பன்னிரண் டுயிரோடு முதலாமென்பது அருத்தாபத்தியாற் பெற்றும்.

இனி, "சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே—அஐ ஔ எனும் மூன்றலங் கடையே" என்பது முதலாக இன்னோரன்ன சில எழுத்துக்களை மொழிக்கு முதலாக என ஆசிரியர் தொல்காப்பியர் விலக்கினராலோ எனின், இவ் வடமொழிகளும் திசைச் சொற் களும் அக்காலத்து இவ்வாறு தமிழின்கட் பயின்று வாராமை பற்றி யென்க. —நன்னூல், எழுத்து, 106—விருத்தியுரை.

3. தொல். எழுத்து. சுசு. 4. நன்னூல், எழுத்து. 104.

ஞகாரம் ஆஎஒ என்னும் மூன்று உயிரோடு மட்டும் மொழிமுதலாம் எனத் தொல்காப்பியனார்,

ஆஎஒ
என்னும் மூவுயிர் ஞகாரத் துரிய[1]

என விதித்தார். ஆயின், ஞமலி முதலிய சொற்களின் வழக்காற்றைக் கண்ட பவணந்தியார்,

அஆஎ ஒவ்வொ டாகும் ஞம்முதல்[2]

என அகரமும் சேர்த்து விதித்தார். இவையெல்லாம் காலப் போக்கில், பிறமொழிச் சொற்கள் புகப் புக, ஒலி முறைகளும் மாறும் என்னும் உண்மையைத் தெரிவிக்கின்றன.

தமிழில் இவ்வாறு கூட்டொலிகள் குறைவாக இருத்தலாலும், பொருந்தா ஒலிகள் கூடாமல் இருத்தலாலும், இவற்றிடையே ஒலியெளிமை கருதி உயிர் புக்கு நிற்றலாலும், சொற்கள் தம்மளவில் நீண்டு அமைந்து காணப்படுகின்றன. தமிழ்மொழி நீண்ட சொற்களாலாகியது என்று பிறர் கருதத்தக்கவாறு உள்ளது. வடமொழி முதலான இந்தோ - ஐரோப்பிய மொழிகளில் இத்தகைய நெடுஞ் சொற்கள் (பெருகுகின்றது, இருக்கின்றன முதலியன போல) இல்லை என்பர். ஆயினும், அம் மொழிகளில் இத்தகைய எளிய முறையில் அமைந்த ஒலியசைகள் இல்லை என்பது எவரும் மறுக்க முடியாத உண்மையாகும். அவற்றின் சொற்கள் சுருக்கியும் குறுக்கியும் அமைக்கப் பெற்று முயற்சியுடன் ஒலிக்கத் தக்கனவாயிருக்கின்றன. தமிழ்மொழியின் சொற்கள் நீண்டு பெருகியிருப்பினும் எளிதில் ஒலிக்கப்படுவனவாக உள்ளன. இது தமிழொலி முறையின் சிறப்பியல்பாகும்.

———

1. தொல். எழுத்து. சுச. 2. நன்னூல், எழுத்து. க0ஞ.

## எ. சொல்லின் திரிபு

ஒரு சொல்லில் அடுத்தடுத்து நிற்கும் பல ஒலிகளும் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு முயற்சி பற்றிப் பிறப்பனவாக இருப்பின், ஒலிக்கும் முயற்சி அரிதாகும். அடுத்து நிற்கும் ஒலிகள் ஓர் இனமாக—பிறப்பிடத்தாலும் முயற்சியாலும் ஒத்திருப்பனவாக—அமையின், ஒலிக்கும் முயற்சி எளிதாகும். அதனல், ஓர் ஒலியை அடுத்து வரும் மற்றோர் ஒலி அதற்கு ஏற்பத் திரிதல் உண்டு என்பதை மேலே கண்டோம். அது, தனி ஒலியின் திரிபு பற்றிய பகுதியாகும். பல ஒலிகள் சேர்ந்து அமைந்த ஒரு சொல்லில் சில ஒலிகள் ஒலிக்கப்படாமல் விடப்படுதலும் உண்டு. இது சொல்லின் திரிபு எனப்படும். இதுவும் முயற்சி எளிமை அல்லது முயற்சிச் சுருக்கம் கருதி ஏற்படுவதே என்பதை இனிக் காண்போம்.

முன்னோர் ஒலித்தவாறே நாம் இன்று சொற்களை ஒலிப்பதில்லை. சொற்கள் பலவகை மாறுதலை அடைந்தே இன்று வழங்கும் நிலைக்கு வந்திருக்கின்றன. இக்காலத்திலேயே கற்றவர் வழங்கும் சொற்களுக்கும் கல்லாதவர் வழங்கும் சொற்களுக்கும் வேறுபாடு உள்ளது. 'இருக்கின்றது' என்ற சொல் 'இருக்குது' என்றும் 'கீது' என்றும் 'இருக்கு' என்றும் பல்வேறு வகையாக ஒலிக்கப்படுகிறது. கற்றவர் ஒருவர் அதே சொல்லை வெவ்வேறிடத்தில் வெவ்வேறு வகையாக வழங்குகின்றார். மேடையில் நின்று சொற்பொழிவாற்றும்போது 'இருக்கின்றது' அல்லது 'இருக்கிறது' என்று ஒலிக்கிறார்; அவரே, நண்பர்களோடு அளவளாவும்போது 'இருக்குது' என்று வழங்கி, தம் குழந்தையோடு கொஞ்சும்போது 'இக்குது' என்கிறார்.

'சிதல்' என்னும் பழஞ்சொல் பிற்காலத்தில் 'செல்' ஆயிற்று. பண்டைக்காலத்தில் யாறு, யாடு, யானை என்று வழங்கிய சொற்கள் பலவும் இன்று ஆறு, ஆடு, ஆனை என வழங்கி வருகின்றன. அவ்வாறு வழங்குவனவற்றிற்கு இலக்கணமும் இடந்தரலாயிற்று. தனிச்சொற்களே அல்லாமல் சோழநாடு, மலைநாடு முதலான தொடர்களும் சோணாடு, மலாடு என வழங்குதற்கு இலக்கணம் இடம் வகுத்து, மரூஉ எனக் குறித்தது.[1]

இவ்வாறு சொற்கள் திரியும் திரிபுகளை ஆராய்ந்தால், அவற்றின் வடிவம் வரவரக் குறுகிவருதல் காணப்படும்.[2] இவ்வாறு குறுகிக் குறுகியே இறுதியில் ஓரசை ஈரசைச் சொற்களாக நின்றன. தமிழில் மிகப் பழங்காலச் சொற்களெனச் சங்க இலக்கியங்களில் காணப்படும் சொற்கள் பலவும் ஓரசை ஈரசைச் சொற்களாவே உள்ளன. சீன மொழியிலும் ஆங்கில மொழியிலும் இன்றும் இத்தகைய சிறு சொற்களே பலவாக உள்ளன. ஆயின், தமிழில் பழங்காலத்திலேயே ஏற்பட்ட எழுத்துமுறையும் இலக்கியமும் சொற்களைக் குறுக்கும் பழக்கத்திற்குப் பெருந்தடையாக நின்றன என்று கூறலாம். இது பல மொழிகளுக்கும் பொருந்திய உண்மையே ஆகும்.[3] பேச்சுமொழி சொற்களைக் குறுக்குதலே கடமையாகக் கொண்டிருக்க, எழுத்து மொழி சொற்களின் வடிவம் சிதையாவாறு காத்தலே

1. தொல். எழுத்து, சஅ௩.

2. The general tendency of all languages is towards shorter and shorter forms.—Jespersen, Language etc. p 330.

3. The natural condition of language is diversity and change, and it is only under the artificial influences of civilisation and culture that a language becomes uniform and stationary —A. H. Sayce, Introduction to the Science of Language, p. 200.

கடமையாகக்கொண்டு விளங்குகின்றது.[1] ஆயினும், இந்தக் கட்டுப்பாட்டையும் மீறியே சில சொற்கள் குறுகி அமைந்துவிடுகின்றன. 'ஆச்சு' 'போச்சு' முதலான சொற்கள் இவ்வாறு தப்பித் தவறி இடம் பெறுவன எனலாம்.

பேச்சுக் கருவியாகிய உறுப்புக்கள் வேறு பல தொழில்களுக்கும் உரிய கருவிகளாக உள்ளன. அதனால் சொற்கள் ஒலிக்கப்படும்போது, ஒலி திரிய நேர்கின்றது. இதழ் அண்ணம் நா முதலியவற்றிற்குப் பலவகை உணர்ச்சிகளைப் புலப்படுத்தும் தொழிலும் அமைந்திருக்கின்றது. ஆகவே, ஒரு சொல்லை ஒலிக்கும்போது, உணர்ச்சி அற்று அமைந்திருக்கும் நிலையாயின், உறுப்புக்கள் அந்தச் சொல்லைத் தெளிவுற இயல்பாக ஒலிக்கும். ஆயின் அதே நேரத்தில் உணர்ச்சி ஒன்றைப் புலப்படுத்த நேர்ந்தால், அதற்கு ஏற்றவாறு இதழ் நா முதலியவை மாறி அமைவதால், ஒலியில் சிறு மாறுதல் ஏற்படும். அமைதியாய் இருந்து 'இல்லை' என்பதை ஒலிக்கும்போது அதன் இயல்பான ஒலி கேட்கப்படும். சினத்துடன், அல்லது பதற்றத்துடன் ஒலிக்கும்போது அந்த ஒலி ஓரளவு மாறும். வேடிக்கையாக, அல்லது, எள்ளல் குறிப்புடன் ஒலிக்கும்போது மற்றொரு வகையான சிறு மாறுதல் நேரும். 'உவகை' என்பதை உணர்ச்சியின்றி ஒலித்தல் எளிது. ஆயின், முகம் மலர்ந்து இதழ்கள் மகிழ்ச்சி தவழ விரிந்து ஒலிக்கும்போது, அந்தச் சொல்லின் உகர உயிரை நன்கு ஒலித்தல் இயலாது. இதழ் குவியும் முயற்சி அந் நிலையில் அரிது ஆதலின், 'ஒகை' என்னும் திரிபு நேர்கின்றது. உணர்ச்சியே வடிவாக விளங்கி வளரும் குழந்தைகளின்

---

1. A literary dialect is naturally less subject to the inroads of decay than an unwritten one. The spelling of words reacts upon their pronunciation and preserves it from extensive alteration.—Ibid. 199.

பேச்சில் இத்தகைய திரிபுகள் பலவற்றையும் காணலாம். கண்ணீர் கலங்கி விம்மி அழும் குழந்தையின் வாயில் பிறக்கும் சொற்கள் ஒரு வகையாக ஒலிக்கப்படும்; அந்தக் குழந்தை இன்புருவாக ஆரவாரம் செய்து பேசும்போது, அந்தச் சொற்களே பல மாறுதலுடன் ஒலிக்கப்படுதலைக் கேட்கலாம்.

இவை ஒருபுறம் நிற்க, பேசிப் பேசிப் பழகிய பின், நா முதலிய உறுப்புக்கள் சொற்களைக் கவலை இல்லாமல் ஒலிக்கத் தொடங்குகின்றன. எந்தத் தொழிலையும் முதலில் கற்றுச் செய்கின்றவர் பொறுப்புணர்ச்சி மிக்கவராய்க் கவலையுடன் செய்வர்; அவர் தவறு செய்யின், அது அறியாமையால் செய்யும் தவறு எனப்படும். ஆயின் அந்தத் தொழிலைக் கற்றுத் தேறியவர்க்குப் பொறுப்புணர்ச்சி குறைகின்றது; அவர் கவலை இல்லாமல் கடமையைச் செய்கின்றார். அவர் செய்யும் தவறு, கவலை இன்மையால் செய்யும் தவறே அன்றி, அறியாமையால் செய்யும் தவறு அன்று. சைக்கிள் விடக் கற்பவன் நிலை வேறு; அதில் தேர்ந்தவன் நிலை வேறு. தேர்ந்தவன் கவலை இல்லாமல் செலுத்துகின்றான்; குறித்த இடத்திற்குப் போவதுமட்டுமே அவன் நோக்கமாகின்றது. பேசிப் பழகியபின், மக்களுக்கு இதே மனநிலை ஏற்படுகின்றது. ஒவ்வோர் ஒலியையும் விடாமல் திருத்தமாக ஒலிக்கவேண்டும் என்று பேசுவோன் முயல்வதில்லை. கேட்போன் தன் கருத்தை உணர்ந்தால் போதும் என்று அவன் ஒலிகளைப் பற்றி அவ்வளவாகக் கவலையில்லாமல் பேசுகின்றான். கேட்பவனுக்குத் தெளிவாக விளங்காமல் ஐயம் நேரும் எல்லை வரையில்—மற்றொரு முறை அதையே சொல்லுமாறு அவன் கேட்கக் கூடிய எல்லை வரையில்—கவலையில்லாமல் வேகமாகப் பேசும்

வழக்கம் உள்ளது.[1] அதனால்தான் சொற்கள் உருவம் திரிகின்றன; வரவரக் குறுகி நிற்கின்றன.

இவ்வாறு உருவம் திரியுமாறு ஒலித்தல் சில வகைச் சொற்களிலேயே மிகுதியாகக் காணப்படுகின்றது. எந்தச் சொற்கள் பேச்சில் அடிக்கடி வழங்குகின்றனவோ, அந்தச் சொற்களிலேயே திரிபு மிகுதியாக நேர்கின்றது. அடிக்கடி நாவில் பயில்வதால், பலமுறை ஒலித்து ஒலித்துப் பழகிய உறுப்புக்கள் கவலையில்லாமல் ஒலிக்கத் தொடங்குகின்றன. அதனால் அந்தச் சொற்கள் மட்டும் வரவர உருவம் திரிகின்றன. நாலசை ஐந்தசைச் சொற்களாக இருந்தவை ஓரசை ஈரசைச் சொற்கள் ஆகின்றன. நான் நாம் யான் யாம் நீ நீர் தான் தாம் என்னும் மூவிடப் பெயர்கள் தொடக்கத்தில் ஓரசைச் சொற்களாக இருந்தவை அல்ல; மூவிடப் பெயர்கள் அடிக்கடி பேச்சில் வழங்கும் சொற்களாகையால், நாவில் தேய்ந்து தேய்ந்து ஓரசைச் சொற்களாக வந்து நின்றன.[2] வேற்றுமை யுருபுகள், விகுதிகள் முதலியனவும் அடிக்கடி பயிலும் சொற்களாகையால், ஓரசைச் சொற்களாகத் தேய்ந்து நின்றுள்ளன. இனியும் திரிவதற்கு இடம் இல்லை என்னும் எல்லைக்குச் சென்ற பிறகே, திரிபு நேராமல் நிற்கின்றது. 'உடைய' என்னும் ஆறும் வேற்றுமைச் சொல்லுருபு மலையாளத்தில் உடெ, டெ எனத் திரிந்து நிற்றல் காணலாம்.

ஆங்கிலம் முதலான மொழிகளில் ஒன்று இரண்டு மூன்று முதலான எண்ணுப் பெயர்கள் (one, two, three)

---

1. It is safe to say that we speak as rapidly and with as little effort as possible, approaching always the limit where our interlocutors ask us to repeat our utterance, and that a good deal of sound-change is in some way connected with this factor.—Bloomfield, Laguages, p. 386.

2. They are often short words and in many languages atonic.—Bloomfield, Laguages, p. 247.

என ஓரசைச் சொற்களாகவே உள்ளன. ஆனால், இவை குறுகி அமைந்த வடிவங்கள் என்றே கூறல் வேண்டும். தமிழில் ஒன்று முதல் பத்து ஈறாக உள்ள எண்ணுப் பெயர்களைப் பேச்சுமொழிக்கே விட்டுவிட்டிருந்தால், அவையும் அவ்வாறு மாறி அமைந்திருத்தல் கூடும். ஆனால், எழுத்து மொழியின் ஆணை தவறாமையால்,[1] 'இரண்டு' 'ஒன்பது' என்னும் நீண்ட சொற்கள் இன்னும் சிதையாமல் காக்கப் பட்டுள்ளன. இவை தவிர மற்ற எட்டுப் பெயர்களும் (இறுதியில் உள்ள குற்றியலுகரத்தை ஒலித்துணை என நீக்கி ஆராயும்போது) ஓரசைச் சொற்களாகவே உள்ளன. 'இரண்டு' 'ஒன்பது' என்னும் இரண்டு நீண்ட எண்ணுப் பெயர்களும் பிற சொற்களோடு சேர்ந்து தொகையாகும் போது குறுகியே வழங்குகின்றன. 'இரு வகை' 'ஈருயிர்' என்பவற்றில் 'இரு' என்றும் 'ஈர்' என்றும் குறுகிய வடிவங்கள் காணப்படுகின்றன. 'தொண்ணூறு' முதலான தொடர்களில் 'ஒன்பது' இடம்பெறாமல் குறுகிய வடிவம் உடைய மற்றொரு சொல்லே இடம் பெற்று வாழ்கின்றது. ஆகையால், பயின்று வழங்கும் எண்ணுப் பெயர்களும் ஓரசைச் சொற்களாய் அழியா வாழ்வுபெற முயல்கின்றன என்பது தெளிவு.

இன்று ஓரசையாக வழங்கும் சொற்கள் தொடக்கத்தில் பலவகைச் சொற்களாக நீண்டு வழங்கியிருந்திருக்க வேண்டும் என்பதும் மறுக்கமுடியாத உண்மையே ஆகும். 'ஆச்சு' எனக் (குற்றியலுகரம் ஒலித்துணையாதலின்) ஓரசையாக வழங்கும் சொல்லின் முன்னைய வடிவம் 'ஆச்சுது' எனின், அது 'ஆய்விட்டது' என்பதன் திரிபாகல்வேண்டும்.

1. Education is an agency which arrests the progress or decay. The tendency to corruption is greatly diminished when a language comes to have a literature.—Bhandarkar, Collected Works, Vol. IV, p. 252.

ஆங்கிலத்தில் இன்று 'had' என வழங்கும் ஓரசைச் சொல்லின் பழைய வடிவம் 'habaidedeime' என ஆராய்ச்சியாளர்கள் கூறுவதும் இங்குக் கருதத்தக்கது.[1] 'Lord' என்ற சொல் 'hlaford' என்பதன் திரிபாம்.

இவ்வாறு சொற்கள் குறுகுதலுக்குக் காரணம் என்ன எனப் பலர் பலவாறு ஆராய்ந்து கூறியுள்ளனர். முயற்சிச் சுருக்கம் கருதியும், சோம்பலாலும் இவ்வாறு மக்கள் ஒலிக்கின்றனர் என்பது ஒரு கொள்கை. சோம்பல் ஒன்றே காரணம் என்பது மற்றொரு கொள்கை. முயற்சிச் சுருக்கமே பெரிதும் காரணம், சோம்பலன்று என்பது இன்னொரு கொள்கை.[2]

சாய்ஸ் என்னும் மொழிநூலறிஞர் ஒப்புமையாக்கம் (analogy), தெளிவுறுத்தல், சோம்பல் என மூன்று காரணம் கூறுகிறார்.[3] ஆயினும், முன்னைய இரண்டனையும் சோம்பலில் அடக்கி விளக்குகிறார். ஒன்றுபோல் மற்றொன்றை ஒலித்தல் எளிதாக இருத்தலால் அதற்கும் சோம்பலே காரணம் என்கிறார். தெளிவுறக் கூறுவிடின், கேட்போர் மீண்டும் கேட்க, அவர்க்காக இரண்டாம் முறை தெரிவிக்கும் முயற்சி நேர்தலால், அதைத் தடுக்கவே தெளிவுறுத்தல் நேர்கின்றது ; ஆதலின் அதற்கும் சோம்பலே காரணம் என்கிறார். ஒப்புமையாக்கம், தெளிவுறுத்தல் என்ற இந்த இரண்டும் மக்களுக்கும் அவர்கள் வழங்கும் மொழிக்கும் சிறப்பைத் தருவனவே அல்லாமல் குறை விளைப்பன

---

1. Jespersen, Progress in Language, pp. 13, 344.

2. The general direction of a great deal of sound-change is toward a simplification of the movements which make up the utterance of any given linguistic form.—Bloomfield, Language, p. 370.

3. Sayce, Introduction to the Science of Language, p. 167.

அல்ல. விலங்கு முதலியவற்றிற்கு இல்லாமல், மக்களுக்கே இயற்கையாக அமைந்த ஆற்றல் 'போலச் செய்தல்' (imitation) என்பது. ஒருவரைப் பார்த்து அவரைப் போல் ஒலிக்கக் கற்பதும் ஒரு தொழில் செய்யக் கற்பதும் குழந்தையிடமும் காணப்படுவன. இந்த ஆற்றலின் அடிப் படையாகவே நாகரிகம் வளர்ந்தமைந்துள்ளது. குழந்தை முதல் கலைஞன் வரையில் எல்லோருடைய வளர்ச்சிக்கும் இதுவே காரணமாக அமைந்துள்ளது. இதைப்போலவே, தெளிவுறுத்தல் என்பதும் மொழியின் சிறப்பியல்பாகும். ஆதலின், இந்த இரண்டனையும் சோம்பலில் அடக்கிக் கூறல் பொருந்தாது.

சோம்பல்தான் காரணம் என்று கூறுவது பொருந்ா தென டக்கர், யெஸ்பர்ஸன் முதலான மொழிநூலறிஞர் விளக்கியுள்ளனர்.[1] சோம்பல் என்பது செய்யும் வேலையில் ஊக்கமின்மை, வேலையில் இன்பமின்மை, வேலையைக் குறைத்துக்கொள்ளும் வேட்கை இவற்றின் விளைவே ஆகும். ஆனால், மக்களின் வாழ்க்கையில் சோம்பல் மிகுந்தவர்களே பேச்சு மிகுந்தவர்களாக இருக்கக் காண்கின்றோம். பேச்சு ஒரு வேலையாக எண்ணப்படுவதும் இல்லை. பேச்சில் ஊக்கமில்லை என்றும் இன்பமில்லை என்றும் உணர்வோர் மிகச் சிலர். பேச்சைக் குறைத்துக்கொள்ள விரும்புவோர் மிகச் சிலர். ஆதலின், பெரும்பான்மையோரால் திரிபடை யும் சொற்களின் குறுக்கத்திற்கு அவர்களைக் காரணம் என்று கூறல் பொருந்தாது. கூறினும், அவர்கள் சோம்பேறிகள் என்று கருதல் தவறான கருத்தாகும். பேச்சில் ஊக்கமும் இன்பமும் இழந்து அதைக் குறைத்துக் கொள்ள நாடுவோர், கலைத்துறையிலோ எண்ணக் கடலிலோ

1. Tucker. Introduction to the Natural History of Language, p. 350.

ஓய்வின்றி உழைக்கும் சிறந்த அறிஞரே அல்லாமல், சோம்பேறிகள் அல்லர்.

மற்றொரு தடையும் ஆராயத்தக்கது. சோம்பலின் விளைவு தீமையே; சோம்பலால் இழத்தல் நேருமே அன்றி ஈட்டல் நேராது. ஆயின் சொற்களைக் குறுக்கி வழங்குதலால், பேசும் மக்களுக்கு யாதொரு தீமையும் விளைவதில்லை; இழத்தல் ஒன்றும் இல்லை. பேசும் முயற்சி குறைந்து பேசும் காலமும் சுருங்குவதால் நன்மையே விளைகின்றது எனலாம்.[1] ஆதலின் இதனைச் சோம்பலின் விளைவு என்று கூற முடியாது. சொற்களின் வடிவம் சிதைதல் இழப்பு அன்றோ என வினவலாம். இழப்பு மிகுதியா, ஈட்டல் மிகுதியா என்று சீர்தூக்கல் வேண்டும். இழப்பு மிகுதியாயின் சோம்பல் என்று கூறுவது பொருந்தும். ஈட்டல் மிகுதியாயின் அதனைச் சிக்கனம் என்று கூறல் வேண்டுமன்றோ?[2]

தவிர, ஒருவர் இருவர் சோம்பலால் செய்த மாறுதல்களைப் பரந்த உலகம் கண்மூடி ஏற்றுக்கொள்ளல் இயலுமா? மொழியில் புகும் ஒவ்வொரு புதுமையும் மாறுதலும் முதலில் ஒருவரால் புகுவனவே ஆகும். ஒருவர் முதலில் பேச, அதனைக் கேட்பவர் அதனை ஏற்கலாம்; அல்லது ஏற்காமலும் விடலாம். இவ்வாறே ஒருவர் வாயிலாகப் புகுந்த மாறுதல் உலகத்தாரால் உடனே ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. மக்கள் ஆளும் அரசியலில்

---

1. What we call a word is really and primarily the combined action of human muscles to produce an audible effect; and we see that the shortening of a form means a diminution of effort and a saving of time in the communication of our thoughts.—Jespersen, Language, etc. p. 331.

2. Whitney, Language and the Study of Language, p. 70.

ஒருவர் கொள்கை மெல்ல மெல்லப் பரவி எதிர்ப்பைக் குறைத்துச் செல்வாக்கைப் பெருக்கிய பிறகே சட்டமா கின்றது அன்றோ? மொழித்துறையிலும் இவ்வாறே ஒவ்வொரு சீர்திருத்தமும் ஒருவரிடமிருந்து வெளிப்பட்டுப் பலரிடமும் பரவி நிலைக்க வேண்டுவதாயுள்ளது. ஆகவே சீர்திருத்தம் செய்வோர்க்கும், அதனை ஏற்போர்க்கும் இடையே போராட்டமே உள்ளது என்று கூறலாம்.[1] ஆதலின், பயனற்ற புதுமையோ, நன்மையற்ற மாறுதலோ கண்மூடி ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. சோம்பல் காரண மாகப் பிறந்த மாறுதல் ஒருநாளும் ஏற்றுக்கொள்ளப்படுவ தில்லை. அதற்கு மாருக, முயற்சி எளிமை என்னும் பயன் விளைக்கும் மாறுதல்களே தடையும் எதிர்ப்பும் இன்றி ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. சொற்களைக் குறுக்கும் மொழிவழக்கு இத்தகையதே ஆகும்.

இவ்வாறு சொற்களைக் குறுக்கி ஒலிக்கும் மக்கள், வேண்டுமென்றே செய்வதும் இல்லை; அறிந்து செய்வதும் இல்லை. தங்களை அறியாமல் இயல்பாகவே செய்கின்ற மாறுதல்கள் என்றே இவற்றைக் கருதவேண்டும்.[2] 'ஆதன் தந்தை'யை 'ஆந்தை' என்று ஒலிக்கவேண்டும் என்று எவரும் பழங்காலத்தில் எண்ணியிருக்கமாட்டார். 'வந்து விட்டது' என்பதை வந்துடுச்சி, வந்துச்சி, வந்த்சி என் றெல்லாம் மாற்ற வேண்டும் என்று இந்தக் காலத்திலும் எவரும் எண்ணித் துணிந்து ஒலிப்பதில்லை. ஆனல் ஒலி, எளிமையை நோக்கி மாறிக்கொண்டிருக்கின்றது; அதனல்

1. Jespersen, Language etc. p. 261.

2. Phonetic change is the spontaneous working out of tendencies which the individual does not acknowledge to himself, in their effects upon organs of whose structure and working he is almost or wholly ignorant.—Whitney, Language and the Study of Language, p. 51.

சொற்களும் குறுகிக்கொண்டிருக்கின்றன. இதுதான மொழியின் இயல்பான மாறுதல்; பிறர் புதியதெனப் புகுத்தலும், பழையதெனக் கழித்தலுமாகிய செயற்கை முறை இங்கு ஒன்றும் இல்லை. செயற்கைமுறையாக ஒருவர் எண்ணி மாறுதல் செய்யத் தொடங்கின், அம் மாறுதல் எதிர்க்கப்படும்; ஏற்கப்படாது. மொழியைப் பொறுத்த வரையில் தனி மனிதன் ஆட்சி இல்லை; மக்கள் பலரும் உடன்பட்டு நடத்தும் குடியாட்சி முறையே உள்ளது.[1]

மொழி என்பது ஒருவர் கருத்தையோ உணர்ச்சியையோ மற்றவர்க்கு உணர்த்துவதற்குப் பயன்படும் கருவியே ஆதலின், அந்தப் பயன் குன்றாத எல்லை வரையிலுமே சொற்களின் உருவம் திரியும்.[2] பொருளுணர்த்தும் பயன் குறையுமானால் சொற்களின் உருவம் திரிவதில்லை. பேசுவோர்க்கும் கேட்போர்க்கும் இடையே நிகழும் சிறு போராட்டம் என்றே இதைக் குறிப்பிடலாம். பேசுவோர்

---

1. The speakers of a language thus constitute a republic, or rather, a democracy, in which authority is conferred only by general suffrage and for due cause, and is exercised under constant supervision and control.—Whitney, Language and the Study of Language, p. 38.

2. ஒலிக்கும் சொற்களின் பொருளைப் பிறர்க்கு உணர்த்த வேண்டும் என்ற தேவை இல்லாதபோது, சொற்கள் அளவு கடந்தும் திரிகின்றன. மந்திரம் போன்றவைகளை முணுமுணுத்தாற் போல் ஒலிக்கும் வழக்கமும் உண்டு அன்றோ? பொருளுணர்த்தும் தேவை இல்லாமையே அதற்குக் காரணம். இரண்டு கைகளையும் மார்புக்கு நேரே வைத்துக் குவித்து வணக்கம் தெரிவித்தல் வழக்கம்; ஆயின், பலமுறை பயின்று பயின்று சடங்குபோல் மாறிய நிலையில், கைகளை அரைகுறையாக உயர்த்தலும் குவித்தலும் காண்கின்றோம். சிறப்புடைய பெரியோரைக் காணும்போது மட்டும், அரைகுறையாகச் செய்தலை விட்டுச், சீர்ப்படக் குவித்து வணங்குதலைக் காணலாம். அதுபோலவே, தேவை ஏற்பட்ட போது முணுமுணுத்தலை விட்டுத் தெளிவாக ஒலித்தல் உண்டு.

சொற்களை ஒலிப்பதற்கு எளியனவாகத் திரிக்க முயல்கின்றனர்; திரிபு அளவு கடந்து செல்லும்போது, கேட்போர் பொருள் விளங்காமல் இடர்ப்படுகின்றனர். அந்த இடர்ப்பாடு நேராமல் சொற்களை இன்னும் சிறிது தெளிவாகவே ஒலிக்கவேண்டும் என்று பேசுவோர் முயல்கின்றனர். ஆகவே எளிமை கருதித் திரித்தல் ஒருபுறம்; தெளிவு கருதிச் சொற்களின் உருவங்களைக் காத்தல் மற்றொரு புறம்; இவ்வாறு இருவகை முயற்சிகளுக்கு இடையே சொற்களின் திரிபு ஓரளவில் நிற்க நேர்கின்றது.

மொழியை வளர்த்துக் காப்பது மக்களின் முதல் நோக்கம் அன்று. ஆனால், மொழியை வளர்த்துக் காப்பதன் வாயிலாகத் தங்கள் வாழ்வைக் காத்துக்கொள்வதே முதல் நோக்கமாகும். ஆதலின், தங்கள் வாழ்க்கைக்கு ஏற்றவாறு மொழியை மாற்றியமைத்துக்கொள்கின்றனர்; அரிய ஒலிகளை எளிய ஒலிகளாக மாற்றியமைத்துக் கொள்கின்றனர்; வேண்டிய ஒலிகளை விடாமல் காத்து, வேண்டாத ஒலிகளைப் புறக்கணித்துவிடுகின்றனர்; பல அசைச் சொற்களுள், இன்றியமையாத அசைகளை ஒலித்து ஏனையவற்றை மறந்துவிடுகின்றனர். இவ்வாறு செய்வதால் சொற்கள் குறுகிவிடுகின்றன.

ஆதலின், இதனைக் குறைபாடு என்று கருதுதல் எவ்வாறு பொருந்தும்? டாக்டர் ஜான்ஸன் என்னும் ஆங்கில நாட்டுப் பெரும்புலவர் தாம் எழுதிய ஆங்கில அகராதியில் இதனைப் பிற்போக்கானதொரு குறை என்றே குறித்துள்ளார்.[1] பழைய உலகம் நல்ல உலகம் என்றும், இன்று வாழும் உலகம் பொல்லாத உலகம் என்றும் கருதும்

1. Tongues, like governments, have a natural tendency to degeneration—Dr. Johnson, Preface to his Dictionary.

தவறான மனப்பான்மையே இதற்குக் காரணம் என்று யெஸ்பர்ஸன் கருதுகின்றார். இவ்வாறு சொற்கள் மாற இடங்கொடுத்தலாகாது என்று அறிஞர் பலர் செய்த முயற்சியே இன்று ஆங்கிலச் சொற்கள் எழுதும்போது ஒருவகையாகவும், ஒலிக்கும்போது மற்றொரு வகையாகவும் இருத்தற்குக் காரணமாகும்.[1] மொழியைப் பேசும் மக்கள் பெரும்பாலோர்; எழுதும் மக்கள் சிறு பான்மையோர். பேசும் மக்கள் சொற்களை மாற்றி ஒலித்துப் பழகிவிட்டனர். ஆனால் எழுதும் மக்கள் அதற்கு ஏற்றவாறு எழுத்துக்களை மாற்ற மனம் இல்லாமல், பழைய எழுத்துக் களை விடாமல் காத்துவருகின்றனர். அதனால் எழுதப்படும் சொல்லுக்கும் ஒலிக்கப்படும் சொல்லுக்கும் வேற்றுமை பெருகிவிட்டது. இந்தத் துறையில் சீர்திருத்தம் மிக இன்றி யமையாதது என்று உணர்ந்து பேரறிஞர் பெர்னாட்ஷா தம் செல்வத்தை அத் தொண்டுக்காக எழுதி வைக்கும் நிலையும் நேர்ந்துவிட்டது. ஆனால், இத்தாலிய மொழியிலோ ஜெர்மன் மொழியிலோ இவ்வாறு இல்லை; அம் மொழிகளில் எழுத்துலகம் ஒலியுலகம் என்னும் இரண்டு உலகங்களிலும் சொற்கள் ஒத்த உரிமையோடு வாழ்கின்றன; ஒன்றில் பழைய வேடமும் மற்றொன்றில் புதிய கோலமும் புனைவ தில்லை; இரண்டு இடத்திலும் இயற்கையாகவே வாழ்கின்றன. தமிழிலும் இந்நிலையே உள்ளது.

ஆயின், இவ்வாறு சொல் வடிவு குறுகி மாறுவதால் அந்தச் சொல்லின் பிறப்பும் வளர்ச்சியும் அழகும் புலனா

1. English spelling, under the guidance of the printers, has become a mere system of marks and symbols, arranged upon no principle, selected with no rational purpose, each of which by a separate effort of the memory s associated with some sound or word.—Sayce, Introduc-ion to the Science of Language. p. 328.

காமல் மறைகின்றன; இது ஒரு குறை எனலாம். எழிலுற அமைந்த சிற்பம் ஒன்று ஆற்று வெள்ளத்தில் அகப்பட்டுப் புரண்டு புரண்டு அதன் அழகிய உறுப்புக்கள் கை கால் செவி கண் முதலியன தோன்றாதவாறு ஒடிந்தும் அழிந்தும் தேய்ந்தும் காணப்படின், அதனை எவ்வாறு போற்ற முடியும்? அவ்வாறுதான் இக்காலத்துத் திரிந்து குறுகிய சொற்கள் சிதைந்து அழகிழந்து தோன்றுகின்றன எனலாம். அழகிய சிற்பம் எங்கே? ஆற்று வெள்ளம் புரட்டித் தேய்த்து மழுப்பிய கல்லுருளை எங்கே? உண்மைதான். ஆனல், இங்கு அறிஞர் யெஸ்பர்ஸன் மொழியின் இயல்பினை உணர்ந்துகூறும் கருத்துக்களை உணர்தல் வேண்டும். அவர் கூறுவன: "மொழி ஒரு கருவி; அந்தக் கருவிகொண்டு கருத்துக்களைப் புலப்படுத்தி மக்கள் வாழ்தல் வேண்டும். மக்கள் வாழும் வகையில் கருத்துக்கள் புலனயின் அது ஒன்றே அமையும். கருத்துக்கள் புலனுகுமாறு சொற்கள் பொருள் தரின் அமையும். அந்தச் சொற்களின் பிறப்பும் வளர்ச்சியும் பற்றிய வரலாறு மக்களுக்கு வேண்டுவதில்லை. சொல் எதனைக் குறித்திடும் என்ற அளவில் பொருளுணர்ச்சி மட்டும் இருந்தால் அமையும். தேய்வுபடாத சொல், வெள்ளத்தில் புரண்டு அழியாத அழகிய சிலை போன்றதே. ஆனல், மொழியைப் போற்றும் மக்கள், சொற்களைச் சிற்பங்களாக வைத்துக் கொண்டு அழகு காக்க விரும்பவில்லை. அது அறிஞர் சிலர் சில வேளைகளில் விரும்பும் விருப்பமாக இருக்கலாம். ஆயின், மக்கள் மொழியைப் பற்றி விரும்புவதெல்லாம், வாழ்க்கைப் பாதையைச் செம்மைப்படுத்துவதற்கான சொற்கள் அந்த மொழியில் இருக்க வேண்டும் என்பதே; வாழ்க்கைப் பாதையைச் செம்மைப்படுத்தத் தேய்ந்து மழுங்கிய கல்லுருளைகள் வேண்டுமே அன்றி, சிலைகள்

வேண்டா என்பதே. ஆதலின், சிலைகளுக்கு உரிய கலை மண்டபம் வேறு; மக்கள் வாழ்க்கைக்கு உதவும் மொழி வேறு; மக்கள் வாழ்க்கைக்குக் கருவியாக உள்ள மொழித் துறையில், பலகாலும் உருண்டு உருண்டு பலருடைய வாயிலும் பயிலும் சிறுசிறு சொற்களே தேவை" என்பர் அவர்.[1]

இவ்வுண்மையை உணராமல் சொற்கள் உருவம் திரிந்துபோவது குறித்து வருந்துவதால் பயன் இல்லை. எழுத்துமுறையால் அமைந்த இலக்கியம் இத்தகைய திரிபுகள் நேராதவாறு ஓரளவு காத்துவருகின்றது. கல்லாத மக்களின் பேச்சில் உள்ளதுபோல் கற்றவர்களின் பேச்சில் திரிபுகள் மிகுதியாக இல்லை. எழுத்துமுறையும் கல்வியும் இவ்வாறு பேச்சுமொழியில் திரிபுகள் பெருகாதவாறு தடுத்துக் காத்தபோதிலும், சிலசில சொற்கள் காலப் போக்கில் திரிந்து வருவதைக் காணின்,[2] மொழியின்

---

1. In noting the change from the old to the modern form he used strong language and spoke of degeneration, corruption, depravation, decline, phonetic decay, etc., or even adapted for himself Schleicher's noble simile: "our words, as contrasted with Gothic words, are like a statue that has been rolling for a long time in the bed of river till its beautiful limbs have been worn off, so that now scarcely anything remains but a polished stone cylinder with faint indications of what once it was." Suppose, however, that it would be quite out of the question to place the statue on a pedestal to be admired; what if, on the one hand, it was not ornamental enough as a work of art, and if on the other, human well-being was at the stake if it was not serviceable in a rolling mill; which would then be the better-a rugged and unwieldy statue, making difficulties at every rotation, or an even, smooth, easy-going and well-oiled roller?—Jespersen, Progress in Language. p. 11.

2. Phonetic decay or corruption is a process that is constantly going on in a living Language. At some stages of

இயல்பு இன்னது என்பது தெளிவாக விளங்கும். குறைந்த முயற்சியால் நிறைந்த பயனைப் பெறுவதே மக்களின் குறிக்கோள். மொழித்துறையிலும் இதுவே காணப்படுகின்றது. கருத்தை உணர்த்துவதே மொழியின் பயன். அந்தப் பயனைப் பெறுவதற்குச் சொற்கள் கருவிகளாக உள்ளன. கருவிகளின் உருவம் சிதையால் காக்கவேண்டும் என்பதில் பேசும் மக்களுக்கு ஆர்வம் இல்லை. அந்தக் கருவிகள் எளியனவாய்ப் பயன்படவேண்டும் என்றே அவர்கள் விரும்புகின்றனர். ஆகவே சொற்களின் வரலாற்றை ஆராய்வோரும் அவற்றின் அழகில் ஈடுபடுவோரும் தவிர, மற்றவர் அவற்றின் திரிபு பற்றிக் கவலைப்படுவதில்லை. அவர்களுக்குச் சொற்கள் எல்லாம் கருத்துக்களின் அறிகுறிகளே.[1] கருத்துக்களை உணர்த்தும் ஆற்றல் அவைகளுக்கு இருந்தால் போதும் என்று அவர்கள் அமைகின்றனர். அதனால்தான், எழுத்துமுறையும் கல்வியும் காக்கும் காவலையும் கடந்து சில சொற்கள் காலப்போக்கில் உருவம் திரிகின்றன.

---

its history it is very rapid and at others slow. It sometimes wholly transforms words. Its causes are deeply ingrained in human nature itself. Language is not the end and aim of human life; it is simply an instrument of communicating thought, and the matter of thought is always more important than the expression—R. G. Bhandarkar, Collected Works, Vol. IV, p. 249.

1. A word is not the natural reflection of an idea, nor its description, nor its definition; it is only its designation, an arbitrary and conventional sign with which we learn to associate it. Hence it has no internal force conservative of its identity, but is exposed to all the changes which external circumstances, the needs of practical use, the convenience and caprice of those who employ it, may suggest.—Whitney, Language and the Study of Language, p. 70.

சொல்லின் திரிபால் பொருளுணர்ச்சி குன்றுமாயின், அல்லது மயங்குமாயின், அத்தகைய திரிபு மக்களால் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை; வழக்கில் இடம் பெறுவதில்லை. 'மலைநாடு' என்பதை 'மலாடு' எனத் திரித்து வழங்குவதில் இவ்வுண்மை காணலாம். அநாடு, அலாடு, மநாடு எனப் பலவாறு திரிந்து வழங்காமல், 'மலாடு' எனத் திரியக் காரணம் என்ன? அதன் பொருளுணர்ச்சிக்கு மலை என்ற முதற்சொல் இன்றியமையாததாக உள்ளது. ஆதலின் அதனை எவரும் ஒலிக்காமல் விடவில்லை. விடின், பொருளுணர்த்தப்படாது போகும். அநாடு, அலாடு, மநாடு என்று திரியின், மலை என்ற பொருட் சிறப்புப் போய், சொல் பயனற்றுவிடுகின்றது. ஆச்சு, போச்சு என்னும் திரிபுகளிலும் பால்காட்டும் விகுதி முதலியன அவ்வளவு இன்றியமையாதன அல்ல; ஆயின், தொழில் (வினை) இன்னது என்று உணர்த்தும் பகுதியே பொருட் சிறப்பு உடையது. ஆதலின் ஆ போ என்னும் பகுதிகள் சிதையாமல் வழங்குகின்றன. எடுத்தல் படுத்தல் நலிதல் என்னும் ஒலிமாறுதல்களும், பொருட்சிறப்பும் சிறப் பின்மையும் பற்றியே அமைகின்றன அல்லவா? அவ்வாறு பொருட்பயன் இல்லாமல் நலிந்து ஒலிக்கப்படும் அசைகளே சிதைகின்றன; பொருட் சிறப்பு இல்லாமல் படுத்து ஒலிக்கப்படும் அசைகளே திரிபு அடைகின்றன. பொருட் சிறப்பு உடையனவாய்ப் பயன்பட்டு எடுத்து ஒலிக்கப்படும் அசைகள் திரியாமல் நிலைபெறுகின்றன.

பல மெய்யெழுத்துக்கள் சேர்ந்து நின்ற பழைய ஆங்கிலச் சொற்கள், இன்று சில மெய்யெழுத்துக்களை இழந்து எளியனவாக்கப்பட்டு ஒலிக்கப்படுதலைக் காணலாம்.[1]

---

1. Simplification of consonant-clusters is a frequent result of sound-change.

| | |
|---|---|
| hring >ring | hlavord >lord |
| hleapan>leap | gnagan >gnaw |
| hnecca >neck | Wringan>wring |

இன்றைய ஆங்கிலத்திலும், know, doubt முதலான சில சொற்களில், ஒவ்வொரு மெய்யெழுத்து ஒலிக்கப்படாமல் விடப்படுதல் காண்க. தமிழில் இத்தகைய கூட்டொலிகள் பலவாக இல்லை. உள்ள சில இடங்களிலும், அவை ஒலித்தற்கு எளியனவாகவே உள்ளன. ஆதலின் இத்தகைய திரிபுகள் ஏற்பட இடமில்லை எனலாம்.

---

## அ. அடிச்சொற்கள்

திராவிட மொழிகளில் அடிச்சொற்கள் (Roots) தெளிவாய்ப் பிரித்தறியும் நிலையில் உள்ளன ; சொற்களின் அடிப்படையான கருத்துக்களை உணர்த்தி நிற்கின்றன. அவை பெரும்பாலும் ஓரசைச் சொற்களாகவே இருக்கின்றன.

சொல்கின்றான்—சொல் : அடிச்சொல்
வருகின்றாள் —வா : அடிச்சொல்
பழுத்தது —பழு : அடிச்சொல்
(உகரம்—ஒலிநயம் பற்றி வந்தது)

திராவிட மொழியில் முதல் முதலில் ஓரசைச் சொற்களே இருந்துவந்தன என்பது கால்டுவெல் கருத்து.[1] எல்லா மொழிகளிலும் தொடக்கத்தில் பலவசைச் சொற்கள் இருந்தன என்றும், படிப்படியே அவை மருவியும் திரிந்தும் ஓரசைச் சொற்களாக மாறுவதே மொழிகளின் இயல்பு என்றும், யெஸ்பெர்ஸன் கருதுகின்றார்.[2] இது இன்றும் மொழிவளர்ச்சியில் காணத்தக்க உண்மையாகும். ஆதலின், பழைய திராவிடத் தாய்மொழியில் நீண்ட சொற்கள் இருந்துவந்தன என்றும், அவையே சிறு சிறு சொற்களாகக் கல் மண் முதலியனவாக நின்றுள்ளன என்றும் எண்ண

---

1. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 196.

2. Language proceeds from original polysyllabism towards monosyllabism, just as the history of religion does not pass from the belief in one god to the belief in many gods, but universally from polytheism towards monotheism. We have to imagine primitive language as consisting of very long words, full of difficult sounds, and sung rather than spoken.—Jespersen, Progress in Language, p. 18.

வேண்டுவதாக உள்ளது.[1] இவ்வாறு பலவகைச் சொற்கள் ஓரசைச் சொற்களாக மாறுவதற்குக் காரணமான மொழி வளர்ச்சியை அளந்து கூறல் இயலாது. அதற்கு நெடுங் காலம் சென்றிருக்கும். இடையிடையே ஒலித்திரிபு களும் எத்தனை வகையாகவோ நிகழ்ந்திருக்கும். இறுதி யில் பேசுவதற்கு எளியனவாகவும் தக்கனவாகவும் இப்போது வழங்கும் வடிவங்களைப் பெற்று நிற்கின்றன. இவ்வாறு திரிந்து அமைந்த கல் மண் முதலிய சொல் வடிவங்கள் பழந்தமிழ்ச் செய்யுட்களிலும் காணப்படு கின்றன. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட பழைய செய்யுட்களிலும் காணப்படுதலால், இந்தச் சொற்களின் பழமை தெளிவாகின்றது.

திராவிட மொழிகளின் அடிச்சொற்களுக்கும் இந்தோ-ஐரோப்பிய மொழிகளின் அடிச்சொற்களுக்கும் வேறுபாடு பெரிது. இந்தோ-ஐரோப்பிய மொழிகளின் அடிச்சொற்கள் பேச்சு மொழியில் என்றும் வழங்காதன என்று யெஸ்பெர்ஸன் கருதுகின்றார்.[2] அவை இலக்கண நூலார் படைப்பே அல்லாமல், வழக்கில் உள்ள சொற்கள் அல்ல. அடிச்சொற்கள் என்பவை ஒத்த சொற்களை ஆராய்ந்து

1. 'had' என்ற மூன்றெழுத்துடைய ஆங்கிலச் சொல் habaidedeime என்ற பன்னிரண்டு எழுத்துடைய சொல்லின் திரிபு என்பர். இது சொற்கள் நீண்டிருந்து பின்னர்க் குறுகி யமைதலை விளக்கும் சான்றாகும்.

—Jespersen, Progress in Language, p. 18.

2. We cannot imagine people expressing themselves by means of a language consisting exclusively of roots such as those given by Sanskrit scholars; the highly abstract significations assigned to them would in themselves be sufficient to preclude the idea of such a language existing as a practically useful means of communication—especially between savage or worse than savage beings. No; of a certainty, roots never were spoken words.—Jespersen, Progress in Language, p. 113.

கண்டெடுக்கப்பட்டவையே அன்றி, பழங்காலத்தில் மக்களால் பேசப்பட்டுவந்தவை அல்ல என்ற கருத்தே புளூம்பீல்ட் முதலான மொழிநூலார் பலரிடையிலும் நிலவியது.[1] ஆனால் திராவிட மொழிகளின் அடிச்சொற்கள் இலக்கண நூலார் படைப்பு அல்ல; நாள்தோறும் வழங்கும் சொற்கள்;[2] இலக்கியத்திலும் பண்டைக்கால முதல் இடம் பெற்று வாழும் சொற்கள்.

நடந்தான் என்னும் வினைமுற்றின் அடிச்சொல்லாக உள்ள நட என்பது இன்றும் பேச்சு வழக்கில் உள்ளதே. நட என்பது ஏவலொருமையாக வழங்குகின்றது. இவ்வாறே வினைச்சொற்களின் அடிச்சொற்கள் எல்லாம் ஏவலொருமையாக வழங்கக் காணலாம். பவணந்தி முனிவர் வினையடிகளை "ஏவல் வினைப்பகாப்பதம்" என்று குறித்தது பொருத்தமானதேயாகும்.[3] திராவிட மொழிகளின் பொது இயல்

---

1. Early students of language, who confused description with the entirely different (and much harder) problem of ascertaining historical origins, somehow got the notion that roots possessed mysterious qualities, especially in the way of age. Now and then one hears the claim that the roots which we set up must once upon a time have been spoken as independent words. The reader need scarcely be told that this is utterly unjustified; the roots, like all bound forms, are merely units of partial resemblance between words.—Bloomfield, Language, p. 240.

2. In the Indo-European group, the root-words do not at all function in a sentence as in the Dravidian language to this day.—K. Ramakrishnayya, Studies in Dravidian Philology, p. 106.

3. நடவா மடிசீ விடுகூ வேவை
நொப்போ வௌவுரிஞ் உண்பொருந் திருந்தின்
தேய்பார் செல்வவ் வாழ்கேள் அஃகென்
றெய்திய இருபான் மூன்றும் ஈற்றவும்
செய்யென் ஏவல் வினைப்பகாப் பதமே.

—நன்னூல். எழுத்து, 137.

பாகிய இது, நெடுங்காலத்திற்கு முன்பே தனித்துப் பிரிந்து பெலுஜிஸ்தானத்தில் வழங்கும் பிராஹுய் மொழியிலும் இன்றும் காணப்படுகின்றது.[1] இவ்வுண்மை உணராத வீர சோழிய ஆசிரியர் வடமொழியைப் பின்பற்றித் தமிழ் வினைச்சொற்களுக்குப் பகுதிகளைப் புதியனவாகப் படைத்துக் கூறலானார்.[2]

அடிச்சொற்கள் தனித்தனியே நின்று சொற்றொடராகிப் பொருள் தருதல் உண்டு. 'நீ வா' 'கல் பார்' முதலான வாக்கியங்கள் அத்தகையன. சீன மொழியில் தொடர்கள் அவ்வாறு அமைந்தனவே. அம்மொழியில் அடிச்சொற்களே சொற்கள். அவற்றைவிட வேறு சொற்கள் இல்லை.

'கல்லைப் பார்த்தான்' என்ற தொடரில், கல் பார் என்னும் அடிச்சொற்கள் தனித்தனியே நிற்காமல் ஐ முதலான இடைச் சொற்கள் சேர்ந்து சொற்களாய் நின்று பொருள் தருகின்றன. இந்த முறையே திராவிட மொழிகளில் பெரும்பாலும் உள்ளது.

பொருள் வேறுபாடு புலப்படுத்த அடிச் சொல்லோடு சேர்க்கப்படும் பிற சொற்களை இடைச்சொற்கள் எனத் தமிழ் இலக்கணம் கூறும். அந்த இடைச் சொற்கள் பல வகைப்படுவன. அவைகளும் தொடக்கத்தில் தனித்தனிப்

---

1. Denys De. S. Bray, The Brahui Language, part I, p. 117.

2. 'தமிழுக்கும் பண்ணிய தாதுக்களைப் படைத்துக்கொள்க' —வீரசோழியம், தாதுப்படலம்—1, கிரியாபதப் படலம்—9.

தமிழ்ச் சொல்லிற்கு எல்லாம் வடநூலே தாயாகி நிகழ்கின்றமையின், அக்குள்ள வழக்கெல்லாம் தமிழுக்கும் பெறும்.

டை—உரை.

பொருள் உணர்த்தி அடிச்சொற்களாக இருந்தவையே. படிப்படியே அவை தமக்குரிய பொருளை இழந்து துணை உறுப்புகளாக நிற்கின்றன.

| அடிச்சொல் | | சொல் | | சேர்ந்த உறுப்பு |
|---|---|---|---|---|
| ஆ | — | ஆகு | } | கு |
| விழு | — | விழுங்கு | } | கு |
| பன் | — | பஞ்சு | — | சு |
| நீர் | — | நீந்து | | து |
| கால் | — | காம்பு | — | பு |

இந்தோ-ஐரோப்பிய மொழிகளிலும் இவ்வாறு அடிச்சொல்லோடு பிற சொல் சேர்ந்து சொல்லாய் வழங்குதல் உண்டு. ஆனல், அம்மொழிகளில் அடிச்சொல்லும் சேர்ந்த சொல்லும் இவை இவை எனத் தனித்தனியே பிரித்தறிதல் அரிது. அவை சிதைந்து கலந்து பிரிக்க முடியாதனவாக மாறியுள்ளன. திராவிட மொழிகளில் அவற்றைப் பிரித்தல் எளிது. இதுபற்றியே இந்தோ-ஐரோப்பிய மொழிகளை உட்பிணைப்பு நிலை (inflexion) மிக்கவை என்றும், திராவிட மொழிகளை ஒட்டு நிலை (agglutination) மிக்கவை என்றும் குறிப்பர்.

திராவிட மொழிகள் ஒட்டுநிலை மிக்கனவாக இருத்தலால், இருவகை இயல்பு அவற்றிடைக் காண்கின்றோம். ஒன்று, அடிச்சொல் தெளிவாக அறிய நிற்றல். மற்றொன்று, அடிச்சொல் சிதையாவாறு நிற்கவேண்டி, அதனுடன் சேரும் உறுப்புக்கள் தெளிவாக ஒட்டி நிற்றலால் பலவகைச் சொல்லாய் நீளல். கற்பிக்கின்றான் என்ற சொல்லில், கல் என்னும் அடிச்சொல் தெளிவாக நிற்றல் காண்க. சேர்ந்த உறுப்புக்கள் சிதைந்து ஒன்ருகாமல், ஒட்டி வளர்ந்து நாலசைச் சொல்லாய் நீளலும் காண்க. திராவிட மொழிகளில் பலவகைச் சொற்கள் பெருகியிருந்

தற்குக் காரணம் இதுவே. ஆசியாவிலும், ஐரோப்பாவிலும் உள்ள மொழிகளின் சொற்களைவிடத் திராவிட மொழிச் சொற்கள் நீண்டவை என்றும், நீட்சியில் அமெரிக்க மொழியின் பலவசைச் சொற்களுக்கு அடுத்தபடியாகக் கருதத்தக்கவை என்றும் கால்டுவெல் கூறுகின்றார்.[1]

மண் என்னும் அடிச்சொல்லோடு 'கு' என்னும் உருபைச் சேர்க்கும்போது மட்கு என்று ஒட்டுதல் பொருந்தும். ஆயின் அவ்வாறு ஒட்டுதல் அருகிய வழக்காகும். இந்தோ-ஐரோப்பிய மொழியாயின், அவை மட்கு என்றோ, மக்கு என்றோ, மனு என்றோ சேர்ந்து ம்னு (mnu) என்று சிதைந்து ஓரசையாய்த் திரிந்திருக்கும். ஆனால் தமிழில் மண்ணுக்கு என்று உகரச் சாரியை பெற்றோ, மண்ணிற்கு என்று இன்சாரியை பெற்றோ, மண்ணினுக்கு என்று இரு சாரியையும் பெற்றோ, பலவசைச் சொல்லாக வளர்ந்து நிற்கக் காண்கின்றோம்.

அனுப்பு, எழும்பு, நிரம்பு முதலான தமிழ் முதனிலைகளை ஆராய்ந்தால் பலவசைச் சொற்களாகக் காணப்படினும், அன், எழ், நிர் (அனு, எழு, நிர) என்பவையே அடிச்சொல்லாகக் கருதத்தக்கவை. ஒலிநயம் பற்றி உகரமும் பொருள் வேறுபாடு கருதி 'பு' என்னும் துணைச்சொல்லும் பெற்று இவை நீண்ட முதனிலைகளாக அமைந்தன.

அடிச்சொற்கள் பொருளை உணர்த்தும் பெயர்களாக அமையும்போது, திணை பால் முதலியவற்றை உணர்த்தும்

1. The majority of the words in every Dravidan sentence are longer than those of (perhaps) any other language in Asia or Europe though inferior in length to the words of the polysynthetic languages of America.—Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 196.

விகுதிகள் சேரும்; அவற்றோடு வேற்றுமை உணர்த்தும் உருபுகள் சேரும்.

ஊர் ஊரான் ஊரானை
கால் காலன் காலனுக்கு

அடிச்சொற்கள் தொழிலை உணர்த்தும் வினைகளாக அமையும்போது, காலத்தை உணர்த்தும் இடைநிலை சேரும்; பிறவினை விகுதி முதலியன சேரும்; திணை பால் உணர்த்தும் விகுதிகளும் சேரும்.

பார் பார்த்து பார்த்தான்
செய் செய்வி செய்வித்து செய்வித்தான்

இவ்வாறு எத்தகைய நீண்ட வினைச்சொல்லையும் பெயர்ச் சொல்லையும் ஆராய்ந்து ஓரசையாக உள்ள அடிச் சொல் இன்னதெனக் காணலாம்.

இந்த அடிச்சொற்களுள் பெயர்க்கு உரியவை என்றும், வினைக்கு உரியவை என்றும் தொடக்கத்தில் வேறுபாடு இருந்திருக்க முடியாது.[1] பேசிய மக்களின் கருத்தில் பெயர் வினை என்ற பாகுபாடு சிறிதும் இல்லாதிருந்த ஒரு நிலையே மொழியின் தொடக்க நிலையாகும்.[2] பல அடிச் சொற்களை ஆராய்ந்து காணின் இவ்வுண்மை புலனாகும்.

---

1. மொழிநூலார் சிலர் கருத்துப்படி, முதல் முதலில் வினைச் சொற்கள் இன்றியமையாதனவாக இருந்தன. பொருள்களைச் சுட்டியோ வேறு குறிப்பால் குறித்தோ உணர்த்த முடிந்திருக்கும் ஆதலின், பொருள்களை உணர்த்தும் பெயர்ச் சொற்கள் முதலில் தோன்றியன அல்ல என்பர். ஆனால் மாக்ஸ் முல்லர் முதலானோர் மாறுபடக் கருதுகின்றனர். அவர்தம் கருத்துப்படி, வினை உணர்த்தும் செயல்களைச் சைகைகளால் உணர்த்த முடியுமாதலின், ஓநாய் முதலியவற்றைக் கண்டு அஞ்சிய மக்கள், "வருகிறது, வருகிறது" என்று கத்தாமல் "ஓநாய், ஓநாய்" என்றே கூவியிருப்பாராம். (F. Max Muller, The Science of Language, p.33.) ஆனால் உண்மை அதுவுமன்று; இதுவுமன்று.

2. As for priority, it seems superfluous to raise the question. Since the capacity to appreciate an object as

பூ, பூக்கள், பூவை, பூவிற்கு —பெயர்
பூ, பூத்து, பூத்தது —வினை
காய், காய்கள், காய்களை —பெயர்
காய், காய்த்து, காய்க்க, காய்த்தது —வினை
சொல், சொற்கள், சொல்லன் —பெயர்
சொல், சொல்லி, சொல்ல, சொல்லினன் —வினை

ஓரசையாகவுள்ள அடிச்சொற்கள் பல இவ்வாறு இருக்கக் காணலாம்.[1] ஈரசையாக உள்ளவற்றில் சில இவ்வாறு உள்ளன; பல, பெயர் வினை என்னும் வேறுபாடு உணர்த்தி நிற்கின்றன.

பெயர் வினை வேறுபாடு அற்றவை:—

மலர், மலரால், மலரை —பெயர்
மலர், மலர்ந்து, மலர்த்த, மலர்ந்தது —வினை
அடி, அடியால், அடிகள் —பெயர்
அடி, அடித்து, அடிக்க, அடித்தான் —வினை

பெயர் வினை வேறுபாடு பெற்றவை:—

கடல், கடல்கள், கடலை, கடலுக்கு —பெயர்
மரம், மரங்கள், மரத்தை, மரத்தால் —பெயர்
நட, நடத்து, நடந்து, நடந்தான் —வினை
திற, திறந்து, திறக்க, திறந்தான் —வினை

இந்த அடிச்சொற்களும் இவ்வடிவங்களை அடைதற்கு முன் பொதுவான ஓரசைச் சொற்களாக இருந்திருக்கும் எனக் கருதின், திராவிட மொழியின் அடிச்சொற்கள்

moving and as at rest antedates the origin of speech, it follows that as soon as special motor reaction develops to designate one of them as distinguished from the other, both noun and verb have originated simultaneously.—Pillsbury and Meader, The Psychology of Laguages, p. 282.

1. பெருஞ்செய் ஆடவர் (புறநானூறு—199 : 5), அறிகொன்று (குறள்—638), கெடுவாக வையாது (குறள்—117) என்பவற்றில், செய், அறி, கெடு என்னும் அடிச்சொற்களே தொழிற்பெயரால் நிற்றல் காண்க.

பெயர் வினை இரண்டற்கும் பொதுவானவை என்று கொள்ள இடம் உண்டு.[1]

ஓரசையாக உள்ள அடிச்சொற்களை இரண்டு வகைப் படுத்தலாம்:—

(1) உயிரீறாக உள்ள அடிச்சொற்கள். உயிர் பெரும்பாலும் நெடிலாக இருக்கும். வா, போ, தா, ஈ முதலியன.

(2) மெய்யீறாக உள்ள அடிச்சொற்கள். இவற்றில் உயிர் பெரும்பாலும் குறிலாக இருக்கும். நில், சொல், கொள், எண், உண் முதலியன.

ஒலித்தற்கு அரிய மெய்கள் ஈற்றில் நிற்றல் திராவிட மொழிகளின் ஒலியியலுக்கு மாறாகலின், அவை உகரத்தைத் துணையாகக் கொண்டு நிற்கும். அவையும் இரண்டாம் வகையைச் சாரும். அவை நகு, எடு, அறு முதலியன.

---

1. It would appear that originally there was no difference in any instance between the verbal and the nominal form of the root in any Dravidian dialect. Gradually, however, as the dialects became more cultivated, and as logical distinctness was felt to be desirable, a separation commenced to take place. The separation was effected by modifying the root by some formative addition when it was desired to restrict it to one purpose alone.—Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 193.

எஸ்கிமோக்கள் பேசும் மொழியில் இன்றும் பெயர்வினை வேறுபாடு இல்லாதிருத்தல் இங்குக் கருதத்தக்கது.—William Thalbitzer, in "The Absolutive and the Relative in Eskimo", Grammatical Miscellany to Otto Jespersen, p. 328.

In Dravidian, Kol and Tibeto-Chinese, the root could be used both as a noun and a verb,—S. K. Chatterji, The Origin and Devėlopment of the Bengali Langage, p. 1034.

வாழ், கேள், சாய், பார் முதலியன சிறுபான்மை நெடி லடுத்து மெய்யீருக வரும் அடிச்சொற்கள்.

வடமொழியில் ஒரு சில சொற்கள் தவிர, மற்றெல் லாச் சொற்களும் 'தாது' என்னும் வினையடியாகப் (verbal root) பிறப்பவை என்றே கொள்ளப்படுகின்றன. ஆனால், திராவிட மொழிகளில் வினையடியாகப் பிறக்காத பெயர்ச் சொற்கள் பல உள்ளன. தலை, கால், வாய், செவி, நான், நீ, நீர், ஒளி, இருள் முதலியன அத்தகையன. ஆயி னும், பொரும்பாலான பெயர்ச் சொற்களுக்கு வினையடி காண முடியும்.

| பெயர் | | வினையடி | |
|---|---|---|---|
| விரல் | — | விரி | (விரிதல்) |
| கடல் | — | கட | (கடத்தல்) |
| பகல் | — | பகு | (பகுத்தல்) |
| குடல் | — | குடை | (குடைதல்) |
| மரம் | — | மர | (மரத்துப்போதல், உணர்ச்சியறுதல்) |

சில வினையடிகள் (verbal roots) பெயராகும்போது அடையும் மாறுதல் மிகச் சிறிதே யாகும்.

| வினையடி | | பெயர் | மாறுதல் |
|---|---|---|---|
| காண் | — | கண் | உயிர் குறுகுதல் |
| நக்கு | — | நாக்கு | உயிர் நீளல் |
| மின் | — | மீன் | உயிர் நீளல் |
| வெல் | — | வேல் | உயிர் நீளல் |
| முகர் | — | மூக்கு | உயிர் நீளலும் பிறவும் |
| நில் | — | நிலம் | அம் சேர்தல் |
| உகு | — | உகிர் | இர் சேர்தல் |
| வில் | — | விலை | ஐ சேர்தல் |
| குதி | — | குதிரை | ர்+ஐ சேர்தல் |

பெரும்பாலும் வினையடியிலிருந்து பெயர்கள் பிறத்தல் திராவிட மொழியியல்பாக உள்ளது. ஆங்கிலம் முதலிய

ஐரோப்பிய மொழிகளில் பெயர்ச் சொ[illegible]ரிலிருந்தும் வினைச்சொற்கள் பிறக்கின்றன (to eye, to shoulder, to house முதலியன). தமிழில் முயல்<முயற்சி எனப் பெயராகி, பிறகு முயற்சி<முயற்சித்தான் என வினையாக்கி எழுதுகின்றனர் சிலர்.[1] இது தவறு ஆகும். இதற்குத் தமிழில் இடம் இல்லை.

**அடிச்சொல்லோடு சேர்வன :**

அடிச்சொல் சிதையாவாறு ஒலித்துணையாகச் சேர்வன சில. அடிச்சொல்லின் பொதுவான பொருளைச் சிறப்பாக ஒன்றனுக்கு உரியதாக்கச் சேர்வன சில. திணை பால் இடம் வேற்றுமை காலம் முதலான வேறுபாடுகளை உணர்த்தச் சேர்வன சில. இவ்வாறு அடிச்சொல்லோடு சேரும் உறுப்புக்களை மூவகைப்படுத்தலாம்.[2]

1. ஒலித்துணையாவன : (Enunciative Additions)

2. பொருட் சிறப்புப் பயப்பன: (Formative Additions or Particles of Specialisation)

3. இலக்கண வேறுபாடு உணர்த்துவன: (Grammatical Additions)

பவணந்தியார் பகுபத இலக்கணம் வகுத்தோதி உறுப்புக்களைப் பகுதி விகுதி இடைநிலை சாரியை சந்தி விகாரம்

---

1. இதனை black-formation என்பர்.—Bloomfield, Language, p. 412.

2. குயி மொழியில் எந்த அடிச்சொல்லும் தனியே நின்று சொல்லாவது இல்லையாம். அது பெயராகவோ வினையாகவோ அமையுமுன் ஓர் உறுப்புச் சேர்க்கப்படவேண்டுமாம். அவ்வாறு சேர்க்கப்படும் உறுப்புக்களை இந்த மூவகையாகவே பகுப்பர். (W. W. Winfield, A Grammar of the Kui Language, p. 8.)

எனக் குறித்துள்ளார்.[1] பகுதி என்பது பெரும்பாலும் அடிச்சொல்லோடு ஒத்துவரும்; சிறுபான்மை வேறுபடும். பெருகிற்று என்பதில் பெருகு பகுதி என்பர். ஆனால் பெர் அல்லது பெரு என்பதே அடிச்சொல்லாகும். உண்டான் என்பதில் உண் என்பதே பகுதியும் அடிச்சொல்லும் ஆகும். பகுதியை முதனிலை என்பர்.

விகுதி என்று கூறப்படுவது திணை பால் முதலியன உணர்த்தும் இறுதியுறுப்பாகும். இதனை இறுதிநிலை என்பர்; இது இலக்கண வேறுபாடு உணர்த்துவது.

இடைநிலை என்பது பெயர்ச்சொல்லில் காலம் உணர்த்தாமல் நிற்கும் உறுப்பாகும்; வினைச் சொல்லில் காலம் உணர்த்துவதாகும். காலம் உணர்த்தாத பெயரிடை நிலையைப் பொருட்சிறப்புப் பயப்பது எனலாம். காலம் உணர்த்தும் வினையிடைநிலையை இலக்கண வேறுபாடு உணர்த்துவது எனலாம்.

வலைஞன்—ஞ்—பெயரிடைநிலை
செய்தான்—த்—வினையிடைநிலை

சாரியை சந்தி விகாரம் என்பவற்றை ஒலித்துணையாய் அமைவன எனலாம்.

1. ஒலித்துணையாவன: (Enunciative additions)

இவை அடிச்சொற்களோடு சேர்ந்து அவற்றை ஒலித்தற்கு எளியனவாக மாற்றும். பொருளைச் சிறப்பித்தலோ வேறுபடுத்தலோ இவற்றால் இயலாது. பெரும்பாலும் உயிர்கள் இவ்வாறு ஒலித்துணையாகும். இவற்றுள்ளும்

1. பகுதி விகுதி இடைநிலை சாரியை
சந்தி விகாரம் ஆறினும் ஏற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்.
—நன்னூல், எழுத்து. 133.

உகரமே பயின்றுவருவது. மற்ற உறுப்புக்கள் வந்து சேரும்போது இது கெடுதலும் உண்டு.

ஆடு—உகரம் ஒலித்துணையானது.
ஆடு + ஐ — ஆட்டை— } உகரம் கெட்டது.
ஆடு + இன் + ஆன்—ஆடினன் }
எடு—உகரம் ஒலித்துணையானது
எடுத்தான்—உகரம் கெடவில்லை
எடு + ஐ—எடை—உகரம் கெட்டது.

கன்னடத்திலும் தெலுங்கிலும் உகரம் ஒலித்துணையாக வருதல் மிகுதி. மெய்யீற்றுத் தமிழ்ச் சொற்கள் பல இம்மொழிகளில் உகரம் பெற்று ஒலிக்கும். தமிழில் கண் மண் என்பன இம்மொழிகளிற் கண்ணு மண்ணு என உகரம் பெறும். தமிழில் அகர ஈருக உள்ள 'சில' என்னும் சொல்லும் கன்னடத்தில் உகரம் பெற்றுக் 'கெலவு' என நிற்கும். ஆகவே, திராவிட மொழிகளில் ஒலித்துணையாக வருவனவற்றுள் உகரம் முதலிடம் பெறுவதாகும்.

அ, அன், இன் முதலியன இவ்வாறு ஒலித்துணையாதல் பின்வரும் சொற்களில் காணலாம்.

நாம் + கு—நமக்கு —அ
அது + ஐ—அதனை —அன்
வீடு + கு—வீட்டிற்கு—இன்

2. பொருட் சிறப்புப் பயப்பன: (Particles of Specialisation)

சில அடிச்சொற்கள் பொதுவான கருத்தை உணர்த்தி நிற்க, அவற்ரோடு சேரும் கு, பு முதலான உறுப்புக்கள் பொதுக்கருத்தை வெவ்வேருக மாற்றிப் பல்வேறு பொருளுணர்த்தச் செய்கின்றன.

படு > படகு }
கீழ் > கிழங்கு } கு
கரு > கருக்கு }
கொடு > கொடுக்கு }

கால் > காம்பு }
கிர > கிரம்பு, கிரப்பு } பு
இரு > இரும்பு }
பாய் > பாம்பு }

இவற்றுள் படு முதலியன பொதுக்கருத்து உணர்த்தும் அடிச்சொற்கள். கு, பு ஆகியவை பொருட் சிறப்பு உணர்த்தச் சேர்ந்தவை.]

'அட் (அடு)' என்பது ஓர் அடிச்சொல். அதன் பொதுக்கருத்து, சேர்தல், நெருங்குதல் என்பன போன்றது எனலாம். அச் சொல்லை வெவ்வேறான சிறப்புப் பொருளுக்குப் பயன்படுத்தப் பல்வகை உறுப்புக்கள் சேர்ந்துள்ளமை காண்க.

அட் (அடு)=பொதுவான அடிச்சொல்
அடங்கு—அ+கு—மூக்கொலி பெற்றுச் சேர்ந்தது
அடக்கு அ+கு—வல்லொலியாய் இரட்டித்தது
அடை—ஐ சேர்ந்தது
அடர்—அர் ,,
அடுக்கு—கு ,,
அண்டு—இடையே மூக்கொலி சேர்ந்தது.

இவ்வாறே அண் என்னும் அடிச்சொல் வேறுபடுமாறு :

அண்—பொதுச் சொல்
அணு—உ
அணுகு—உ+கு
அணி—இ

நட என்னும் பொதுக்கருத்து உணர்த்தும் அடிச்சொல் வேறுபடுமாறு :—

நட—பொது
நடை—ஐ
நடத்தல்—த்+அல்
நடத்தை—த்+ஐ

உடு என்னும் பொதுக்கருத்து உடைய அடிச்சொல் வேறுபடுமாறு :

உடு—பொது
உடை—ஐ
உடுத்தல்—த் + அல்
உடுப்பு—பு
உடுக்கை—க் + ஐ
உடல்—அல்
உடம்பு—அம் + பு

எல்லாத் திராவிட மொழிகளிலும் இத்தகைய அடிச் சொற்களும் அவற்றின் பல்வேறு வடிவங்களும் காணப்படினும், இலக்கிய வளமும் தொன்மையும் மிக்க தமிழ்மொழியில்தான், அவை இன்றும் கணக்கற்றவையாய்ப் பெருகி வழங்குகின்றன.

3. இலக்கண வேறுபாடு உணர்த்துவன :

பெயர்ச்சொற்களில் அன் ஆன் முதலியவை திணைபால் முதலியன உணர்த்தச் சேர்வன ஆகும். வினைச் சொற்களில் இடைநிலை விகுதி முதலியவை காலவேறுபாடுகளும் பிறவினை முதலிய வேறுபாடுகளும் உணர்த்தச் சேர்வன. வினைமுற்றுக்களில் திணைபால் உணர்த்தும் விகுதிகளும் சேரும்.

நல்லை—ஐ முன்னிலை ஒருமை உணர்த்திற்று
நல்லன்—அன் படர்க்கை உயர்திணை ஆண்பால் உணர்த்திற்று
எழுப்பு—பு பிறவினை உணர்த்திற்று.

இவ்வாறு இலக்கண வேறுபாடு உணர்த்தும் உறுப்புக்கள் சேரும்போது அடிச்சொல் சிதையாமல் வேறுபடாமல் இருத்தலே திராவிட மொழியியல்பு ஆகும். ஆயின், சில சொற்களில் சிறிதளவு வேறுபடுதலும் உண்டு.

அவ் வேறுபாடு உயிர் நீளல், அல்லது, குறுகல் என்னும் அவ்வளவே நிகழும்.

நாம் —நமது
வே —வெந்து
நோ —நொந்து
காண்—கண்டு

இவ்வியல்புக்கு மாறாகப் பெரிதும் வேறுபடும் அடிச் சொற்களும் சில உள. அவை ஏனைய மொழிகளில் உள்ள வற்றை நோக்க மிகச் சிலவேயாகும்.

யான்—என் } யகரமும் எகரமும் பிறப்பால் உற
யாம் —எம் } வுடையன.
நீ —நின், உன்
நீர்—நும், உம்

சா—செத்து—சகரம் மொழி முதலாகா எழுத்து. ஒலித்தற்கு எளிதாக்க வேண்டி அகரத்தை எகர மாக்கினர் எனலாம்.

வார் } வந்து, வா என்னும் சொற்களில் ரகரம் கெடினும்
வர் } வருக, வருவார், வருதல் என்னும் மற்றச் சொற் களில் ரகரம் கெடவில்லை. தெலுங்கில் 'ரா' என் பதே ஏவல் ஒருமை. அது 'வ்ரா' என்று திரிந்த திரிபைக் காட்டுவது. கன்னடத்தில் 'பார்' என்பதே ஏவல் ஒருமை. அது 'வார்' என்பதன் பழமையைக் காட்டுகின்றது.

தார் } தந்து, தா முதலான சொற்களில் ரகரம் கெடினும்
தர் } தரல், தருக, தருவார் முதலான சொற்களில் கெட வில்லை.

## துணையுறுப்புக்களின் தோற்றம்

பொருட் சிறப்புப் பயக்கும் உறுப்புக்களும் இலக்கண வேறுபாடு உணர்த்தும் உறுப்புக்களும் தொடக்கத்தில் அடிச்சொற்களாக இருந்தவைகளே: தனித்து நின்று

பொருள் உணர்த்தும் தன்மை பெற்று வழங்கியவைகளே. ஆயின் வேறு அடிச் சொற்களோடு சேர்ந்து பொருள் உணர்த்தப் பயன்பட்டபோது, அவற்றிற்குத் துணையான உறுப்புக்களாக மாறிவிட்டன; தமக்கென்று இருந்த பொருளை இழந்துவிட்டன. தனித்து நின்றும் பொருள் உணர்த்தவல்ல சொற்களை உரிமைச் சொற்கள் (free forms) என்றும், மற்றத் துணையுறுப்புக்களை உறுப்புச் சொற்கள் (bound forms) என்றும் குறிப்பிடுதல் உண்டு.[1] சீன மொழியில் இத்தகைய சொற்களை (துணையுறுப்புக்களை) வெறுஞ்சொற்கள் (empty words) என்றும், பொருளுடைய சொற்களை நிறைசொற்கள் (full words) என்றும் பாகுபாடு செய்துள்ளனர். தொடக்கத்தில் எல்லாம் நிறைசொற்களாக இருந்தவைகளே: அவற்றுள் சில மற்றவற்றிற்குத் துணையாய்ப் பொருட் சிறப்பு உணர்த்தவும் இலக்கண வேறுபாடு உணர்த்தவும் முன்வரும்போது, அவற்றின் தனிவாழ்வு அழிகின்றது; நிறைசொற்களாக இருந்த அவை வெறுஞ் சொற்களாக மாறுகின்றன.[2] ஐ, ஆல், கு, இன் முதலான உருபுகள் இவ்வாறு வெறுஞ் சொற்களாக மாறி இலக்கண வேறுபாடு உணர்த்தப் பயன்படுகின்றன.

மெய் என்பது வடிவு, உடம்பு என்னும் பொருள் தரும் ஓர் அடிச்சொல். அது கரு என்னும் வேறு அடிச்

---

1. A linguistic form which is never spoken alone is a a bound form; all others are free forms.—Bloomfield, Language, p. 160.

2. All these have become 'empty words' in the Chinese grammatical sense. Over and above the analogical process it is really by the transformation of full words into empty words that morphology repairs its losses. The grammatical instruments which language employs are the debris of old autonomous words emptied of the meaning proper to them and used, like symbols, as simple exponents.—J. Vendryes, Language, pp. 164-165.

சொல்லோடு சேர்ந்தபோது கருமெய் என்று ஆயிற்று. இவ்வாறே செம்மெய், வெண்மெய் முதலான சொற்களும் ஆயின. நாளடைவில், கரு, வெண் முதலான முதற் சொல்லின் பொருள் சிறந்து நிற்க, மெய் என்னும் இரண்டாம் சொல்லின் பொருள் சிறப்பிழந்து நலிந்தது. ஆகவே, அது நன்கு ஒலிக்கப்படுதலும் குறைந்தது. மெய் என்பது மை என ஒலிக்கப்படலாயிற்று. சிறப்புக் குறையக் குறைய, ஒலியில் தெளிவும் குறையும் அன்றோ? கருமை, செம்மை, வெண்மை எனச் சொற்கள் மாறின. பிறகு மை என்பது துணையுருப்பாகி (வெறுஞ் சொல்லான விகுதியாகி) நன்மை தீமை முதலான பல சொற்களுக்கும் பயன்பட்டது. பொய்ம்மை, பொய்மை என்ற சொற்கள் அமைந்த அமைப்பு எண்ணி வியத்தற்குரியதாக உள்ளது. மெய் என்ற சொல்லுக்கும் மை என்பது துணையுருப்பாய்ப் பயன்படும் நிலைமை நேர்ந்து, மெய்ம்மை என்ற சொல் அமைந்தது.)

பொதுவாக உலோகம் என்ற பொருள் உணர்த்திய பொன் என்னும் அடிச்சொல்லும் இவ்வாறு துணையுருப்பாகப் பயன்பட்டு வடிவு சிதையலாயிற்று. இரும்பொன், செம்பொன் முதலான சொற்கள் இரும்பு செப்பு எனத் திரிந்தமை காணலாம். இவற்றில் உள்ள 'பு' என்னும் துணையுருப்பு, ஒரு காலத்தில் தனிப் பொருள் உடைய அடிச்சொல்லாய் வழங்கியது என்பது இதனால் தெளிவாகின்றது அன்றோ?

தல் அல் அம் ஐ கை முதலான தொழிற் பெயர் விகுதிகளை ஆராய முடிந்தால், இவ்வுண்மையே புலப்படும். ஆயின், பல துணையுருப்புக்கள் இன்று ஆராய்ச்சிக்கு எட்டாதவைகளாய் நிற்கின்றன. மை, பு முதலானவற்றுள்

தெளிந்த உண்மையே இவற்றிற்கும் பொருந்தும் எனக் கொள்ளலாம்.

நிறைசொல்லான அடிச்சொல் வெறுஞ் சொல்லான துணையுறுப்பாக மாறியபோது, தன் பொருளை இழந்ததாகக் கூறப்பட்டது. தன் பொருளை இழந்தது என்று கூறுவதை விட, பருப்பொருளை உணர்த்திய நிலையிலிருந்து நுண்பொருளை உணர்த்தும் நிலைக்கு மாறியது என்று கூறுவதே பொருந்தும் என்கிறார் அறிஞர் வெண்ட்ரியே.[1] மெய் என்பதற்கு உடம்பு, வடிவம் என்னும் பருப் பொருள் இருந்ததுபோய், மை விகுதியாக அமைந்தபோது பண்பு தன்மை என்னும் நுண்பொருள் பெற்றமை காணலாம்.

துணையுறுப்புக்களாக இன்று வழங்கும் விகுதி முதலியவை எல்லாம் அடிச்சொற்களாக இருந்தவைகளே எனக் கொள்ளலாகாது என்கிறார் அறிஞர் யெஸ்பெர்ஸன்.[2]

---

1. The real characteristic of the empty word is its quality of abstractness. The more it is established as an empty word the more is its abstract value increased, so much so that certain morphemes end by becoming nothing more than algebraic symbols, untranslatable into another language. Hence their evolution as morphemes may be said to have occurred during the passage from the concrete to the abstract, as much as from the particular to the general. —J. Vendryes, Language, pp. 168—169.

2. By secretion I understand the phenomenon that one integral portion of a word comes to acquire a grammatical signification which it had not at first, and is then felt as some thing added to the word itself. Secretion thus is a consequence of a 'metanalysis'; it shows its full force when the element thus secreted comes to be added to other words not originally possessing the element.

There is one trait that should be noticed as highly characteristic of these instances of secretion, that is that the occurrence of the ending originating in this way seems from

அவற்றுள் பல தவறுபடச் சொற்களிலிருந்து பிரித்தெடுக்கப்பட்டவை என்பது அவர் கருத்து. தமிழில் உள்ள பிறவினை விகுதிகளாகிய வி பி என்பவைகளையும், நிகழ்கால இடைநிலைகளாகிய கிறு கின்று ஆநின்று என்பவைகளையும் ஆராய்ந்தால், இது விளங்குகின்றது. வி பி என்பவற்றில் இ என்பதே பிறவினைப் பொருளை உணர்த்த வருவது. வகர பகர மெய்கள் சொற்களின் இடையே வந்த மெய்கள். கிறு கின்று என்பவற்றில் கு என்பது சாரியை; இன்று என்பதும் அதன் திரிபாகிய இறு என்பதுமே கால இடைநிலையாகக் கொள்ளத்தக்கவை. ஆநின்று என்பதில், ஆ என்பது வினையெச்ச விகுதியாகும்; நின்று என்பது துணைவினையாக வந்ததாகும். ஆதலின், துணையுறுப்புக்களாக உள்ளவை எல்லாம் அடிச்சொற்கள் என்றோ அவற்றின் திரிபுகள் என்றோ கொள்வதற்கில்லை. இவ்வாறு தவறுபடப் பிரிப்பதால் அமைந்தவை பல உண்டு. ஆயின் இத்தகைய தவறுகள் இயல்பாக அமைந்து மொழிக்குப் பயன்படுகின்றன. பேசும் மக்களின் மனம் சொற்களை நாடி அலையும்போது, கிடைத்ததைப் பயன்படுத்திக் கொண்டு கருத்தை உணர்த்த விரைகின்றது. அந் நிலையில் ஒருமுறை இருமுறை துணையுறுப்பாக ஒன்றைப் பயன்

---

the first regulated by the purest accident, seen from the point of view of the speakers.

I have no doubt that the vast majority of our formatives, such as suffixes and flexional endings, have arisen in this way through transference of some part, which at first was unmeaning in itself, from one word to another in which it had originally no business, and then to another and another, taking as it were a certain colouring from the words in which it is found, and gradually acquiring a more or less independent signification or function of its own.

—Otto Jespersen, Lauguage etc., pp. 384-391.

படுத்திய பிறகு, அதை இயல்பானதாகக் கொண்டு பல சொற்களுடனும் சேர்த்துக் கருத்துநுட்பங்களை மக்கள் உணர்த்துகின்றனர். வருவி என்பதில் 'வி' என்பதைப் பிறவினைப் பொருளுக்குப் பயன்படுத்தி வெற்றி கண்ட பிறகு, செய்வி, சொல்வி, ஆக்குவி, போக்குவி, முதலான பல சொற்களுக்கும் அதையே பயன்படுத்தினர். ஆகின்றது, போகிறது முதலான சொற்களில் கின்று கிறு என்னும் துணையுருப்புக்களைப் பயன்படுத்தி வெற்றி கண்ட பிறகு, நடக்கின்றது, செய்கிறது முதலான நூற்றுக்கணக்கான சொற்களில் அவற்றைப் பயன்படுத்தினர். பலவகைக் கருத்துக்களை வளர்த்துப் பெருக்கி, அவற்றை உணர்த்தப் பலவகைச் சொற்களைத் தேடி அலையும் மக்களின் மனம், கிடைத்த எந்தத் துணையுருப்பையும் கருவியாகக் கொண்டு பயன்படுத்திக்கொள்கின்றது; அந்தத் துணையுருப்பின் தோற்றம், வரலாறு, வடிவு முதலியவற்றைப் பற்றிக் கவலைப்படுவதில்லை; அடிச்சொல்லோடு அதைச் சேர்க்கும் முறையை மட்டும் ஒழுங்குபடுத்திக்கொள்கின்றது.

---

# ௯. பெயர்ச் சொல்

## மொழியின் பகுதிகள்

பேசும் மொழி முழுவதும் ஒலியால் ஆகியதே. ஆயின், பொருளுடைய சொற்களாலாகி வாக்கியங்கள் அமையும் போதுதான் மொழியாகின்றது. இல்லையேல், எவ்வளவு ஒலிகள் கூடினும் மொழியாவதில்லை.

பொதுவாக மொழிகளின் ஒலிகளைப் பற்றி ஆராய்வது ஒலியியல் (phonetics). ஒரு மொழியில் முதல் ஒலிகளாகவும் வகையொலிகளாகவும் பயன்படும் ஒலிக் கூறுகளை ஆராய்வது மொழியொலியியல் (phonemics) எனப்படும். ஒலிக் கூறுகள் பொருள்தரும் அசைகளாக (morphemes) அமைதலை ஆராய்தல் பொருளசையியல் (morphology) எனப்படும். அது சொல்லிலக்கணத்தோடு ஒட்டியதாகும். சொற்களின் பொருளைப் பற்றி ஆராய்வது சொற்பொருளியல் (semantics) சொற்கள் ஒன்றோடு ஒன்று தொடர்ந்து வாக்கியமாக இயைவதுபற்றி ஆராய்வது சொற்றொடரியல் (syntax.) சொற்களின் தோற்றம் முதலிய வரலாற்றை ஆராய்வது சொற்பிறப்பியல் (etymology). இவ்வாறு மொழியின் ஆராய்ச்சி பல துறைப்படுவதாகும்.

கத்தரிக்கோல் ஒன்றை எடுத்துக்கொள்வோம். அது முழுதும் இரும்பால் ஆகியது. ஆயின், இரும்பை உருக்கி ஓர் உருண்டையாய்ச் செய்திருப்பின் கத்தரிக்கோல் ஆகாது. காது என்றும், நடு என்றும், முனை என்றும், இணைப்புக்கு உரிய ஆணி என்றும் பல பகுதிகளாய் அமைந்தால்தான் கத்தரிக்கோல் ஆகின்றது. அந்தப் பகுதிகளில் ஒவ்வொன்றும் ஒவ்வோர் அமைப்பும் வடிவமும்

1. செய்தவன் (கருத்தா) தெரியா நிலை.

2. செய்தவன் பேசுவோர் மனத்தில் இடம் பெறு நிலை.

3. செய்தவன் சொல்லாமலே தெரியும் நிலை.

4. செய்தவனைக் கூறுமல் விடுதல் நாகரிகமாகவோ நன்மையாகவோ விளங்கும் நிலை.[1]

5. செயப்படுபொருளை எழுவாயாக்கிக் கூறுமாறு அதற்கு அமையும் சிறப்பு நிலை.

6. முன்னும் பின்னும் உள்ள வாக்கியங்களின் தொடர்பு காரணமாகச் செயப்படுபொருள் முன் நிற்பதால் பேச்சு எளிதாகும் நிலை, அல்லது அழகாகும் நிலை.

இந்தக் காரணங்களால் செயப்பாட்டுவினை மொழியில் இடம் பெறுகின்றது என்பது யெஸ்பர்ஸன் கொள்கை. இத்தகை இடங்களிலும் தமிழில் செயப்பாட்டுவினை இடம் பெறுமல், 'நெய் விற்கிறது' முதலான வாக்கியங்களே வழங்குகின்றன. இதனுல்தான் இதனை 'வழக்கியல் மரபு' என்று தொல்காப்பியனுர்[2] எடுத்துரைக்கலானுர்.

---

1. The impersonal and indefinite use of the passive is a noticeable feature in Modern Bengali. When one is not sure whether to use the honorific forms in speaking to an individual recourse is taken to the passive impersonal to avoid any chance of giving offence by using the ordinary non - honorific. S. K. Chatterji, The Origin and Development of the Bengali Language, p. 927.

2. தொல். சொல். உரசு.

ஐரோப்பிய மொழிகளிலும் தொடக்கத்தில் செயப்பாட்டுவினை இருந்ததில்லை.[1] அது பிற்காலத்தில் வளர்ந்து இடம் பெற்றது. ரிக்வேத மொழியில் செயப்பாட்டுவினை இல்லை; அதற்கு ஈடாக வேறு வினைச்சொற்கள் உள்ளன.[2]

எதிர்மறை வினை (The Negative Voice)

எல்லா வினைச்சொற்களும் உடன்பாட்டு வினைகளே. எதிர்மறை யுணர்த்தும் இடைநிலைகளைப் பெறுவதால் அவை எதிர்மறை வினைகளாகின்றன.[3] இதுவே திராவிட மொழியியல்பு. ஆனால் எல்லா ஐரோப்பிய மொழிகளிலும் எதிர்மறை யுணர்த்தும் சொல் வினைச்சொல்லின் உறுப்பாகாமல் தனித்து நிற்கின்றது. திராவிட மொழிகளிலோ பகுதிக்கும் விகுதிக்கும் இடையே எதிர்மறையிடைநிலை சேர்ந்து வினைச்சொல் அமைகின்றது.

எதிர்மறைவினை முக்காலத்திற்கும் பொது என்பர் இலக்கண நூலார்.[4] கால இடைநிலை பெறாமல் எதிர்மறையிடைநிலை பெற்ற வினைகளையே அவ்வாறு குறிப்பர்.

---

1. Primitive Indo - European does not seem to have possessed a passive conjugation.—S. K. Chatterji, The Origin and Development of the Bengali Language, p. 909.

2. Also in the Rigveda instead of this passive we find forms of the middle. Also in the Greek we have a proof of the original non-existence of the passive in the fact that the passive sense is for the most part expressed by forms historically middle.—A. F. Semenov, The Greek Language and its Evolution, p. 178.

3. புத்தமித்திரனார் இதனைத் தடைப்பொருள் என்பர்.
—வீரசோழியம். தாதுப் படலம், 11.

4. ஆகாரம் எதிர்மறை வினையாய் மூன்று காலத்திற்கும் உரித்தாயினும் எதிர்காலத்துப் பயின்று வரும்—சேனாவரையர், தொல். சொல். உ௨௬.

மூன்று காலமும் அவை பற்றிப் புடைபெயரும் வினையும் இல்லனவற்றை எதிர்மறைவினை மூன்று காலமும் ஏற்கும் என்று கூறுதல் இலக்கணை.—சங்கரநமச்சிவாயர், நன்னூல், ௪௪௫.

வார் + ஆ + ஆன் > வாரான்
செய் + ஆ + என் > செய்யேன்

கால இடைநிலை இல்லாக் காரணத்தால் முக்காலத்திற்கும் பொது எனக் குறிப்பினும், இவை எதிர்காலத்திற்கு உரியவாய் வழங்குகின்றன. ஏனைய இறந்தகால நிகழ்காலங்களுக்கு உரிய எதிர்மறை வினைகளில் கால இடைநிலைகளும் எதிர்மறை இடைநிலைகளும் ஒருங்கே உள்ளன.

செய் + த் + இல் + அன் > செய்திலன்
உண் + கின்று + இல் + அன் > உண்கின்றிலன்

எதிர்கால வினைச்சொற்களில் மட்டும் இவ்வாறு இருவகை இடைநிலையும் உடன் நிற்றல் இல்லை.[1] எனவே, கால இடைநிலை இல்லாத 'வாரான்' 'செய்யேன்' முதலியன எதிர்காலத்தைக் குறிக்க வழங்கலாயின.

இந்த எதிர்மறைவினைகளில் பகுதியும் விகுதியும் ஒரு சிறிதும் மாறாமல் உடன்பாட்டு வினைகளிற் போலவே இருத்தல் காணத்தக்கது. சில வினைச்சொற்களில் எதிர்மறை இடைநிலையாகிய ஆகாரமும் விகுதியின் உயிரும் ஒன்றி ஒருயிராய் நிற்றல் உண்டு. ஆண்டும் எதிர்மறை இடைநிலை உண்டெனவே கொள்ளல்வேண்டும். இன்றேல் எதிர்மறைப் பொருள் தருமாறு இல்லை.

கொள் + ஆ + அன்/ஆன் > கொள்ளான்

---

1. This is formed by adding to the root the personal terminations without any particle indicative of time. The learner may imagine, if he please, that the absence of any middle particle denoting time signifies that the action of the verb takes place in no time whatever.—G. U. Pope, A Hand-book of the Ordinary Dialect of the Tamil Language, p. 94.

கொள் + ஆ + இர்/ஈர் > கொள்ளீர்

கொள் + ஆ + எம்/ஏம் < கொள்ளேம்

வாழ் + ஆ + து > வாழாது
வாழ் + ஆ + அ > வாழா

இவற்றில் அஃறிணை ஒருமைவினையை ஆராயின், அதில் எதிர்மறை இடைநிலை இருத்தல் தெளிவாகும். அன்றியும், தெலுங்கு எதிர்மறை வினைகளில் எதிர்மறை இடைநிலை அகரம் இருத்தல் ஐயமற விளக்குகின்றது. ஏனெனின், தெலுங்கில் விகுதிகள் மெய் முதலாவன (னு, ரு, மு என்பன) ஆதலின், அம் மெய்க்கு முன்னுள்ள அகரத்தை எதிர்மறை இடைநிலை என்றே கொள்ள வேண்டும்.

சேயனு (செய்யேன்)
சேயவு (செய்யாய்)
சேயமு (செய்யோம்)
சேயரு (செய்யீர்)

கன்னடத்திலும் அகரம் எதிர்மறை இடைநிலையாகும்.

பாளது (வாழாது)

தமிழில் ஆகாரம் எதிர்மறை உணர்த்துவதாகும். தமிழ் வினைமுற்றுக்களிலன்றி, எச்சங்களில் எதிர்மறை வடிவங் களை ஆராயின் ஆகாரம் இடைநிலை என்பது ஐயமின்றிப் புலப்படும்.

வாழ் + ஆ + மல் > வாழாமல்
உண் + ஆ + த் + அ > உண்ணாத

இவற்றிலுள்ள ஆகாரமும் விகுதிகளும் தெளிவாக நிற்றல் காண்க.

அ ஆ என்பனவே யன்றி, அல் இல் என்பனவும் எதிர்மறை இடைநிலைகளாம்.

வாழ்க - வாழற்க - அல்
உண்டான் - உண்டிலன் - இல்

இவை யெல்லாம் இலக்கியத் தமிழைச் - செந்தமிழைச் சேர்ந்தன. இன்று பேச்சுத் தமிழில் எதிர்மறையை உணர்த்தும் முறை மாறியுள்ளது.

வந்திலன் - வரவில்லை
வருகின்றிலன் - வரவில்லை
வாரான் - வரமாட்டான்

(அஃறிணை ஒருமை எதிர்மறைவினை மட்டும் வாராது என மாருமல் உள்ளது.) ஒரு சொல்லாக இருந்த வினை இரு சொல்லாகப் பிரிந்து அப் பொருளை உணர்த்தும் முறை இங்குக் காணப்படுவது. இது போன்றவற்றை மொழி நூலார் பிரிநிலை வளர்ச்சி (analytic growth) என்று குறிப்பர்.

காரண வினை

ஐரோப்பிய மொழிகளில், காரண வினை (Subjunctive or conditional mood), செயவெனெச்சம் (Infinitive mood), ஏவல் வினை (Imperative mood) முதலான வினை வகைகள் பல உண்டு. திராவிட மொழிகளில் உண்மையாக ஆராய்ந்தால் காரணவினை முதலிய சில பிரிவுக்கு இடமில்லை என்று கூறல் வேண்டும். வினைச்சொற்கள் இப் பொருள் வேறுபாட்டை உணர்த்துதல். ஐரோப்பிய மொழிகளில் உள்ளவாறு திராவிட மொழிகளிலும் உண்டு. ஆனல் சொல்லளவில் அவற்றிற்கான வேறுபாடுகள்

1. கன்னடத்திலும் இத்தகைய மாறுதல் நிகழ்ந்துள்ளது. அம்மொழியிலும் பழைய எதிர்மறை வினைகள் வழங்குதல் ஒழிந்து புதிய முறையாக இத்தகைய தொடர்கள் பேச்சு வழக்கில் இடம் பெற்றுள்ளன.—F. Kittel, A Grammar of the Kannada Language, p. 159.

இல்லை எனல் வேண்டும். எனினும் அப்பொருள்களைப் பல்வேறு வகையாகத் திராவிட வினைகள் உணர்த்த வல்லன வாக உள்ளன.

'ஆல்' 'இல்' முதலான விகுதிகளோ, அன்றி, 'ஆனால்' 'என்றால்' முதலான சொற்களோ, வினைச்சொல்லுடன் சேர்ந்தால் காரணவினை அமையும்.

ஆல், இன், இல் - வந்தால், வரின், வரில்,
எனின், } வந்தாரெனின்,
ஆனால், என்றால் } வந்தாரானால், வந்தாரென்றால்,
ஆகில், ஆயின் } வந்தாராகில், வந்தாராயின்

திராவிட மொழி ஒவ்வொன்றிலும் வெவ்வேறு விகுதிகளும் சொற்களும் இப் பொருளைத் தருகின்றன.

ஆல், இன், இல் என்னும் விகுதிகளை வேற்றுமை யுருபுகளென்று கருத இடம் உளது.[1] ஆல் மூன்றும் வேற்றுமையில் காரணப் பொருளிலும், இன்னும் அதன் திரிபான இல்லும் ஐந்தாம் வேற்றுமையில் காரணப் பொருளிலும் வருதல் காண்க. ஆனால், என்றால், ஆயின், எனின், ஆகில் என்பனவும்; 'ஆ' 'என்' என்னும் பகுதிகளோடு ஆல், இன், இல் என்னும் விகுதிகள் சேர்ந்த சொற்களே யாகும்.

அவையே அல்லாமல், ஏழாம் வேற்றுமை இடப்பொருளில் வரும் கால் கடை முதலான உருபுகள் சேர்ந்து காரண வினை அமைதலும் உண்டு.

செய்தக்கால் செய்தக்கடை (செய்தக்கால் என்பது பேச்சு வழக்கில் செய்தாக்க என இன்றும் வழங்குகின்றது.)

'ஆல்' என்பது செய்து முதலான எச்சங்களோடு சேர்தல் காணப்படுகிறது. அன்றியும் செய்தார் முதலான

1. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 529.

முற்றுக்களோடு சேர்ந்து வழங்குதலும் உண்டு. அப்போது அது 'எல்' எனத் திரியும்.

செய்து + ஆல் <செய்தால்
செய்தார் + எல் <செய்தாரேல்

தெலுங்கில் எல் என்பதன் ஈறுகெட்டு ஏ என்பது விகுதியாக வழங்குகின்றது. (சேஸ்தே—செய்தால்).

செயவெனெச்சம் (Infinitive mood)

ஐரோப்பிய மொழிகளில் உள்ளவாறு செயவெனெச்சத்தைத் தனிவகையாகக் கொள்ளல் திராவிட மொழிகளில் இல்லை. இதனை வினையெச்சங்களுள் ஒன்றாகக் கூறுதலே மரபு.

வர வேண்டும்
புகழ விரும்பினான்
பாடத் தொடங்கினான்

இவற்றில் உள்ள வர, புகழ, பாட முதலிய எச்சங்கள் செய என்னும் வாய்பாடாக நிற்றல் காண்க. இவ்வெச்சங்கள், வரல் புகழல் பாடல் முதலிய தொழிற் பெயர்கள் ஈற்று மெய் கெட்டு நின்றவையே. பொருளால் வேறுபாடு இல்லாமை வழக்கு நோக்கி உணரப்படுகின்றது. பிராஹுய் குரூக் மொழிகளிலும் வேறுபாடின்றி வழங்குகின்றன.[1] ஐரோப்பிய மொழிகளிலும் இத்தகைய வளர்ச்சி உள்ளது.[2]

---

1. The infinitive is a verbal noun declinable throughout the singular—Bray, The Brahui Language, p. 134.

The infinitive of the verb stands for the abstract noun —P. Hahn, Kurukh Grammar, p. 92.

The infinitive in Bengali appears to be the verbal noun put in the locative—S. K. Chatterji, The Origin and Development of the Bengali Language, p. 1014.

2. F. M. Purdie, Syntax in Six Languages, pp. 54-58.

வரல் வேண்டும்
புகழல் விரும்பினான்
பாடல் தொடங்கினான்

பாடற்குத் தொடங்கினான் என்பதுபோலத் தொழிற் பெயரோடு நான்கனுருபு சேர்ந்தும் அப்பொருளில் வருதல் உண்டு.

செய என்னும் வாய்பாட்டுச் சொற்கள் வியங்கோட் பொருளிலும் வழங்குகின்றன.[1]

நீ வாழ, ஓங்க.

இவற்றின் ஈற்று லகரம் கெடாமல் நின்று அப்பொருள் தரலும் உண்டு.

நீ வாழல், ஓங்கல்.

ஆகலின், க, அ, அல் முதலானவை வியங்கோள் விகுதிகள் என வகுத்தனர் இலக்கண நூலார்.[2]

தமிழில் எச்சங்களாக உள்ள வடிவங்கள் கன்னடம் முதலான ஏனைத் திராவிட மொழிகளில் தொழிற்பெயர் களாக இருத்தலும் ஈண்டு ஆராய்ந்துணரத் தக்கதாகும்.

அலேதல்—அலெத (aleta) கன்னடம்
முறிதல்—முறத (murata) ,,
மேய்தல்—மேத (meta) தெலுங்கு
நடத்தல்—நடத்த (nadata) ,,

---

1. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 346.

2. பிரெஞ்சு, ஸ்பானியம், இத்தாலி மொழிகளில் 'செய்' என்பது (Infinitive) திரியாமல் நின்று ஏவுதற்பொருளிலும் வழங்குகின்றது.—F. M. Purdie, Syntax in Six Languages, pp. 60, 61.

ஆயின், கிரேக்க மொழியில் உள்ளதுபோல், செய என்னும் எச்சத்திற்கும் ஏவலுக்கும் வேறுபாடு உள்ளது.—F. Semenov, The Greek Language in its Evolution. p. 191.

**செயவெனெச்சப் பொருள்கள் :**

அவை பின்வருமாறு பலவகைப்படும்.

(i) விழத் தள்ளினன் என்பதிற் போல் காரியப் பொருளில் எதிர்கால வினையெச்சமாக வழங்கும்.

(ii) வரக் காண்கின்றேன் என்பதிற்போல உடனிகழ்ச்சிப் பொருளில் நிகழ்கால வினையெச்சமாக வரும்.

(iii) மழை பெய்ய நெல் விளைந்தது என்பதிற்போல இறந்த கால வினையெச்சமாகக் காரணப்பொருளில் வரும்.

(iv) வினையடையாக (Adverbs) வருமாறு பண்புப் பெயர்களுடன் 'ஆக' சேர்ந்து வழங்கும். (நன்றாகப் பேசினன்.)

(v) இரட்டித்து நின்று மிகுதிப் பொருள் தரும். (மழை பெய்யப் பெய்யக் குளம் நிரம்பும்.)

(vi) பல செயல்களை ஒரே காலத்தில் நிகழ்ந்தனவாகக் கூறும்போது பல வினைகள் இவ் வாய்பாட்டால் அடுக்கி வரும்.

முகில் எழ, வான் இருள, இடி இடிக்க......

**ஏவல் வினை (imperative mood)**

முன்னிலை ஒருமை ஏவலாக வரும் வினைச்சொல்லில் கால இடைநிலையும் விகுதியும் இல்லை. ஆதலின் வினைப் பகுதியே ஏவலொருமையாக வழங்குவது திராவிடமொழியியல்பு.

வாழ் - நீ வாழ்; செய் - நீ செய்.

முன்னிலை ஒருமை உணர்த்த ஆய் விகுதி புணர்தல் வேண்டும் என்றும்[1] மேற்கூறியவற்றில் அவ்விகுதி புணர்ந்து

1. We cannot say that 'come !' is an elliptical form of 'come thou.!' 'Come thou!' is rather an extended or redundant form of 'come!'; for, as the pronoun is really addressed to some one person, 'come!' is the normal form of expression. —A. E. H. Swaen, Grammatical Miscellany offered to. Otto Jespersen, p. 275.

கெட்டது என்றும் இலக்கண நூலார் கூறுவர்.[1] வினைப் பகுதி தனித்து நின்று ஏவற்பொருளுணர்த்தல் மொழி யியல்பு ஆதலின், அது பொருந்தாது.[2] முன்னிற்கும் ஒருவனை நோக்கியே கூறப்படும் சொல் ஆதலின் முன்னிலை ஒருமை விகுதி சேர்தல் மிகையே ஆகும்.[3] முகக்குறிப்பும் குரல் ஒலியும் ஏவற் குறிப்பை உணர்த்தலின், அதற்கென்று தனி விகுதியும் தேவையில்லை.[4]

முன்னிலைப் பன்மை ஏவல் வினைகளில் விகுதி இன்றி யமையாதது. மின் என்பது இலக்கியங்களில் காணும் விகுதி. உம் உங்கள் என்பன பேச்சு வழக்கில் உள்ளன.

வாழ்மின், வாரும், வாழுங்கள்
செய்மின், செய்யும், செய்யுங்கள்

---

1. செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகிடன் உடைத்தே.
—தொல். சொல். சடுo.

2. இந்நூலில் 'அடிச் சொற்கள்' என்ற பகுதியில் காண்க.

3. Since in the individual uttering such sentences the emotional state is especially strong and occupies the foreground of attention, the sensational content of the sentence is reduced to a minimum. As that party is almost invariably present and is directly addressed, there is no need of any special characterization of it, usually even of any specific mention of it, so that the subject of the imperative is usually omitted, and even in highly inflected languages the verbal form has often no special formative element to suggest the subject.—Pillsbury and Meader, The Pyschology of Language, pp. 279-80.

4. What characterises the imperative, is that to the idea of action it unites the idea of the will of the speaker. It is true that in most forms of the imperative it would be vain to seek for syllables which specially indicate this will. It is the tone of voice, the expression of countenance, the attitude of body which are charged to convey it.—M. Breal, Semantics, p. 235.

உம் விகுதியை உம்மையிடைச் சொல்லாகக் கருதுவர் கால்டுவெல். ஆயின், முன்னிலையில் வழங்கும் நும் என்பதன் திரிபாகிய உம் என்பதே ஈண்டு விகுதியாய் வருவதெனக் கொள்ளல் ஏற்புடைத்து.

மின் விகுதி, உம் என்பதும் இன் என்பதும் சேர்ந்து அமைந்ததாகும். இன் என்பது என் எனத் திரிந்து பேச்சு மொழியில் வழங்குகிறது. (நீ செய்யென், நீ பேசென்.)

செய் + என் — செய்யென் — ஒருமை ஏவல் (பேச்சு வழக்கு)
செய்யும் + என் — செய்யுமென் — பன்மை ஏவல் (பேச்சு வழக்கு)
செய்யும் = இன் — செய்யுமின் — ஏவற்பன்மை
செய்யுமின் > செய்மின் — உகரம் கெடல்
(உண்ணும் > உண்ம் ; போலும்>போன்ம் என்பனபோல).

வா, போ என்னும் சொற்களில் உள்ள ஏவும் கடுமை நீங்கி, வேண்டுகோளாக ஏவும் முறை அமைந்தவற்றை வியங்கோள் என்பர். வருக போக என்பன அவ்வகையின. வாழ்க ஒழிக முதலான (வாழ்த்தல் வைதல் பொருளுடைய) சொற்களும் வியங்கோள் எனப்படும். ஏவுதற்குக் குறுகிய வினைச்சொற்களும், வேண்டுதற்கு நீண்ட சொற்களும் அமைந்த மக்யார் (Magyar) மொழிகளை ஈண்டு ஒப்பிடலாம்.[1]

தன்மை முன்னிலை ஆகிய ஈரிடத்தும் வியங்கோள் வரலாகாதெனத் தொல்காப்பியனார் விலக்கினர்.[2] ஆயினும் இலக்கிய வழக்கு அவ்வாறு விலக்கவில்லை.[3] ஆதலின்

1. Jespersen, Language, p. 403.
2. முன்னிலை தன்மை ஆயி ரிடத்தொடு
மன்னா தாகும் வியங்கோட் கிளவி.-தொல். சொல். ௨௨௬
3. நான் இவளினும் பிரிக—புறம். 71-6.
நீ மன்னிய, மன்னுக—புறம். 6-29.

பிற்காலத்தார் வியங்கோள் எல்லா இடங்களுக்கும் திணை பால்களுக்கும் பொதுவானது என்று கொண்டனர்.[1] இதனால், திணைபாலிடம் உணர்த்தும் விகுதி வியங்கோளில் இல்லை என்பது தெளிவு. ஏவலில் ஒருமை பன்மை உளது. அதுவும் வியங்கோளில் இல்லை. ஏவற் பன்மையில் வரும் மின் உம் விகுதிகளில் முன்னிலைப் பன்மை யுணர்த்தும் இடப் பெயரின் திரிபு உள்ளது என மேலே கண்டோம். வியங்கோளில் உள்ள விகுதியோ திணைபாலிடங்களுக்குப் பொதுவான தொழிற்பெயர் விகுதியாகவே உள்ளது.[2]

தொழிற்பெயர் விகுதியாகிய அல் என்பது மெய் கெட்டும் கெடாதும், கைவிகுதி திரிந்தும் வியங்கோளில் அமைகின்றது.

வாழல்—வாழ
ஓங்கல்—ஓங்க
செய்கை—செய்க
வருகை—வருக

குருக் மொழியில் ஒரு வேறுபாடு காணப்படுகின்றது. பா (வா) என்பது ஏவலாகவும், பர்கே (வருக) என்பது வியங்கோளாகவும் வழங்குகின்றது. ஈரிடத்தும் தொழிற் பெயரே காணப்படுகின்றது.[3]

---

1. கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலும் இடம்பால் எங்கும் என்ப.—நன்னூல், ௩௩௮.

2. In Greek there is a distinction to be observed between the two; when the imperative is used, it is understood that the command must be carried out immediately; when the infinitive is used, the command is of a more general nature; a course of action rather than a separate and distinct act is ordered.—A. F. Semenov, The Greek Language In Its Evolution, p. 191.

3. The form ke is employed when a more familiar or milder sort of imperative is intended or when the fulfil-

தொழிற்பெயர் (Verbal noun)

தொழில் நிகழ்தலை உணர்த்தாது, தொழிலையே இன்ன தென்று உணர்த்துவது தொழிற்பெயர்.[1] இது இருவகை :—(1) காலம் உணர்த்தாத தொழிற் பெயர் ; (2) காலம் உணர்த்தும் தொழிற் பெயர்.

முன்னது, வினைப் பகுதியோடு தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, வு, சி, து, உள், மை முதலான விகுதிகளில் ஒன்று சேர்ந்து அமைவது. நடத்தல், ஆடல், ஓட்டம், விடை, கிடக்கை முதலியன இவ்வகையைச் சாரும்.

பின்னது, கால இடைநிலையோடு கூடி, 'து' விகுதி அல்லது 'மை' விகுதி பெற்றுவருவது : நடந்தது, நடக்கிறது, நடப்பது, ஆடியது, ஆடுகிறது, ஆடுவது, நடந்தமை, வந்தமை, ஆடினமை முதலாயின.

வினையாலணையும் பெயர் (Participial noun)

வினைமுற்றுக்கள் திரிந்தும் திரியாமலும் வினையாலணையும் பெயராய் அமையும். இவை தொழிலை உணர்த்தாமல் தொழில் செய்வானை உணர்த்துவன.

செய்தானைக் கண்டேன்—திரிபில்லாதது
தாழ்ந்தார் இல்லை— ,,
செய்தவனைக் கண்டேன்—திரிபுடையது
தாழ்ந்தவர் இல்லை— ,,

---

ment of the action commanded is not expected to be accomplished at once. Illustration : Bara, come! i.e. at once; barke, come (if you please). ke remains unaltered in all genders and both numbers.—E. Hahn, Kurukh Grammar, p. 43.

1. தொழில் மாத்திரம் உணர்த்துவன எல்லாம் தொழிற் பெயர் என்பது ஆசிரியர் கருத்து என்ப.—சேனாவரையர், தொல். சொல். சகடு.

படர்க்கை ஒன்றன்பால் வினைமுற்றுக்கள் வினையாலணையும் பெயர்களாக நிற்றலேயன்றித் தொழிற்பெயர்களாகவும் நிற்கும். இவ்வாறு, 'செய்தது முதலான சொற்கள் மூவகைப் பொருள் உணர்த்தல் காண்க.

(i) என் கை செய்தது (வினைமுற்று).

(ii) இதைச் செய்தது என் கைதான் (வினையாலணையும் பெயர்).

(iii) செய்தது நல்லதே (தொழிற் பெயர்).

**வினையடியாகப் பிறக்கும் பெயர்கள் (Derivative nouns)**

வினைப்பகுதியோடு விகுதிகள் சேர்வதால் சில பெயர்கள் பிறக்கின்றன. சில பெயர்கள் விகுதிகள் அற்றவை. அவற்றை இலக்கண நூலார் முதனிலைத் தொழிற்பெயர் என்பர்.

**பெயர்களாம் முறைகள்**

(1) விகுதிகள் பெறாமல் வினைப்பகுதியே பெயராக வருதல் (முதனிலைத் தொழிற் பெயர்).

கட்டு (இது ஒரு கட்டு)
அடி (ஓர் அடி அடித்தான்)
பிடி (ஒரு பிடி சோறு)

(2) வினைப்பகுதியின் ஈற்று வல்லினம் இரட்டித்துப் பெயராதல் :

எழுது > எழுத்து
பாடு > பாட்டு
ஆடு > ஆட்டு

மெல்லொலியுடைய ஈறு இரட்டித்து வல்லொலி பெறும் என்பர். தகர விகுதி முதலியன சேர்ந்தே இவ்வாறு ஆயிற்று என்பது மொழி நூலார் கருத்து.[1]

---

1. இவ்வாறு மெல்லொலி வல்லொலி பெறுமிடங்களில் பொருள் மாறுதல் ஏற்படுகின்றது. அத்தகைய மாறுதல்களாவன :

(3) வினைப்பகுதியின் முதலுயிர் நீண்டு பெயரா யமைதல்:

படு > பாடு மின் > மீன்
நக்கு > நாக்கு

(4) வினைப்பகுதியின் முதலுயிர் குறுகிப் பெயராதல்:

காண் > கண்

(5) மை விகுதி சேர்ந்து பெயராதல் (மை விகுதி பண்புப்பெயர்க்கே பெரும்பான்மையும் ஈறாகும்; சிறுபான்மை தொழிற்பெயர்க்குமாம்):

ஆடினமை, வந்தமை

(6) அம் விகுதி சேர்ந்து பெயராதல்.

தூங்கு > தூக்கம் திருந்து > திருத்தம்
ஆடு > ஆட்டம் தோண்டு > தோட்டம்
உயர் > உயரம் ஆழ் > ஆழம்

---

(i) பெயர் பெயரடையாதல்:

காடு > காட்டுப் (புலி)

(ii) தன்வினை பிறவினையாதல் (துவ்விகுதி சேர்ந்து திரிவது):

ஓடு > ஓட்டு
ஆகு > ஆக்கு

(iii) வினைப்பகுதி இறந்தகாலம் உணர்த்தல் (த் இடைநிலை சேர்ந்து திரிதல்):

அறு > அற்று
விடு > விட்டு

(iv) வினை பெயராதல்:

பாடு > பாட்டு
எழுது > எழுத்து

நான்காவது வகையே இங்குக் கொள்ளப்படுவது.

(7) கை, தி, சி, பு முதலான விகுதிகள் சேர்தல்:

காய் > காங்கை
கெடு > கெடுதி
புகழ் > புகழ்ச்சி
தின் > தின்றி, திற்றி (தெலுங்கு: திண்டி)
வேய் > வேம்பு
பாய் > பாம்பு

(8) கண், பாடு, மானம் முதலான சில பெயர்களே விகுதிகள்போல் சேர்ந்து பெயராதல்:

இடுக்கண், உறுகண்
கட்டுப்பாடு, சேர்மானம், கட்டுமானம்

இவ்வாறு பிற சொற்களையும் ஆய்ந்தறிந்து கொள்ளல் வேண்டும்.

சேரி > சேர்
விழா > வீழ் (விரும்பு)[1]
பிறை > பிற (பிறத்தல்)
பாசி > பா (பரவு)
பொலிசை > பொலி (மிகு)
இழுதை (பொய்) > இழு (இழுக்கு)
கடன், கடமை > கட (கடத்தல்)
குழாய் > குழி
சுடர் > சுடு
புகார் > புகு
உகிர் > உகு
குதிரை > குதி
உடல் > உடு (உடுத்தல்)

1. கால்டுவெல் விழி என்பதினின்று விழா என்பது அமைந்தது என்பர். (A Comparative Grammar of the Dravidian Languages, p. 543) கண் விழித்தலால் அமைந்த பெயர் என்னும் அக் காரணம் பொருந்துவதன்று. எல்லோரும் விரும்பிச் செய்வதால், வீழ்தல் - விரும்புதல் என்னும் காரணம் பற்றி அமைந்ததெனல் பொருந்தும்.

வயல் > வை (வைத்தல்)
தொட்டில் > தொடு
விட்டில் > வெட்டு
பருத்தி > பரு (பெருகு)
அருள் > அரு (அருமையாய் இருத்தல்)
பொருள் > பொரு (பொருந்து)

**வினைமுதற் பெயர்கள் (Nouns of agency)**

தமிழில் உள்ள வினையாலணையும் பெயர்கள் வினை முதலை உணர்த்தும். இவையே அன்றித் தமிழில் மிகுதியாக வழங்கும் வேறு வினைமுதற் பெயர்களும் உண்டு. கொள் - கொள்ளி (தீயைக் கொள்வது.) கொத்து - மீன் கொத்தி (மீனைக் கொத்தும் பறவை). காட்டு - ஆள்காட்டி (ஆளைச் சுட்டிக்காட்டும் விரல்). இவற்றில் காணப்படும் விகுதி இ. இவ் விகுதி வடமொழி இகர விகுதியினின்று வேறானது. காரணம் :

(1) வடமொழி இகர விகுதி பாலுணர்த்துவது. இது பாலுணர்த்தாதது. (2) வடமொழி கலந்த தமிழ் இலக்கியப் பகுதியிலே அன்றிக் குடியானவர் பேச்சில் இது மிக்கு வழங்குகின்றது. பல செடி கொடிகளின் பெயர்களும் இகர விகுதி பெற்று அமைந்திருத்தலால் வட மொழி விகுதி என்று கொள்ளப்படாது. நகைக்குறிப்பு மொழிகளிலும், பழமொழிகளிலும், தொடர்மொழிகளிலும் உயர்வழக்காயினும இழிவழக்காயினும் வரையறையின்றிப் பயில்கின்றது. ஆகவே பிறமொழியிலிருந்து கடன் வாங்கிய விகுதி அன்று.

கொள்ளி, உண்ணி
சேர்ந்தாரைக்கொல்லி
மீன்கொத்தி, தொட்டாற்சுருங்கி
திண்ணைத்தூங்கி, ஆள்காட்டி

ஆகவே இவற்றில் உள்ள இகர விகுதி தமிழுக்கே உரியது என்றும், அதனால்தான் பொதுமக்களின் பேச்சு முதல் புலவரின் செய்யுள் வரையில் எங்கும் வழங்குகின்றது என்றும் கூறலாம். ஒரு மொழி வேறொரு மொழியிட மிருந்து பெயர்ச்சொற்களைக் கடன்வாங்குதல் போல், விகுதிகளை இவ்வாறு கடன்வாங்குவதில்லை என்பது இங்குக் கருதத்தக்கது.

துணைவினைகள்

விகுதி முதலியன சேர்ந்து வினைச்சொல் பலவகை யாய்ப் பெருகுதலே அன்றி, இரு, விடு, கொள், படு, உண், நில், வா, போ முதலான துணைவினைகள் சேர்ந்து புதிய புதிய பொருள் வேறுபாடுகளை உணர்த்திப் பலவாய் வளர்தலும் இம்மொழியில் உள்ளது.

'எழு' என்பது தன்னினும் தாழ்ந்தவர்க்கும் ஒத்தவர் சிலர்க்கும் உரிய ஏவலாக வழங்க, 'எழுந்திரு' என்பது மற்றவர்க்கு உரியதாய் வேண்டுகோள் உணர்த்துவதாய் வழங்குகின்றது. 'எழுது' என்பதில் இல்லாத துணிவுப் பொருள், அல்லது முடிவுப்பொருள், எழுதிவிடு என்பதில் உள்ளது. 'பார்' என்பது பொதுவாய் விளங்க, 'பார்த்துக் கொள்' என்பது தன்நோக்கு உடையதாய் வழங்கு கின்றது. இவ்வாறே பல துணைவினைகள் பொருள் வேறு பாடுகளை உணர்த்தி வினைச்சொற்கள் பெருகுதற்குக் காரணமாக உள்ளன.

காலப்போக்கில் வளரும் கருத்துக்களைத் தடையின்றி உணர்த்துதற்கு இவை பெரிதும் பயன்படுகின்றன. கால வேறுபாடுகளை உணர்த்துதற்கும் இவை பயன்படுதலை மேலே கண்டோம். தமிழரோடு பல ஆண்டுகள் பயின்று தமிழ்ச் செல்வத்தில் திளைத்த ஜி. யு. போப் என்னும் ஆங்கில நாட்டு அறிஞர் இவற்றை ஆராய்ந்துணர்ந்து

தமிழ்மொழியின் வளர்ச்சிக்கு இவை துணைசெய்தலைப் பாராட்டியுள்ளார்.[1]

இவ்வாறு வினைச்சொல் திராவிட மொழிகளில் பல்வேறு வகையில் பயன்பட்டு வருதலை நோக்குமிடத்து, அதன் சிறப்புப் புலனாகும். திராவிட மொழிகளின் உயிர், வினைச்சொல்லில் உள்ளது எனலாம். வினைமுற்றாய், திணை பால் இடம் காலம் உணர்த்தப் பலவகையாய்ப் பல்குதலே அன்றி, வினையடையாகவும் (Adverbs), பெயரடையாகவும் (Adjectives), பெயரோயாகவும் (Derivative nouns), பல்வேறு துணைப் பொருளனவாகவும் (moods, voices etc), பெருகி வழங்குதலால்,[2] திராவிட மொழிகளின் சொற்கோவை (vocabulary) பெரும்பாலும் வினைச்சொல்லையே கொண்டு விளங்கக் காணலாம்.

---

1. In modern Tamil the use of auxiliary verbs is increasing, and ought to increase. As languages grow they require auxiliary verbs to give greater precision. Tamil might vie with English in this respect, if its auxiliaries were fully brought into use.—G. U. Pope, A Hand-book of the Ordinary Dialect of the Tamil Language, p. 68.

2 The verb is of supreme importance in the Kui language because by means of its infinitive and participles, it may play the part not only of a verb but also of a noun, adjective, adverb or conjunction: and also because, by the introduction of certain particles into the finite verb, various moods and added shades of meaning are expressed. Thus without adding more words to its vocabulary, the verb increases the language's power of expression very considerably.

—W. W. Winfield, A Grammar of the Kui Language, p. 56.

3. இவ்வாறு வினையடி ஒன்றிலிருந்து பல சொற்கள் ஏற்படுதல் பிறமொழிகளிலும் உண்டு. கிரீக் மொழியில் வினையடி ஒன்றிலிருந்து 263 சொற்கள் பிறக்கும் என்பர். வடமொழியில் 891 சொற்கள் பிறக்கும் என்பர்.

## ௧௫. சுட்டு முதலியன

**சுட்டு வினைப் பெயர்கள்**

அகரம் சேய்மையில் உள்ள பொருளைச் சுட்டும் இகரம் அண்மையில் உள்ளதைச் சுட்டும்; உகரம் நடுவணதையும் பின்னதையும் சுட்டும். உகரம் வழக்கிறந்தது. அகரமும் இகரமும் பலவாறு பயின்று வழங்குகின்றன. உகரம் தமிழிலக்கியத்திலும் கன்னட இலக்கியத்திலும் அருகிக் காணப்படுகின்றது.

அண்மைப் பொருளைக் கைகாட்டிச் சுட்டும்போது கை நீளாமல் நிற்றலும் சேய்மைப் பொருளைக் காட்டும் போது நீண்டு நிற்றலும் போலவே, நாவால் குறிக்கும் போது நா ஒரு சிறிது குறுகி நின்று இகர வுயிரால் அண்மைப் பொருளைச் சுட்டலும், குறுகாது நின்று அகர வுயிரால் சேய்மைப் பொருளைச் சுட்டலும் காணலாம். கையால் சுட்டும்போது கைக்கு உள்ள முயற்சியையே, ஒலியால் குறித்துச் சுட்டும்போது நா மேற்கொள்கின்றது என அறிஞர் சிலர் கருதுகின்றனர்.[1]

அவன் இவன் முதலான சுட்டுப் பெயர்களைப் போலவே, இருதிணை ஐம்பால் விகுதிகளையுடைய வினைப்

---

1. It has been suggested, not without a certain degree of plausibility, that the pronominal root of the first person in the Indo-European (and in many other languages), 'ma' (our 'me') has in its internality of formation, its utterance with closed lips, as if shutting out the external world, a peculiar adaptedness to express one's own personality; and that the demonstrative 'ta' (which has become our 'that') was prompted by the position it calls for in the tongue which is thrust forward in the mouth, as it were to point out the object indicated —Whitney, Language and the Study of Language, p. 430.

பெயர்கள் உண்டு. எகரவினா எல்லாத் திராவிட மொழிகளிலும் காணப்படுவது.

[அ, இ, உ, எ என்னும் இந் நான்கு உயிர்களும் இவ்வாறு திராவிட மொழிகளில் சுட்டு வினாப் பொருளில் தொன்றுதொட்டு வழங்கிவருவது பெருஞ் சிறப்பினதாகும்.] உலகில் உள்ள வேறு எம்மொழிகளிலும் இத்தகைய பண்பட்ட ஒழுங்குமுறை இல்லை. அழகும் உண்மைப் பெருமையும் வாய்ந்த இத்தகைய ஒழுங்கு திராவிட மொழிகளின் சிறப்பை விளக்கவல்லது.[1]

யா என்பதும் வினாப் பொருள் தருவது; ஐம்பால் விகுதிகளுடன் கூடி வருவது. இது கன்னடத்திலும் வழங்கிவருகின்றது. [யா என்பதற்கும் எகரவுயிர்க்கும் தொடர்பு உண்டு. இரண்டனுள் யா பழையது எனக் கருதுவர் சிலர். (யம>எமன் எனப் பல வடசொற்கள் தமிழாகும் முறை ஈண்டுக் கருதத்தக்கது) அவர் கருத்துப்படி, யா என்பது ஏகாரமாகத் திரிந்து வழங்கியிருக்குமாம்.] இன்னும் மலையாளத்தில் எவன் எவள் என்னும்

1. I need not call attention to the beautiful and philosophical regularity of this quadruple set of remote, proximate, and intermediate demonstratives and interrogatives. In no other language or family of languages in the world shall we find its equal or even its second. In addition to which, the circumstance that the demonstrative vowels are not only used in these languages with an invariable and exact discrimination of meaning which is not found in the Indo-European tongues (with the solitary and partial exception of the New Persian), but are also associated with a corresponding interrogative vowel of which the Indo-European tongues are totally ignorant, tends to confirm the supposition which I have already expressed, that the Dravidian family has retained some pre-Sanskrit elements of immense antiquity. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 422.

தமிழ்ச்சொற்களுக்கு நேராக ஏவன், ஏவள் என்பன உள்ளன. மலையாளம் தமிழ் இரண்டிலும் 'ஏது' என்னும் சொல்லும் உள்ளது. தெலுங்கில் 'ஏதி' என்றுள்ளது. ('யா' ஏகாரமாதலைத் தெலுங்கில் யாண்டு>ஏடு என ஆதலும் தெரிவிக்கும்.)

யாவர் என்பதன் திரிபாகிய யார் என்பது ஒருமையிலும் வழங்குகின்றது. அது 'ஆர்' என்றும் மருவியுள்ளது. 'ஏவன்' என்னும் வினா இலக்கியத்தில் 'ஏன்' எனும் பொருளில் வந்துள்ளது.

தெலுங்கு மொழியில் வாடு, வீடு, வாரு, வீரு, தா, தீ என்பன அவன், இவன், அவர், இவர், அது, இது என்னும் தமிழ்ச்சொற்களுக்கு நேரானவையாகும். வாடு முதலியவற்றில் முதலில் வகரமெய் அல்லது தகரமெய் காணப்படினும், அவை சுட்டு அல்ல. மொழி முதலில் இருந்த அகரவுயிரும் இகரவுயிரும் இடம் பெயர்தலால் ஆகிய திரிபுகளே இவை.[1] ஆதலால் வாடு, வீடு, தா, தீ முதலிய தெலுங்குச் சொற்களிலும் அ இ என்பனவே சுட்டுக்களாக உள்ளன.

தமிழில் அகரம் முதலான சுட்டுவினாக்களடியாகப் பிறந்த பண்புப் பெயர்கள் பல மிக ஒழுங்காக அமைந்து மொழிக்கு அழகு தருகின்றன. அம்மை, இம்மை, உம்மை, எம்மை, இம்பர், உம்பர் முதலியன பல உள்ளன.

திராவிட மொழிகள் ஒவ்வொன்றிலும் எ அல்லது ஏ முதலிலும், ன் அல்லது ம் ஈற்றிலும் பெற்ற வினாக்கள் காணப்படுகின்றன. அவை என், ஏன், ஏம் என்பனவாகும்.

1. இந்நூலில் 'உயிரெழுத்துக்கள்' என்னும் பகுதியில் காண்க.

என் > என்ன, என்னது—தமிழ்
என்—தமிழ், மலையாளம்
எனு—கன்னடம்
எமி—தெலுங்கு (ஏமோ என்பதுமாம்.)

அந்த, இந்த, எந்த என்பனவும், அன்று, இன்று, என்று என்பனவும் இவை போல்வனவும் இவ்வாறே சுட்டு வினாக்களினின்றும் பிறந்தவை.

அம், இம், உம், அன், இன், அல், இல் என்னும் இவை முதலில் சுட்டுப் பெயராய் இடப்பொருளையே உணர்த்தி யிருக்க வேண்டும். பின்னர்ப் படிப்படியாக மாறித் தொழிற் பெயர் விகுதிகளாகவும் பிற விகுதிகளாகவும் அமைந்தன என்று கொள்வர்.

ஆ ஈ ஏ என்பவை சுட்டுவினாப்பொருளில் தமிழிலக்கியத்திலும் பிறமொழிப் பேச்சிலும் இலக்கியத்திலும் வழங்கிவருவதால், நெட்டெழுத்துக்களாகிய அவையே பழையன என்றும், குற்றெழுத்துக்களாகிய அ, இ, எ என்பன பின்னர் அமைந்தன என்றும் கூறுவர். இவற்றா லாகிய சொற்களிலும் ஆங்கு. அங்கு, ஈங்கு, இங்கு, யாங்கு, எங்கு என இரு வடிவங்கள் இருத்தல் இதற்குச் சான்றாகும்.

பெயரடையாக வரும் சுட்டு வினாக்கள் (Demonstrative and Interrogative adjectives):

சுட்டுவினாக்களின் அடிச் சொற்களாகிய அ, இ, எ அல்லது ஆ, ஈ, ஏ என்பன பெயர்ச்சொற்களுக்கு முன் பெயரடைகளாக நிற்கவல்லன. அங்ஙனம் வருங்கால், சுட்டு வினாக்கள் குறிலாயின் வகர உடம்படு மெய் பெற்றும், வருமொழி முதல் இரட்டித்தும் வரும்.

அ+ஊர்<அவ்வூர்   அ+யானை<அவ்யானை
அ+கடல்<அக்கடல்   எ+மண்<எம்மண்

மலையாளத்திலும் கன்னடத்திலும் சுட்டுவினாக்கள் நெடிலாய் வருதல் பெரும்பான்மையாகும். அவை நெடிலாய் வருங்கால், மேற்கண்ட விதி இல்லை; மற்ற உயிரெழுத்துக்களைப் போல் புணர்ச்சி பெறும்.

இவையே அல்லாமல், [தமிழில், அந்த, இந்த, எந்த என்னும் சுட்டுவினாக்கள் உள்ளன.] இவை பிறமொழிகளில் இல்லை; மலையாளத்திலும் இல்லை; மலையாளம் தமிழிலிருந்து பிரிந்த பின்னரே இவை தமிழில் பயின்றிருக்க வேண்டும் என்பர். தமிழ்ச் செய்யுட்களிலும் இவை தக்க இடம் பெறவில்லை.

இவை போன்ற சொற்கள் (தெலுங்கிலும் கன்னடத்திலும்) உள்ளன. ஆனால் அவை பொருளால் வேறுபடுகின்றன.

அந்த anta), இந்த (inta), எந்த (enta)
(அது போன்ற அல்லது அவ்வளவான...)

அப் பொருளில் தமிழிலும் மலையாளத்திலும் உள்ள சொற்கள் அன்ன, இன்ன, என்ன என்பன. அவற்றின் ஈற்றில் உள்ள அகரம் பெயரெச்ச ஈறாகக் கொள்ளல் பொருந்துவதாம்.

[தெலுங்கில் அட்டி, இட்டி, எட்டி (அதுபோல், இதுபோல், எதுபோல்) என்னும் சொற்களும், சுட்டு வினாச் சொற்களே. கன்னடத்தில் அனிது, இனிது, எனிது (anitu, initu, enitu) என்னும் சொற்கள், தமிழிலக்கியத்தில் வழங்கும் அனைத்து, இனைத்து, எனைத்து என்பவற்றிற்கு நேரானவையாம்.]

தெலுங்கில் அந்தரு, இந்தரு, எந்தரு என்பன மக்கள் தொகையினையும், அன்னி, இன்னி, என்னி என்பன

அஃறிணைப் பொருள்களின் தொகையினையும் சுட்டியும் வினவியும் வழங்குவன.

[தமிழில் உள்ள அந்த இந்த எந்த என்பவை அது இது எது என்பவற்றிலிருந்து பிறந்திருக்கலாம்; ஈறு, பெயரெச்ச விகுதியாகிய அகரம் எனலாம். அத, இத, எத என்பவை மூக்கொலி பெற்று அந்த, இந்த, எந்த எனத் திரிந்திருக்கலாம். அதுபொழுது, அதுபோழ்து என்று இலக்கியத்திலும், அந்தப் பொழுது என்று பேச்சு மொழியிலும் வழங்குவதைக் காண்க.]

வினையடையாக வரும் சுட்டுவினுக்கள் (Demonstrative and Interrogative Adverbs):

வினையடையாக வரும் சொற்களைத் (Adverbs) தனியே சொல்வகையுள் (parts of speech) ஒரு வகையாகப் பிரித்தல் தமிழிலும் பிற திராவிட மொழிகளிலும் இல்லை. ஆனால், பெயர்ச் சொற்களும் வினைச் சொற்களும் வினையடையாக வருகின்றன. தமிழில் உள்ள இடைச் சொற்களும் உரிச்சொற்களும் அவ்வாறு வருகின்றன. சில பெயர்ச் சொற்களுடன் ஆக, ஆகி, ஆய் முதலான சொற்கள் சேர்ந்து வினையடையாகின்றன.

நன்றாக, நன்றாய்ப் பேசினான்.........

சுட்டு வினுக்கள் பற்றிய வினையடைகளும் அவ்வாறே தனியினமாக இலக்கண நூலுள் கூறப்படவில்லை. ஆயினும் அத்தகைய சொற்கள் பல உள்ளன.

(1) சுட்டு, வினு + கு, ங்கு—அங்கு, இங்கு, எங்கு
(2) டி + சு, ஞ்சு— அஞ்சு (தளு)
(3) டி + டு, ண்டு—ஆண்டு, ஈண்டு, யாண்டு
(4) டி + று, ன்று—அன்று, இன்று, என்று
அற்றை, இற்றை

(5) டை ம்பு + அர்—இம்பர், உம்பர் (தமிழ்ச் செய்யுளில்)
(6) டை + ல், ள்—இல்லி, அல்லி, எல்லி (கன்னடம்)
(இங்கு, அங்கு, எங்கு)

ஆ, ஓ—வினக்கள்:

இவை பெயர்ச்சொல்லின்முன் சேர்க்கப்பெறும் எ, ஏ, யா என்னும் வினக்களின் வேறுபட்டன. ஆ, ஓ என்னும் வினக்கள், பெயர்வினைகளின்பின் சேர்க்கப்பெறுவன. (ஏ என்பதும் தமிழ்ச் செய்யுளில் பெயர்வினைகளின்பின் சேர்க்கப்பெற்று வழங்குகின்றது.)

உண்டா? உண்டோ? உண்டே?

செப்பாக உள்ள ஒரு வாக்கியத்தின் இறுதியில் ஆ அல்லது ஓ வினவைச் சேர்ப்பின், அவ்வாக்கியம் வினவாக்கியமாக மாறும். இவ்வாறு வினவாக்கியங்கள் எளிதில் அமைதல் திராவிட மொழிகளின் சிறப்பியல்பாகும்.

அவன் வருவான்—செப்பு
அவன் வருவானே—வின

ஓகாரம் மலையாளத்தில் பெரிதும் வழங்குகின்றது. இது தமிழில் ஐயப் பொருளில் வரும்போது பிற வினச்சொற்களில் ஈற்றிலும் சேர்க்கப்படுகின்றது.

எவன்—எவனோ
எது—எதுவோ

சுட்டுவின அடிச்சொல்:

சுட்டுப் பெயர்களின் அடிச்சொற்கள், அ, இ, உ என்னும் தனிக் குற்றெழுத்துக்களா, அல்லது அவ் இவ் உவ் என்னும் வகர மெய்யை அடுத்த குற்றெழுத்துக்களா என்பது ஆராயத்தக்கது.

(1) அ, இ, உ என்னும் தனிக் குற்றெழுத்துக்கள் அடிச்சொற்களாயின்,

இ + அன் — இயன்
இ + அள் — இயள்
இ + அர் — இயர்

என்பன சொற்களாக வழங்கியிருக்க வேண்டும். எங்கும் யகரம் உடம்படு மெய்யாகத் தோன்றாமல், வகரமே காணப் படுகின்றது. ஆதலின், இக் குற்றெழுத்துக்களை அடிச் சொற்கள் என்று கருதத் தடை நேர்கின்றது.

குற்றெழுத்தாய் நிற்குமிடத்து, 'இயன்' என யகர உடம்படுமெய் பெறாமல் முறை பிறழ்ந்து 'இவன்' என வகர மெய் பெற்று அமைந்தது போலவே, நெட்டெழுத் தாய் நிற்குமிடத்து, 'ஆவிடை' என வகர உடம்படுமெய் பெறாமல், முறை பிறழ்ந்து 'ஆயிடை' என யகர மெய் பெற்று நிற்றலும் வியப்பாகவே உள்ளது.

(2) சுட்டுப் பெயர்களில் இவ்வாறு உடம்படு மெய் பிறழ்ந்து வருவதற்கு ஒப்புமையாக்கம் (analogy) முதலாய காரணமும், கோவில் கோயில் முதலாய எடுத்துக்காட்டுக் களும் காட்டலாம். ஆயின், தொடர்களில் முறை பிறழ் வதற்குக் காரணம் காட்ட இயலவில்லை :—

இ + அணி — இய்யணி
இ + இடம் — இய்யிடம்
இ + உலகம்— இய்யுலகம்
இ + யானை — இய்யானை

எனத் தொடர்கள் புணராமல், இவ் வணி இவ்விடம் இவ் வுலகம் இவ்யானை என்றே புணர்ந்து அமைகின்றன. ஆதலின், அடிச்சொல் இகரவுயிராகக்கொள்ள இடமில்லை.

இவ் + அணி — இவ்வணி
இவ் + இடம் — இவ்விடம்
இவ் + உலகம்— இவ்வுலகம்
இவ் + யானை — இவ்யானை

எனக்கொண்டு, இகரவுயிரும் வகர மெய்யும் சேர்ந்த தாகவே கொள்ளவேண்டியுள்ளது.

(3) இவற்றிலும் வகரம் உடம்படு மெய்யே எனக் கூறி முறை பிறழ்ந்தமைக்குக் காரணம் காட்ட முயலலாம். ஆயினும், வகரம் உடம்படுமெய் ஆயின்,

இ + வ் + அணி — இவணி
இ + வ் + இடம் — இவிடம்
இ + வ் + உலகம்— இவுலகம்

எனப் புணர்ந்து நிற்கவேண்டுமே அன்றி, வகரம் இரட்டு தற்குக் காரணம் இல்லை;

நல் + அணி — நல்லணி
தம் + இடம் — தம்மிடம்
மண் + உலகம்— மண்ணுலகம்

என்பன போல, தனிக்குறில் அடுத்த மெய்யாக நின்ற காரணத்தால்தான் வகரம் இரட்டித்து அமைகின்றது. ஆதலின், அவ் இவ் உவ் என்பவற்றை அடிச்சொற்களாகக் கொள்ளலே பொருந்துகின்றது.

(4) அன்றியும், வகரம் உடம்படுமெய் ஆயின், தெலுங்கு மொழியில் உள்ள வாரு, வீரு, வாடு, வீடு முதலான சுட்டுப்பெயர்களில் (உயிர் இடம் பெயர்தல் என்ற விதிப்படி) முதலெழுத்தாய் நிற்கும் அளவிற்கு அதற்குச் சிறப்புத் தோன்ற இடமில்லை. வகர மெய் உடம்படுமெய் யாயின், இத் திரிபுகளால் எளிதில் அழிந் திருத்தல் கூடும்; அழியாமல் இத்தகைய சிறப்பிடம் பெற்று நிற்றலால் அது அடிச்சொல்லில் அமைந்ததே எனக் கருதவேண்டியுள்ளது.

(5) வகர மெய் அடிச்சொல்லில் அமைந்ததே என்ற கருத்தை மறுப்பவர், அது என்ற சுட்டுப் பெயரைக் காட்டி அச் சொல்லில் வகரம் இல்லையே எனக் குறை

கூறலாம். அவன், அவள், அவர், அவை, இவன், இவள், இவர், இவை என்னும் சொற்களில் வகரம் இருத்தலும், அது, இது என்னும் சொற்களில் வகரம் இல்லாமையும் வெளிப்படை. அதற்குக் காரணம் இன்னதென ஆராயும் போது, மற்றொரு சான்றும் உடன் கிடைக்கின்றது.

அடு, இடு, புது முதலான சொற்கள் எங்கும் அஃடு, இஃடு, புஃது முதலான வடிவங்களைப் பெறுதலே இல்லை. ஆயின், அது இது என்பவை, வருமொழி முதலாக உயிர் வருமிடத்து அஃது இஃது என்று ஆகின்றன. இவற்றில் உள்ள ஆய்தம் மற்றொரு மெய்யின் திரிபாகக் கொள்ளல் பொருந்தும்.

பல்து—பஃது (பத்து)
கல் தீது—கஃறீது
முள் தீது—முஃடீது

என்பவற்றில் லகர ளகரமாகிய இடையின மெய்கள் ஆய்தமாகத் திரிந்தமை போலவே,

அவ் + து — அஃது
இவ் + து — இஃது

என ஆயிற்று என்று கொள்ளவேண்டும் பிற்காலத்தில் ஒலித்திரிபுகள் பல ஏற்பட ஏற்பட, நுண்ணிய ஆய்தம் மெய்ம்முதல்மொழி வருமிடத்து மறைவதாயிற்று. உயிர் முதல்மொழி வருமிடத்து மட்டும் மறையாமல் நிற்பதாயிற்று.

அது மரம்
அஃது ஆறு
இது காடு
இஃது இசை

என்னும் வழக்குகளின் காரணம் அதுவே ஆகும். ஆகவே, அவன் அவள் அவர் அவை என்னும் சொற்களில் வகர

மெய் இருத்தல் போலவே, அஃறிணை ஒருமைச் சுட்டுப் பெயரிலும் 'அவ்து' என இருந்திருக்க வேண்டும் பிற் காலத்தில் 'அஃது', 'அது' என்ற திரிபுகள் ஏற்பட்டன எனக் கொள்ளலாம்.

(6) திராவிட மொழிகளில் பல, ஆ ஈ என்னும் நெடில்களையே சுட்டுக்களாய் வழங்குகின்றன. தெலுங்கில் பெரும்பான்மை ஆ ஈ என்பனவும், சிறுபான்மை அவ் இவ் என்பனவும் உள்ளன. மலையாளம் கன்னடமும் அவ்வாறு வழங்குகின்றன. தமிழில் ஆ ஈ என்பவற்றோடு அவ் இவ் என்பனவும் வழங்கியிருக்கின்றன. சங்க இலக்கியத்தில் அவ் இவ் என்பன சுட்டுப் பெயர்களாகவே வழங்கியிருக்கின்றன.[1] செய்யுளில் ஆ ஈ என நீண்டுவரும் என்கிறார் தொல்காப்பியனார்.[2]

இவற்றையெல்லாம் ஆராயின், ஆ ஈ என்பவை அவ் இவ் என்பவற்றின் வேறல்ல என்பது விளங்கும். குறிலும் மெய்யுமாய் நின்ற சொற்களில், அரையுயிர் எனப்படும் வகரம் கெட, அந்த இழப்புக்கு ஈடு செய்யும் வகையில் முன்னின்ற உயிர் நீண்டிருத்தல் வேண்டும்.[3]

அவ் > அ(வ்) > ஆ
இவ் > இ(வ்) > ஈ

---

1. இவ்வே, பீலி அணிந்து மாலை சூட்டிக்
கண்திரள் நோன்காழ் திருத்திநெய் அணிந்து
கடியுடை வியனக ரவ்வே; அவ்வே,
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ.
—ஔவையார், புறநானூறு. 95.

2. நீட வருதல் செய்யுளுள் உரித்தே.
—தொல், எழுத். உ0அ.

3. The weaking or loss of consonants is sometimes accompanied by compensatory lengthening of a preceding vowel—Bloomfield, Language, p. 379.

ஆதலின், அவ் இவ் என்பன பழைய வடிவங்கள் எனவும்,[1] ஆ ஈ என்பன அவற்றின் திரிபுகள் எனவும் கொள்ளலாம். திராவிட மொழிகளுள் பழமைச் சிறப்பு உடையதாய் பழைய சொல் வடிவங்களையும் மொழிப் பண்புகளையும் காத்து வருவதாய் விளங்கும் தமிழ்மொழி, சுட்டுக்களை விளக்குமிடத்திலும் பெருந்துணையாக உதவுகின்றது. தமிழ்மொழியில்தான், அவ் இவ் முதலாய சுட்டுக்கள் இலக்கியத்தில் வாழ்ந்துவருகின்றன.

இந்த ஆராய்ச்சி, வினா அடிச்சொல்லிற்கும் பொருந்துவதாகும். எவ் என்பதே வினாவின் அடிச்சொல்லாக இருந்து, ஏ என்றும் யா என்றும் நீண்டு வழங்கியிருக்க வேண்டும்; எவன் எவள் முதலான வினாப்பெயர்களும் இவ்வாறே அமைந்திருக்க வேண்டும்.

பெயரடையும் வினையடையும் (Adjectives and Adverbs)

பெயரடை என்றும் வினையடை என்றும் தனியினங்களாகத் திராவிட மொழிகளில் வழங்கும் சொற்கள் மிகமிகச் சிலவே. பெயரும் வினையுமாகிய சொற்களே உருவம் திரிந்தும் திரியாமலும் இவ்வாறு வழங்குகின்றன.

பெயரடைகளை (adjectives), விளக்குவன (descriptives) என்றும், வரையறுப்பன (limiting) என்றும் வகைப்படுத்துவார் புளூம்பீல்ட்.[2] சுட்டு வினா எண்ணுப்பெயர் முதலியவற்றையும் அவர் பெயரடை எனக் கொள்வார்.

---

1. Thus the loss of 'v' in the initial lengthening of the demonstrative base in poetry, the use of the forms in literature and in the rules and in the commentaries on grammar, and the survival of 'v' in mixed sandhi strongly indicate that the old demonstrative bases were *av*, *iv* and *uv*.—C. P. Venkatarama Ayyar, Dravidic Studies, No. I, p. 9.

2. Language, pp. 202—206.

நல்ல நாள்
பழைய வீடு
புதுப்பால்
} விளக்கும் பெயரடைகள்

அந்த நாள்
ஒரு வீடு
சிறிது பால்
} வரையறுக்கும் பெயரடைகள்

வரையறுக்கும் பெயரடைகளை மேலும் இருவகைப்படுத்தி, துணிவன (determiners) என்றும், அளப்பன (numeratives) என்றும் குறிக்கிறார்.

அந்த, இந்த, எந்த
ஒவ்வொரு, மற்றொரு,
வேறொரு, எதாவதொரு
} துணியும் பெயரடைகள்

(ஒரு காலத்தில் ஓர் ஊரில் ஒரு பையன் என்னும் இடத்தில் ஒரு, ஓர் என்பவை எண்ணிக்கையைக் குறிக்காத காரணத்தால் அவைகளும் இதன்பாற்படும்).

ஒரு, இரு, நூறு, சில, பல,
எல்லா(ம்), மிக்க, குறைந்த
} அளக்கும் பெயரடைகள்

பெயரடைகள் (Adjectives) வருமுறை:

(1) பெயரடைகள், பெயருக்குமுன் நிற்கும் நிலையால், அடையாகும் தன்மை பெறுகின்றன. அவ்வாறு வரும்போது அவை ஐரோப்பிய மொழிகளிற் போல் திணை பால் வேறுபாடு உணர்த்தும் திரிபு பெறுவதில்லை. எல்லாத் திணைபால்களுக்கும் பொதுவாகவே நிற்கின்றன.

நல்ல (மரம், மரங்கள், பையன், மகள், மாந்தர்)

(2) சில பெயர்ச்சொற்கள் சிறிதும் திரியாது பெயரடையாக நிற்க வல்லன.[1]

---

1. In some languages, such as Finnish, there is no formal distinction between substantives and adjectives, which thus form together the one part of speech called "nouns."—Jespersen; A Modern English Grammar, p. 5.

பொன் வளையல்

(3) வினைச்சொல் பெயரடையாக வரும்போது, அடிச்சொல் மட்டும் நிற்றலும் உண்டு.

கொல் யானை, உண் கலம்

(4) வினைப்பகுதி கால இடைநிலை ஏற்று அ (அல்லது உம்) விகுதி பெற்றுப் பெயரடையாதலே பெரும்பாலும் காணப்படுவது. அதனை இலக்கண நூலார் பெயரெஞ்சு கிளவி அல்லது பெயரெச்சம் (relative participle or adjectival participle) என்பர்.[1]

கொன்ற யானை, உண்ணும் கலம்

(5) எண்ணுப் பெயர்கள் பெயரடைகளாக வரும் போது திரிதல் உண்டு.[2]

ஒன்று>ஒரு

**வினையடைகள் (Adverbs) வருமுறை:**

(1) பெயர்ச் சொற்கள் வினைக்குமுன் நின்று வினையடையாதல் உண்டு.

நன்று கூறினாய், பெரிது புகழ்ந்தாய்
நன்கு செய்தாய், சிறிது மகிழ்ந்தாள்

(2) ஆக, ஆய், ஆகி முதலான வினைச்சொற்கள் பெயர்ச்சொற்களோடு சேர்ந்து வினையடையாம்.

செம்மையாக, பசுமையாய், நேராக்கி

இவை இருசொல் தொடர்ந்த தொடரேயாம் எனினும் ஒரு சொல்போல் வினையடையாய் நிற்கின்றன.

(3) வினைச்சொல் கால இடைநிலை ஏற்று, செய்து செய்பு முதலான வாய்பாடுகளாய் நின்று வினையடையாம்.

---

1. தொல். சொல். உங௬, உங௮.
2. இந்நூலின் 'எண்ணுப் பெயர்கள்' என்னும் பகுதியில் காண்க.

இவற்றை வினையெஞ்சுகிளவி அல்லது வினையெச்சம் (verbal participle or adverbial participle) என்பர்.[1]

வந்து சென்றான்

### உரிச்சொல்

தமிழிலக்கண நூல்களுள் கூறப்படும் நால்வகைச் சொல்லுள் உரிச்சொல் என்பதொன்று. அது பெயரடையாகவும் வினையடையாகவும் வரும்; அவ்வவ்விடங்களுக் கேற்ற திரிபு பெறும். உரிச்சொற்களுள் பெரும்பாலன பண்பு உணர்த்துவன. சில இசையும் குறிப்பும் உணர்த்துவன.[2]

சாலப் புகழ்ந்தான்—வினையடை
உறு புகழ்—பெயரடை

### இடைச்சொல்

தமிழிலக்கண நூலார் வகுத்த சொல்வகை நான்கனுள் மூன்றாவது இடைச்சொல். தனித்தியங்கும் ஆற்றலின்றிப் பெயரையும் வினையையும் சார்ந்து வருதலே இதன் இயல்பு.[3]

இடைச்சொற்கள் முதலில் பெயர்ச் சொல்லாகவோ வினைச்சொல்லாகவோ இருந்து, பொருள் வேறுபாடு உணர்த்தப் பயின்று, நாளடைவில் தம் இயல்பான பொருள் மறைந்து இலக்கண வேறுபாடு உணர்த்தும் துணைச்சொற்

---

1. இந்நூலின் 'வினைச்சொல்' என்னும் பகுதியில் காண்க.
2. உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி......
—தொல். சொல். உகக.
3. இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே. (ஷை உசக.)

களாக நின்றவை.[1] கால இடைநிலைகள், சாரியைகள், விகுதிகள், வேற்றுமை உருபுகள், உவம உருபுகள், அசைநிலை, இசை நிறை, உம், ஏ, ஓ, என, என்று, ஆக முதலியன இடைச்சொற்கள்.

என, என்று, மன்ற முதலிய இடைச்சொற்கள் வினையடைகள் ஆவன. போன்ற, மற்ற முதலான இடைச்சொற்கள் பெயரடைகள் ஆவன. ]

---

1. There is tendency in some words to lose their independence and become dependent upon some other words to which they appear to be tacked on......To this class belong prepositions and conjunctions and personal terminations. They were originally as good flexible words as nouns and pronouns, but are now merely reduced to a secondary importance, in drawing out the case and other relationships in a sense.—P. D. Gune, An Introduction to Comparative Philology, p. 71.

It is really by the transformation of full words into empty words that morphology repairs its losses. The grammatical instruments which language employs are the debris of old autonomous words emptied of the meaning proper to them and used, like symbols, as simple exponents.

In many languages we can follow the evolution of numerous elements such as prepositions, conjunctions, or articles; it conforms to this type.—Vendryes, Language, p, 165.

## கசஃ. சொல்லும் பொருளும்

[ ஒரு சொல்லின் பொருள் தொடக்கத்தில் ஒன்றாக இருந்திருக்கும்; இன்று ஒருவகையாக இருக்கும். ஒரு சொல்லுக்குத் தொடக்கத்தில் அமைந்த பொருளே இன்றுவரையில் வழங்க வேண்டும் என்னும் நிலை எந்த மொழியிலும் இல்லை.[1] 'பொன்' என்ற சொல் தொடக்கத்தில் உலோகம் என்னும் பொது வகையைக் குறிப்பதாக இருந்தது; இரும்பு, செம்பு, வெள்ளி முதலான எந்த உலோகத்தையும் பொன் என்று குறிக்கும் வழக்கம் இருந்தது. ஆனால் இன்று அந்தச் சொல் உலோகங்களுள் உயர்ந்த ஒன்றை மட்டும் குறிக்கின்றது. 'நெய்' என்ற சொல்லும் தொடக்கத்தில் இவ்வாறே பொதுவாகப் பலவற்றைக் குறிக்க வழங்கியது. இன்று அது பாலிலிருந்து எடுக்கப்படும் நெய்யை மட்டும் குறிக்க வழங்குகின்றது. ஆதலின் சொல் முதல் முதலில் உணர்த்திய பொருள் வேறாகவும் இன்று உணர்த்தும் பொருள் வேறாகவும் இருத்தல் இயல்பே.]

ஒவ்வொரு சொல்லும் தொடக்கத்தில் என்ன பொருள் உணர்த்தியது என்பதை ஆராய்ந்து அறிதல் எளிதன்று. [ சில சொற்களின் தொடக்கப் பொருள் விளங்காமலே நிற்கும். இல், முன், வழி, தலை முதலிய பல சொற்களின் தொடக்கப் பொருள்கள் அறிய முடியாதனவாக உள்ளன. நிலம், மரம், கிழக்கு முதலிய மற்றச் சொற்களின் தொடக்கப்பொருள் இன்ன என்று ஒருவாறு அறிய முடிகின்றது. இதுதான் சொற்பிறப்பு ஆராய்ச்சி (etymology) எனப்படுவது. ]

1. In fact there is no fixity in the meanings of words any more than there is in anything else. All is subject to the universal flux.–P. B. Ballard, Thought and Language, p. 173.

சொற்பிறப்புப் பற்றிய ஆராய்ச்சி எல்லா நாடுகளிலும் சென்ற நூற்றாண்டின் இறுதியிலும் இந்நூற்றாண்டின் தொடக்கத்திலும் பெருகியிருந்தது. வரவர அந்த ஆராய்ச்சியால் பெரும் பயன் இல்லை என்பதை மொழிநூலார் உணர்ந்துவிட்டனர். இன்று இத்துறை அறிஞரால் போற்றப்படுவதில்லை. [சொல் இன்று உணர்த்தும் பொருள் என்ன என்பதையும் அவ்வாறு உணர்த்தும் முறையில் ஏற்படும் மாறுதல்கள் என்ன என்பதையும் மட்டுமே அறிஞருலகம் ஆராய்ந்து வருகின்றது. இது சொற்பொருள் ஆராய்ச்சி (semantics) எனப்படுவதாகும்.

சொற்பிறப்பு ஆராய்ச்சி, பொருள்களைப் பற்றிய உண்மைகளையும் அறிவிப்பதில்லை; இன்று உணர்த்தும் பொருளையும் தெளிவாக்குவதில்லை;] அது சொல்லின் இன்றைய உண்மை நிலையை விளக்குவதில்லை; சொல் தொடக்கத்தில் இவ்வாறு இருந்திருக்கக் கூடும் என்பதையே அறிவிக்கின்றது என அறிஞர் யெஸ்பெர்ஸன் குறைகூறுகின்றார்.[1]

[சொல், பொருளின் விளக்கமும் அன்று; அதன் தன்மையைப் பற்றிய குறிப்பும் அன்று. பொருளை உணர்த்தும் அறிகுறியாக, அடையாளமாகவே சொல் வழங்குகின்றது.[2] அதனால் சொல்லைப் பற்றி அறிதலைவிட அது

1. What is the object of etymological science? "To determine the true signification of a word," answers one of the masters of etymological research...But surely in most cases that can be achieved without the help of etymology. —Jespersen, Language, p. 316.

2. A word is not the natural reflection of an idea, nor its description, nor its definition; it is only its designation, an arbitrary and conventional sign with which we learn to associate it. Hence it has no internal force conservative of

உணர்த்தும் பொருளைப் பற்றி அறிதலே சிறந்தது; பயனுள்ளது.] அவ் வறிவின் துணை இல்லாதபோது சொற்பிறப்பு ஆராய்ச்சி (etymology) தவறான வழியில் செலுத்தும் என அறிஞர் பிரீல் அறிவுறுத்துகின்றார்.[1] இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டவர் ஊக்கமும் இன்பமும் பெறுவாராயினும் மொழியின் உண்மைப் பயனை அடைதற்கு உதவாது என்றும், இதன்கண் ஆழ்ந்துவிடின் அப் பயனை அடைதற்குத் தடையாய் முடியும் என்றும் விட்னே விளக்குகின்றார்.[2]

இவ் வாராய்ச்சி ஒரு வகைத் தந்திரமான வித்தை என்றும், உண்மையான மொழியியல் ஆராய்ச்சி இதற்கு நேர் மாறானது என்றும், இது வெளித் தோற்றத்தைக் கண்டும் பொய்யாக உணர்ந்தும் தெளிவற்ற முறையில் எண்ணியும் கூறப்படுவது என்றும் அறிஞர்கள் கடிகின்றனர்.[3]

சொற்பிறப்பை ஆராய்வதால், பொருள்களும் தொழில்களும் எவ்வெவ்வாறு சொற்களால் குறிக்கப்பட்டன என்ற தொடக்க நிலையை அறியலாம். ஆயின் அவ்வாறு சொற்களைக் குறியீடுகளாக வழங்கிய முறை எவ்வளவு குறைபாடு உடையது என்பதே அதனால் விளக்கமாகும். ஒரு சொல்

its identity, but exposed to all the changes, which external circumstances, the needs of practical use, the convenience and caprice of those who employ it, may suggest.—Whitney, Language and the Study of Language, p. 70.

1. Etymology might in such a case become the most misleading of guide, were not knowledge of things added to knowledge of words.—M. Breal, Semantics, p. 150.

2. Whitney, Language and the Study of Languages, p. 132.

3. Abel Haveloque, The Science of Language, p. 13.

தொடக்கத்தில் உணர்த்திய பொருளுணர்ச்சிக்கும் உணர்த்தப்பட்ட பொருளுக்கும் இயைபு என்ன? 'நாய்' என்ற சொல்லை எடுத்துக்கொள்வோம். அது 'நா' (நாக்கு) என்பதன் அடியாகப் பிறந்தது. நாக்குப் பெற்ற காரணத்தால் நாய் எனப் பெயர் பெற்றது எனல் வேண்டும். எனின், நாக்குப் பெற்றுள்ள மற்ற விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் அப் பெயர் வழங்கவில்லையே! ஓடி அலையும் போது நாக்கைத் தொங்கவிட்டிருத்தலின், அப்பெயர் பெற்றது எனலாம். அவ்வாறாயின், 'நாய்' என்னும் சொல்லில் நாவின் இந்த நிலை குறிக்கப்படவில்லை என்ற தடை உள்ளது. ஆதலின், முற்ற உணர்த்தாமை, பொருந்த உணர்த்தாமை என்ற இருவகைக் குறைபாடுகள் இருக்கக் காண்கின்றோம்.[1] 'பாம்பு' என்ற சொல் 'பா' என்பதன் அடியாகப் பிறந்தது (பா-பரத்தல், பரவுதல்). உடல் சுருங்கியிருந்து பரவுதலை உடைய மற்றவற்றை உணர்த்தாமையும், பாம்பின் மற்றத் தன்மைகளை உணர்த்தாமையும் ஆகிய குறைபாடுகள் உள்ளன.[2] ஆதலின், 'மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா' என்றார் தொல்காப்பியனாரும்.[3]

சொல் தொடக்கத்தில் பொருளுணர்த்திய காரணத்தை இவ்வாறே ஆராய்ந்துகொண்டு செல்பவர் உணரக்

---

1. We may perhaps say that among the etymologies found in dictionaries and linguistic journals some are solid and firm as rocks, but others are liquid and fluctuate like the sea; and finally not a few are in a gaseous state and blow here and there as the wind listeth. Some of them are no better than poisonous gasses.—Jespersen, Language. p. 307.

2. M. Breal, Semantics, p. 171.

3. தொல். சொல். ௩௯௪.

கூடிய உண்மை ஒன்றே. அஃதாவது, சொல் ஓர் அறிகுறி; அது பொருளின் இயல்பை முற்றவும் உணர்த்தாது; பொருந்தவும் உணர்த்தாது; வழக்கு என்னும் ஒன்று நோக்கியே சொல் உணர்த்தும் பொருள் வரையறுக்கப் படும்; ஆகவே பொருளுணர்ச்சியை ஆராய்வோர், சொல் லின் பிறப்பை நாடவேண்டுவதில்லை; சொல் வழங்கும் வழக்கையே நாடவேண்டும் என்பதாகும். என் எனில், சொற்பிறப்பு ஆராய்ச்சி இன்றைய உண்மையை அறிவிப்ப தில்லை; நேற்றைய நிலையையே அறிவிக்க முடியும்.[1]

இதனால் சொல் தொடக்கத்தில் தன் பொருளை உணர்த்தும் ஆற்றலின்றி இருந்தது என்று கொள்ள லாகாது. பொருளை முற்றவும் பொருந்தவும் உணர்த்த வில்லை என்பதே அன்றி, பொருளைச் சிறிதளவும் உணர்த்த வில்லை என்பது கருத்தன்று. முதல்முதலில் நாயைக் கண்ட ஒருவனது மனத்தை அதன் நாக்கு மட்டுமே கவர்ந்திருக்கும். அந்த நாக்கைத் தொங்கவிட்டு அலையும் நிலையே அதன் சிறப்பியல்பாக அவன் உணர்ந்து அதற்கு 'நாய்' என்று குறியிட்டிருப்பான். பாம்பைக் கண்டு குறியிட்டவன் மனத்திலும் அதன் சிறப்பியல்பாகப் பாத் தல் தன்மை பதிந்திருக்கும். ஆதலின், அந்தந்தச் சிறப் பியல்பு மட்டுமே நினைவில் கொண்டு பெயர் கொடுத் திருக்கக் கூடும். இவ்வாறு அந்தக் காரணங்களை ஒரு வாறு அறிதலே சொற்பிறப்பு ஆராய்ச்சியின் பயன்.[2] அவற்றை அறிவதால், சொல்லை ஆளுந்திறனோ, மொழி யின் உண்மை இயல்போ தெளிவாவதில்லை. அது

1. At best, it tells us not what is true, but what has been true.—Jespersen, Language. p. 316.

2. M. Breal, Semantics, p. 172.

பற்றியே, இந்த ஆராய்ச்சி சிறப்புடையதன்று என்று அறிஞர் எடுத்துரைப்பாராயினர்.]

அதற்கு மாறாக, சொல்லின் பிறப்பிற்கும் இன்றுள்ள பொருளுணர்ச்சிக்கும் தொடர்பு குறையக் குறைய, அச்சொல் மிக்க பயனுள்ளதாக மாறுகின்றது என்பர் அறிஞர் பிரீல். சொல் வடிவு திரிதலால், அதன் தொடக்கப் பொருள் மறக்கப்படுகின்றது என்றும், அதனால் மொழி வளர்ச்சிக்கு உள்ள தடை நீங்கி நன்மையே விளைகின்றது என்றும் அவர் கூறுகின்றார்.[1]

[ஆதலின், சொற்பிறப்பு ஆராய்ச்சி (etymology) மொழியியலுக்குத் துணைபுரியாது என்றும், சொற்பொருள் ஆராய்ச்சியே (semantics) துணையாவது என்றும் அறியலாம்.] சொற்பொருளை ஆராயும்போது, சொல் உணர்த்தும் பொருள் எவ்வெவ்வாறு வேறுபட்டுச் செல்கின்றது என்று காணல் வேண்டும்.

சொற்களின் வடிவம் திரிவதற்கு மனம் காரணம் அன்று, ஒலிக்கும் உறுப்புக்களே காரணம்; சொற்களின் பொருள் திரிவதற்கு உறுப்புக்கள் காரணம் அல்ல, மனமே காரணமாகும்.

சொற்கள் குறிக்கும் பொருளுணர்ச்சி என்றும் ஒரே நிலையாக இராமல், காலப்போக்கில் மாறுவதற்குக் காரணங்கள் என்ன? 'பொன்'னும் 'நெய்'யும் 'நாற்ற'மும் பிற சொற்களும் அன்று ஒரு பொருளும், இன்று ஒரு பொருளும் உணர்த்தக் காரணம் என்ன? பின்வரும் காரணங்களை டக்கர் என்னும் அறிஞர் தொகுத்துக் கூறுகின்றார்.[2]:—

1. M. Breal, Semantics, p. 172.

2. Tucker, Introduction to the Natural History of Languages, p. 380.

(1) ஒரு சொல் உணர்த்தும் பொருள் விரிவானதாகவும் பலவற்றைத் தன்னுட் கொண்டதாகவும் இருத்தல்; அதனால் அது மெல்ல நெகிழ்ந்து பொருள் வேறுபட இடந்தரல்.

(2) ஒரு சொல்லால் உணர்த்தப்படும் பொருளின் பல பண்புகளில், அல்லது, பல பகுதிகளில் ஒன்று சிறந்து விளங்குவதாக இருத்தல்; அதனால், அச்சொல் மெல்ல மெல்ல அந்தச் சிறப்புப் பண்பையோ பகுதியையோ உணர்த்தத் தொடங்கல்.

(3) ஒரு சொல் உணர்த்தும் பொருளுக்கு அடுத்த நிலையில் மற்றொரு பொருளும் மறைந்திருத்தல்; அதனால் இரண்டாம் பொருளைச் சுட்டும் வகையிலோ அல்லது இரண்டு பொருளையும் தழுவும் வகையிலோ சொல் இடந்தரல்.

(4) ஒரு பொருளை வற்புறுத்திக் கூறும் பொருட்டாவது தெளிவுறுத்திக் கூறும் பொருட்டாவது உருவகப் படுத்தி அதற்கேற்ற சொல்லை ஆளுதல்; அதனால் உருவகச் சொல்லின் பொருள் திரிதல்.

(5) உணர்ச்சி மிகுதியாகக் கூறும்போது ஒருசொல்லின் பொருளை வற்புறுத்தல்; அதனால் உண்மைப்பொருள் மறைந்து அதனினும் விரிவான அல்லது குறுகிய மற்றொரு பொருள் உணர்த்தப்படல்.

(6) எள்ளல் முதலிய குறிப்புக்கள் காரணமாகவோ, இடக்கரடக்கல் மங்கலம் முதலிய வழக்குக் காரணமாகவோ ஒரு சொல்லின் இடத்தில் வேறு சொல் புகுதல்; அதனால் அச்சொல் தன் பொருள் இழந்து மாறுதல்.

(7) அறியாமை காரணமாகவோ தெளியாமை காரணமாகவோ ஒரு சொல்லைத் தவறான பொருளில் வழங்குதல்; அதனால் அச்சொல் தன் உண்மைப் பொருளை உணர்த்தத் தவறல்.

இவற்றோடு சேர்த்துத் தொகுக்கத் தக்க காரணம் வேறு ஒன்று உள்ளது. அஃதாவது :—

(8) மக்களின் வாழ்க்கையில் புதியன புகுதலால் மாறுதல் ஏற்பட ஏற்பட, புதிய கருத்துக்கள் புகப் புக, புதிய கருவிகள் பரவப் பரவ, அவற்றினைக் குறிக்கப் புதிய சொற்கள் அம் மொழியிலேயே ஏற்படுதல்; அதனால், பழைய சொல்லுலகத்தில் மாறுதல் ஏற்படல்.[1]

இவ்வாறு புதியனவாக அமைந்த சொற்கள் பிற மொழிச் சொற்களாயின், பழஞ் சொற்கள் மாறுதலடையாமல் நிற்கும். சைக்கிள் மோட்டார் முதலான பிற மொழிச் சொற்களால் தமிழ்ச் சொற்கள் மாறாமை காண்க. ஆயின், புதிய பொருள்களுக்குத் தமிழிலேயே பெயரிடும் போது, மாறுதல் ஏற்படுகின்றது. 'மிளகு' என்பது பழைய பொருளைக் குறிக்க, 'மிளகாய்' என்பது வேறொரு புதிய பொருளைக் குறிக்கலாயிற்று.[2] 'புகையிலை' 'புகை வண்டி' 'மண்ணெண்ணெய்' முதலான சொற்களும் இவ்வாறு புதியனவாய் அமைந்தனவே ஆகும்.]

சொல் பொருளுணர்த்தும் முறையை (semantics) ஆராய்வதில் விளங்கும் உண்மைகள் பல. அவை உலகிலுள்ள எல்லா மொழிகளுக்கும் பொதுவாக விளங்கு

1. Whitney, Language and the Study of Language, p. 121.

2. The shift into a new meaning is intelligible when it merely reproduces a shift in the practical world. —Bloomfield, Language, p. 435.

கின்றன. [பொருளுணரும் மக்களின் மனம் பொதுத் தன்மை பெற்றிருத்தலே இவ் வுண்மைகள் பொதுவாக இருத்தற்குக் காரணமாகும்.[1]

[ 1. ஒரு சொல்லுக்கு ஒரு பொருள்:—பேச்சுமொழியில் ஒரு சொல் ஒரு பொருளே உணர்த்தும்; பல பொருள் ஒரு சொல்லுக்குப் (homonym) பேச்சு மொழி இடம் தர மறுத்துவிடுகிறது; எழுத்து மொழியின் செல்வாக்கால் ஒரு சில சொற்கள் மட்டும் எவ்வாறோ தப்பி வாழ்கின்றன. ஆதலின் பொதுவாக ஒரு சொல் இருபொருளுணர்த்தி வரின் அவற்றுள் ஒன்று நிற்க, மற்றொன்று அழியும்; இன்றேல் அச்சொல் திரிபுற்று, அல்லது, அடையடுத்து இரண்டாம் பொருளை உணர்த்தும் (polysemia).[2]

'கவலை' என்ற சொல் இரண்டாகப் பிரியும் வழி யிடத்தையும் மனக்கவலையையும் உணர்த்திவந்தது. இன்று, மனக்கவலையை மட்டும் உணர்த்துகின்றது. மற்றொரு பொருள் அழிந்தது.

'போர்' என்ற சொல் வைக்கோல்போரையும் படை வகுத்து நிகழ்த்தும் போரையும் உணர்த்துவது. பண்டைக்

---

1. To pass now from the outer form of words to their inner meaning, there is again so much that even it is common to all mankind in mental basis, in psychological structure, that we cannot be surprised to find a number of correspondences between languages widely apart... There are universal laws of thought which are reflected in the laws of change of meaning (Semantic laws) even if the Science of Meaning has not yet made much advance towards discovering them.—Jespersen, Mankind, Nation and Individual, p. 212.

2. In the Commonwealth of words there is neither polygamy nor polyandry. One word one meaning, one meaning one word, is the rigid and inviolable law. It follows that there are no synonyms—no real synonyms only rough approximations.—P. B. Ballard, Thought and Language, p. 173.

காலத்தில் முன்னதை உணர்த்தப் 'போர்வு' என்று சிறிது வேறுபட்ட சொல் வழங்கியது. இக்காலத்தில், 'வைக்கோல்' என்ற அடையடுத்து அப்பொருள் உணர்த்தப்படுகின்றது.

2. ஒரு பொருளுக்கு ஒரு சொல் :—ஒரு பொருளை உணர்த்த ஒரு சொல்லே வழங்கும். இருசொல் வழங்கின், ஒன்று நிற்க, மற்றொன்று அழியும்; அல்லது வேறு பொருளுணர்த்தத் தொடங்கும்.[1] உண்மையாக நோக்கின் ஒருபொருட் கிளவிகள் என்பன பேச்சுமொழியில் இல்லை.[2]

'வீடு,' 'இல்,' 'மனை' என்பன ஒரு பொருளே உணர்த்தும் சொற்களாகும். இன்று பேச்சு வழக்கில் 'வீடு' என்ற சொல்லே அப்பொருள் உணர்த்துவதாக நின்றுள்ளது. 'இல்' என்பது இலக்கிய வழக்கோடு நின்றுவிட்டது; பேச்சுவழக்கில் அது அழிந்தது எனலாம். 'மனை' என்பதோ பேச்சுவழக்கிலும் வாழ்கின்றது; ஆனால் 'வீடு கட்டுதற்குரிய நிலப்பகுதி' என்று சிறிது வேறுபட்ட பொருளைக் குறிக்கின்றது.

---

1. Feeling strongly that language is intended to serve for the exchange of ideas, for the expression of feelings, for the discussion of interests, it refuses to believe in a synonymy that would be both useless and dangerous. Now as the people is at once the depository and author of language, the fact that it denies the existence of synonyms actually brings about their speedy disappearance. Either they are differentiated, or else one of the two terms ceases to exist —M. Breal, Semantics, p. 28.

2. Differentiation is defined as the intentional ordered process, by which words apparently synonymous, have nevertheless taken different meanings, and can no longer be used indiscriminately —P. D. Gune, An Introduction to Comparative Philology, p. 65.

'குணக்கு,' 'கிழக்கு' என்னும் இருசொல்லும் ஒரே பொருளை உணர்த்துவன. அவற்றுள் 'குணக்கு' இன்று பேச்சுவழக்கில் இடமிழந்துள்ளது. அவ்வாறே 'குடக்கு' 'மேற்கு' என்பவற்றில் 'குடக்கு' மறைந்தது. ஆயின், ஒவ்வொரு சொல்லாகவே வழங்கிய 'வடக்கு' 'தெற்கு' என்பன இன்றும் வாழ்கின்றன.

நடை, நடத்தல், நடக்கை, நடப்பு என்பன முதலில் ஒரு பொருளனவாக வழங்கியிருக்கக் கூடும். இன்று இவை ஒவ்வொன்றும் வெவ்வேறு பொருளில் வழங்குகின்றன.[1] அதனால் எல்லாம் வாழ்கின்றன.

3. உயர்பொருட் பேறு (Elevation):—முன்பு இழிந்த பொருளைக் குறித்து வந்த சொல் இப்போது உயர்ந்த பொருளில் வழங்குதல்.[2]

'களிப்பு,' 'மகிழ்ச்சி' என்பன முன்பு கள்ளுண்டு மயங்குதலைக் குறித்தன. ஆயின் இப்போது மனம் உவந்திருத்தல் என்னும் உயர்ந்த பொருளைத் தருகின்றன.

கழகம் என்பதும் அவ்வாறே ஆயிற்று. சூதாடும் இடத்தை உணர்த்திய அச்சொல், இன்று கலைஞர் அறிஞர் முதலானவரின் கூட்டங்களை உணர்த்துகின்றது.

4. இழிபொருட் பேறு (Degradation or degeneration) :—முன்பு உயர்ந்த பொருளில் வழங்கிவந்த சொல் இப்போது இழிந்த பொருளைக் குறித்தல்.[3]

---

1. ஆங்கிலத்தில் my, mine என்ற இரு சொற்களும் ஒரே பொருளில் ஒத்த நிலையில் வழங்கியிருந்தன. வருமொழியில் மெய்வரின் ஒன்றும் உயிர்வரின் மற்றொன்றுமாக, தமிழில் ஒரு ஓர் இரண்டும் வழங்கல்போல், வழங்கிவந்தன. அவைபோலவே thy, thine என்ற இரு சொற்களும் வழங்கிவந்தன. பிறகுதான் இரண்டிற்கும் வெவ்வேறு பொருள்கள் ஏற்பட்டன.—Jespersen, Progress in Language, p. 69.

2, 3. வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், தமிழ்மொழி வரலாறு, ப. 74.

'நாற்றம்' என்ற சொல் முன்பு பொதுவாக மணம் என்னும் பொருளில் வழங்கியிருக்க, இன்று கெட்டதையே குறித்திடுதல் காண்க. சேரி குப்பை முதலியனவும் அவ்வாறே பொருள் திரிந்தன.

5. சிறப்புப் பொருட் பேறு (Restriction or Narrowing) :—முன்பு பலவற்றிற்கும் பொதுவாக இருந்த ஒரு சொல் இப்போது அவற்றுள் ஒன்றையே உணர்த்தல்.

'பொன்' என்பது முன்பு, தங்கம், செம்பு, வெள்ளி, இரும்பு முதலான உலோகங்கள் பலவற்றிற்கும் பொதுவான பெயர்; இப்போது அது ஒருவகை உலோகத்தையே உணர்த்துகின்றது.

'நெய்' என்பதும் அவ்வாறே முன்பு பாலின் நெய், எள்ளின் நெய் முதலிய பலவற்றிற்கும் பொதுவாக இருந்தது; இப்போது அது பாலின் நெய் ஒன்றையே குறிக்கின்றது.

'பழையது' என்னும் சொல் பழைமையுற்ற பலவற்றையும் குறிப்பது. இன்று தனியே நின்று பழஞ்சோற்றைக் குறித்தல் காண்க.

6. பொதுப் பொருட் பேறு (Expansion or Widening): முன்பு ஒருவகைப் பொருளுக்கே உரியதாக வழங்கிய பெயர், பிறகு அதனோடு ஒத்த பலவற்றிற்கும் பொதுப் பெயராக வழங்குதல்.

'மரக்கால்' என்பது முன்பு மரத்தால் இயன்ற முகத்தலளவைக் கருவியையே உணர்த்தி வந்தது; இப்போது இரும்பு பித்தளை முதலியவற்றாலாகிய கருவிகளையும் குறிக்கின்றது.

'குட்டி' என்பது மூங்கா, வெருகு, எலி, அணில், நாய், பன்றி, புலி, முயல், நரி, குரங்கு ஆகிய சிலவற்றின்

இளமைப் பெயராக வழங்கிவந்தது.[1] இன்று விலங்குகள் பலவற்றிற்கும் பொதுவான இளமைப் பெயராக அது வழங்கிவருகின்றது.

'மரம்' என்ற சொல் முன்பு அகக்காழ் உடையவற்றிற்கே பெயராக வழங்கியது.[2] இன்று தென்னை பனை முதலிய புறக்காழ் உடையவற்றையும் குறித்துப் பொதுப் பெயராக வழங்குகின்றது.

7. நுண் பொருட் பேறு (Abstraction):—சொல் முதலில் பருப்பொருளை உணர்த்திவந்து பிறகு அது போன்ற நுண் பொருளை உணர்த்துதலாகும்.

'சூழ்ச்சி' என்பது முதலில் சூழ்ந்து நிற்றலையும் சுழலுதலையும் உணர்த்தி, இப்போது, ஒரு கருத்திற்குச் சார்பான பல எண்ணங்கள் எழுதலை உணர்த்துகின்றது; 'பலவாறு நுட்பமாக எண்ணுதல்' என்ற பொருளைத் தருகின்றது.

'படு' 'உண்' என்னும் வினைகள் செயப்பாட்டு வினைப் பொருளில் அமையுமிடத்துக் (காணப்பட்டான், அடியுண்டான் என) அவ்வாறு நுண்பொருள் தருதல் காண்க. வேற்றுமையுருபுகளும் மற்ற இடைச் சொற்கள் பலவும் இவ்வாறு அமைந்தனவே.

'செம்மை' என்னும் சொல் நிறத்தையும் வடிவத்தையும் உணர்த்தி, நடுவுநிலைமை என்னும் மனப் பண்பை உணர்த்தலும் காண்க.

'என் கருத்தைத் தழுவிப் பேசினான்' என்பதில் 'தழுவல்' என்பது, மெய்யுற அணைத்தலை உணர்த்தாது, நுண்பொருளை உணர்த்தலும் காண்க.

---

1. தொல். பொருள். ௫௪௧, ௫௫௩, ௫௫௬.
2. தொல். பொருள். ௬௩௧.

8. பருப் பொருட் பேறு (Concretion):—முதலில் நுண்மையான பொருளை உணர்த்திவந்த சொல் பிறகு அது போன்ற பருப்பொருளை உணர்த்தல்.

'விருந்து' என்பது புதுமை என்னும் பண்பை உணர்த்திவந்து, வீட்டிற்குப் புதியராக வந்தவரை உணர்த்தல் காண்க.

9. மென்பொருட் பேறு (Hyperbole):—முன் வன்மையான பொருள் உடையதாக வழங்கிய சொல்லை இப்போது அவ்வளவு வன்மையற்ற ஒன்றனுக்கு உரியதாக மென்மைப்படுத்தி வழங்குதல்.

'அமர்க்களம்' என்ற சொல் பழங்காலத்தில் நால் வகைப் படையுடன் பொருது யானையும் குதிரையும் மனிதரும் அழியும் இடத்தைக் குறித்தது; இப்போது வீட்டின் ஒரு பகுதியில் சிறுவர்கள் ஆரவாரம் செய்து விளையாடிக் குழப்பம் உண்டாக்குவதையும், அதுபோன்றவற்றையும் உணர்த்துகிறது.

10. வன்பொருட் பேறு (Litotes):—முன் மென்மையான பொருளுடன் வழங்கிய சொல்லை இப்போது வன்மையான பொருள் உணர்த்த வழங்குதல்.

'அவர் அங்கே ஒழிந்தார்' என்றால், பழங்காலத்தில் மற்றவர்களோடு வெளியே புறப்படாமல் அவ்விடத்திலேயே நின்றுவிட்டார் என்பது பொருளாகும்.[1] இக்காலத்தில் அழிந்துவிட்டார் என்ற பொருள் தருகிறது.

11. மங்கல வழக்கு (Meliorative tendency):—மங்கலம் அல்லாதவற்றைக் கூற நேர்ந்தபோது, மங்கலமான வேறு

சொற்களால் மறைத்துக் கூறல்; அதனுல், அச் சொற்களின் பொருள் வேறுபடுதல்.[1]

'துஞ்சினர்' 'மறைந்தார்' என்ற சொற்கள் இவ்வாறே 'செத்தார்' என்ற பொருளுணர்த்துவன ஆயின.

**12.** இடக்கரடக்கல் (Pejorative tendency):— நாகரிகமல்லாத சொற்களை மறைத்து அவற்றின் பொருளை நாகரிகமான பிற சொற்களால் புலப்படுத்தல்; அதனுல் அச் சொற்களின் பொருள் வேறுபடுதல்.[2]

'வாய்பூசல்' 'கால் கழுவல்' முதலாயின பல இவ்வாறு வழங்குவன.[3]

**13.** குழூஉக்குறி:—நாகரிகம் அற்ற கூட்டத்தார், வியாபாரிகள் முதலானோர் தங்களுக்குள் ஒரு சொல்லை மறைத்து அதன் பொருளை வேறொரு சொல்லால் உணர்த்

---

1. பொம்மல் ஓதி நம்இவண் ஒழியச்
செல்ப என்ப தாமே. —நற்றிணை, கஉக.

2. தென் அமெரிக்காவில் வாழ்ந்த பழங்குடிமக்கள், யாரேனும் ஒருவர் இறந்தபோது, அவருடைய பெயர் மற்றவர்களுக்கு இருந்தால், மரணபயம் கொண்டு அந்தப் பெயர்களை எல்லாம் மாற்றிவிட்டார்கள். இறந்தவரின் பெயரின் பகுதிகளையும் கூருமல் விட்டுவிட்டார்கள். மரணம் முதலியவற்றை அஞ்சி மறைக்கும் வழக்கம் உலகெங்கும் உள்ளதே ஆகும்.—A.H. Sayce, Introduction to the Science of Language, p. 206.

3. 'அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.'
—தொல். சொல். சசஉ.

The so-called pejorative tendency is the result of a very human disposition which prompts us to veil, to attenuate, to disguise ideas which are disagreeable, wounding or repulsive. There is nothing in it all save a feeling of consideration, a precaution against unnecessary shocks, a precaution which, whether sincere or feigned, is not long efficient, since the hearer seeks out the thing behind the world, and at once identifies them.—M. Breal, Semantics, pp. 100, 101.

துதல். பிறர் அறியின் தீங்கு அல்லது தடை நேரும் என்ற அச்சமும் தந்திரமுமே இதற்குக் காரணமாகும்.[1]

குடிகாரர் 'கள்' முதலியவற்றைத் 'தண்ணீர்' என்ற சொல்லால் குறித்தல் இதன்பாற்படும்.

**14.** ஆகுபெயர் (Metonymy, Synecdoche) :—ஒரு பொருளின் பெயர் அதனோடு தொடர்புடைய மற்றொரு பொருளைக் குறிக்க வழங்குதல்.[2]

'வெற்றிலை' என்பது சினைக்குப் பெயர்; 'வெற்றிலை நட்டான்' என்பதில் முதலுக்குப் பெயராகின்றது.

'உலகம்' என்பது இடத்தின் பெயர்; 'உலகம் பொல்லாதது' என்பதில் உலக மக்களை உணர்த்துகின்றது.[3]

---

1. In both expressions one may assuredly see an outcome of the fear of the naked world, an after-echo of the view held by savage tribes that a name is something with a real existence outside humanity, something possessing power so that the way to escape evil consequences is not to use the plain word for anything bad or dangerous. —Jespersen, Mankind Nation and Individual, p. 169.

2. முதலிற் கூறும் சினைஅறி கிளவியும்
சினையிற் கூறும் முதல்அறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெய ரொட்டும்
வினைமுதல் உரைக்கும் கிளவியொடு தொகைஇ
அனைமர பினவே ஆகுபெயர்க் கிளவி.
—தொல். சொல். ககச.

3. Association, both by similarity and by contact, is responsible for a good deal of change or shifting in meaning. —P. D. Gune, An Introduction to Comparative Philology, p. 69.

இவ்வாறே காலம், பண்பு, தொழில் முதலிய பலவற்றின் பெயர்கள் அவற்றோடு தொடர்பு உடையவற்றை உணர்த்துதல் உண்டு.

**15.** உருவகம் (Metaphor) :—ஒரு பொருளை அதற்கு உரிய சொல்லால் உணர்த்தாமல், தெளிவுறுத்த விரும்பி உருவகப்படுத்தி அந்த உருவகச் சொல்லால் உணர்த்தல்.

'பழுத்த கிழவர்' என்பதில் பழுத்தல் என்பது அவ்வாறு பொருளுணர்த்தல் காண்க. பழுத்தல் பழத்தின் தன்மை ஆதலின், இங்குக் கிழவர் பழம்போல் ஆனார் என்ற பொருள் பயக்கின்றது.

பந்தலின் கால், மலையின் அடி, புட்டியின் கழுத்து, நாற்காலியின் கை, மரத்தின் தலை, கட்டுரையின் தலைப்பு என்பவற்றிலும் சொற்கள் உருவகப் பொருள் உணர்த்துதல் காண்க.

இத்தகைய மாறுதல்கள் ஏற்படுவதற்குச் சிறந்த பேச்சாளரும், நகைச்சுவை யறிஞரும் கவிஞரும் பெரிதும் காரணமாக விளங்குகின்றனர்.[1]

---

1. The apt response of a good speaker may always border on semantic innovation. Both the wit and the poet often cross this border, and their innovations may become popular.—Bloomfield, Language, p. 443.

## கஎ. சொற்றொடர்

மொழிக்குக் காரணமான ஒலிகள் மட்டும் இருப்பின் பொருளை உணர்த்தல் இயலாது; சொற்கள் மட்டும் இருப்பினும் பொருளை உணர்த்தல் இயலாது.

அவன் மரம் கருப்பு அந்த பார்த்தான் இல் மகன் பூனை

என்று சொற்களை அமைப்பதால் பொருள் உணர்த்தப்படவில்லை.

அவன் மகன் அந்த மரத்தில் கருப்புப்பூனை பார்த்தான்

என்று ஒரு முறைப்பட அமைத்தால்தான் பொருள் உணர்த்தப்படுகின்றது. இவ்வாறு பொருள் உணர்த்த வேண்டுமாயின் பேசுவோன் மனநிலையை மட்டும் ஒட்டிச் சொற்கள் அமைதல் போதாது; கேட்போன் மனநிலைக்கு இயையவும் அமைதல் வேண்டும். கேட்போனுக்குப் பொருள் விளங்குமாறு சொற்கள் தொடர்ந்து அமைதலே மிக இன்றியமையாததாகும்.[1]

முதல் முதலில் மொழியைப் பேசியவர்கள், இது முன் அது பின் என்று சில முறை அமைத்துப் பேசிவிட்டனர். அவர்களைப் பார்த்துப் பேசக் கற்றுக்கொண்ட மற்றவர்கள் அந்த முறையை அப்படியே கற்றுக்கொண்டனர். இவ்வாறே தலைமுறை தலைமுறையாகச் சில முறைகள் வாய்பாடுகள் போல் மக்கள் மனத்தில் பதிந்துவிட்டன. புதிய வாக்கியங்களைப் பேசத் தொடங்கும்போது, அவற்றில் உள்ள

---

1. A sentence is a word or set of words revealing an intelligible purpose. This is the formal definition I am inclined to recommend. It may be extended as follows:—A sentence is a word or set of words followed by a pause and revealing an intelligible purpose.—A. H. Gardiner, The Theory of Speech and Language, p. 97.

சொற்கள் அப்படி அப்படியே அமைகின்றன. அதற்குக் காரணம் மனத்தில் அந்த முறைகளின்படி எண்ணங்கள் அமைந்துவிடுவதே ஆகும். மக்களின் மனம் இவ்வாறு வாய்பாடுகளை அமைத்துக்கொண்டு, அவற்றைப் போற்றிப் பின்பற்றுவது இயற்கையாகும். புதிதாக ஒரு வாய்பாட்டை அமைத்துக்கொள்வதைவிடப் பழைய வாய்பாட்டைப் பின்பற்றுவதால் இருவகை நன்மை உண்டு. ஒன்று, புதிதாகப் படைத்தலைவிடப் பழையதைப் பின்பற்றுதல் எளிது ஆதலின் முயற்சி குறைகின்றது. மற்றொன்று, கேட்பவர்க்குப் புதியதை விளங்கவைத்தல் அரிய முயற்சியாகும்; பழகிய பழைய வாய்பாடு அவர்க்கு எளிதில் விளங்குமாகையால், இடர்ப்பாடு இல்லாமல் கருத்தைத் தெரிவிக்கமுடிகிறது. இவ்வாறு தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றிப் போற்றிய வாக்கிய வாய்பாடுகள் மொழிக்கு மொழி வேறுபடும். அதனால்தான் ஆங்கில மொழியில் செயப்படுபொருள் வினைச்சொல்லுக்குப் பின் நிற்க, தமிழில் அது முன்நிற்கின்றது. இவ்வாறு எத்தனையோ வேறுபாடுகள் உள்ளன.

எழுவாய்+பயனிலை
ஆண்பால் எழுவாய்+ஆண்பால் பயனிலை
பெண்பால் எழுவாய்+பெண்பால் பயனிலை
பலர்பால் எழுவாய்+பலர்பால் பயனிலை
ஒன்றன்பால் எழுவாய்+ஒன்றன்பால் பயனிலை
பலவின்பால் எழுவாய்+பலவின்பால் பயனிலை
தன்மை ஒருமை எழுவாய்+தன்மை ஒருமைப் பயனிலை
தன்மைப் பன்மை எழுவாய்+தன்மைப் பன்மைப் பயனிலை
முன்னிலை ஒருமை எழுவாய்+முன்னிலை ஒருமைப் பயனிலை
முன்னிலைப் பன்மை எழுவாய்+முன்னிலைப் பன்மைப் பயனிலை
எழுவாய்+செயப்படுபொருள்+பயனிலை
பெயரெச்சம்+பெயர் வினையெச்சம்+வினை

என்பன அவ்வாறு தமிழரின் மனத்தில் பதிந்துவிட்ட வாய்பாடுகள்.[1] இவற்றிற்கு மாறாக வரும் வாக்கியங்கள் வழூ என்று தள்ளப்படும். அல்லது, வழக்கில் இடம் பெற்றுவிட்டால், வழூவமைதியாகக் கொள்ளப்படும்.

ஐரிஷ் மொழி பேசுவோரின் வாக்கிய அமைப்பில் வினைச்சொல் வாக்கியத்தின் முதலில் நிற்கின்றது.[2] துருக்கி முதலிய மொழிகளிலும் தமிழ் முதலிய திராவிட மொழிகளிலும் வினை இறுதியில் நிற்கின்றது. இவ் வேறுபாட்டிற்குக் காரணம் வழிவழியாகப் பேசுவோரின் மனத்தில் பதிந்துவிட்ட வாய்பாடே எனலாம்.

சீனமொழியில் வாக்கியத்தில் எல்லாச் சொற்களும் தனித்தனியாக நின்று பொருள் உணர்த்தும். பெரும்பாலும் ஓரசைச் சொற்களாகவே நிற்கும். இலக்கண வேறுபாடு உணர்த்துகின்ற (சீனமொழியில் குறைச் சொற்கள் empty words எனப்படுகின்ற) இடைச்சொற்களும் தனித்தனியாகவே நிற்கும். ஆயின், அவை நிற்கும் முறையை ஒரு சிறிதும் மாற்றல் இயலாது. எடுத்துக்காட்டாக, நான் அவனை வீட்டில் பார்த்தேன் என்னும் தமிழ் வாக்கியம் சீனமொழியில் நான் அ அன் ஐ வீடு இல் பார்த் ஏன்

---

1. It is one of the fundamental laws of psychology that every word, as well as every ending, and every combination of words, is connected in our minds with other words. All the store of our linguistic acquirements is thus divided into groups. Hence every word we learn associates itself with some group according to certain psychological laws of similarity, contact, etc. The growth and decline of all syntax is influenced more or less by means of these groups.

—L. Kellner, Historical Outlines of English Syntax, p. 14.

2. Vendryes, Language, p. 309.

எனப் பல சிறு சொற்கள் உடையதாக ஒரே நிலையான வாய்பாட்டில் நிற்கும்.

ஆனால் தமிழில் சொற்களுடன் இலக்கண வேறுபாடு உணர்த்தும் விகுதி உருபு முதலியன சேர்ந்து நிற்கின்றன அதனால் சீனமொழிபோல் மாற்றமுடியாத நிலை இல்லாமல், ஓரளவு மாறுதலுக்கும் இடம் தருகிறது.

பார்த்தேன் வீட்டில் அவனை நான்

என்று மாற்றிக் கூறியபோதிலும் பொருள் உணர முடிகின்றது. ஆகையால் சீனமொழிபோல் வாக்கிய இலக்கணம் இங்குத் திட்பமானதாக இல்லை.

அமெரிக்கப் பழங்குடிகளின் மொழியில் மற்றொரு வகையான முறை நமக்கு விந்தையாக உள்ளபோதிலும் அம்மொழி பேசுவோர்க்கு இயல்பானதாக உள்ளது. அதில் இலக்கண வேறுபாடு உணர்த்தும் விகுதி உருபு முதலிய இடைச்சொற்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து முற் பகுதியில் நிற்க, மற்றப் பெயர்ச்சொற்களும் வினைச்சொற் களும் பிற்பகுதியில் ஒருங்கே நிற்குமாம்.

ஐ இ ல் த் ஏன் நான் அவன் வீடு பார்

என்பதுபோல் அவர்களின் வாக்கியம் அமையும்.

இவ்வாறு வாக்கிய அமைப்பு வேறு வேறு வகையாக அமைவதற்குக் காரணம், பேசுவோர் கேட்போர் ஆகிய மக்களின் மனத்தில் தலைமுறை தலைமுறையாகப் பதிந்து விட்ட வாய்பாடுகளே ஆகும்.

இவற்றை எல்லாம் பொதுவாக ஆராயும்போது ஒன்று தெளிவாகின்றது. அஃதாவது, சொல்லிலக்கணம் திட்பமாக அமைந்த மொழியில், வாக்கிய அமைப்பு நெகிழ்ச்சியுற்றதாக உள்ளது. வாக்கிய அமைப்புத் திட்ப

மானதாக உள்ள மொழியில், சொல்லிலக்கணம் நெகிழ்ந்து போகின்றது ;[1] அத்தகைய மொழியில் ஒரு வாக்கியத்தில் ஒரு சொல்லை இடம் மாற்றி அமைத்தாலும் பொருள் சிதைகின்றது. ஆயின் சொல்லிலக்கணம் திட்பம் பெற்ற மொழியில் சொற்களை இடம் மாற்றி அமைப்பினும் வாக்கியத்தின் பொருள் சிதைவதில்லை. ஆங்கிலம் மூன்று நூற்றாண்டுகளுக்குமுன் மற்ற ஐரோப்பிய மொழிகள் போல் திட்பமான சொல்லிலக்கணம் வாய்ந்திருந்தது. இன்றைய ஆங்கிலம், சீனமொழிபோல் வாக்கிய அமைப்பில் திட்பம் பெற்று மாறி வருகின்றது. அதனுள்,

John killed Jack

என்ற வாக்கியத்தில் சொல்லின் இடம் மாற்றின் பொருள் மாறிப்போகின்றது. தமிழில் அவ்வாறு எளிதில் மாறும் நிலைமை இல்லை.

எவ்வாறோ சொற்கள் பல தொடர்ந்து அமையும் முறையே சொற்றொடரமைப்பு என்பதாகும். எளிய நிலையில் ஒரு சொல் அல்லது சில சொற்கள் தொடர்ந்து அமையும் வாக்கியமாகத் தோன்றி, நாகரிகம் வளர வளரப் பல சொற்கள் தொடர்ந்து அமையும் அமைப்பு ஏற்படுகின்றது.

ஒரு சொல்லே வாக்கியமாக அமைதலும் உண்டு. 'நட' என்பது ஒரு வாக்கியம். இலக்கணப்படி 'நீ நடவாய்' என்று அமையவேண்டும். ஆகலின், 'நட' என்னும் ஏவலொருமை வினைமுற்றில் 'ஆய்' விகுதி கெட்டது

1. In proportion as these inflections disintegrated, the necessity of a fixed order made itself additionally felt; and, on the other hand, the habit of this fixed order completed the downfall of the inflections.—M. Breal, Semantics, p. 213.

என்று இலக்கணம் கூறும். மற்ற வினைமுற்றுக்களில் பாலறிகிளவி சேர்ந்தே இருத்தலால், ஏவல் ஒருமை வினை முற்றிலும் பாலறிகிளவி இருக்கவேண்டும் என்னும் பொது விதி பற்றியே இலக்கணம் இவ்வாறு கூறுகின்றது. மக்களின் மொழி இவ்வாறு விதிகளை விடாமல் போற்றி அமைந்தது அன்று; தேவைகளுக்கு ஏற்ப மாறி அமைந்த தாகும். ஆதலின், பேச்சுவழக்கில் 'நடவாய்' என்ற வடிவமே இல்லை. எழுத்திலும் அதற்கு இடம் இல்லை என்றே கூறலாம். ஒருசில செய்யுட்களில் அருகி வழங்கும் வழக்காகவே அது உள்ளது.[1]

எனவே 'நட' என்பதே வாக்கிய வடிவம் எனலாம். ஒருவன் தன் முன்னிலையாக நிற்கும் மற்றொருவனுக்குக் கூறும் சொற்றொடர் இது. முன்நின்றானுக்கு ஏவலை உணர்த்தும்போது 'நீ' என்று குறித்துக் கூறுவது மிகை அன்றோ? ஆதலின் 'நட' என்ற சொல்மட்டும் நின்று வாக்கியமாக வழங்குகின்றது. குறிக்கப்படும் பொருள் தொலைவில் உள்ளதாக நேரும்போதுதான் அதனைப் பற்றிப் பலவும் அறிவித்தல் இன்றியமையாததாக உள்ளது. அதுபற்றியே, படர்க்கை வினைமுற்றில் திணைபால் எல்லாம் விளக்கமாக உணருமாறு பாலறிகிளவிகள் அமைந்

---

1. உண்மை இவ்வாறிருக்க,

'செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகிடன் உடைத்தே'

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற்குச் (சொல். ௪௫௦) "செய்யாய் என்னும் வாய்பாட்டதாகிய முன்னிலை முற்றுச்சொல் ஆய் என்னும் ஈறுகெடச் செய் என்னும் சொல்லாய் நிற்ற லுடைத்து" என்று உரை எழுதியதோடமையாமல், "ஆகிட னுடைத்து என்றதனால் செய்யாயென ஈறுகெடாது நிற்றலே பெரும்பான்மை என்பதாம்" எனச் சேனாவரையர் விளக்குவது வியப்பாகவே உள்ளது.

உள்ளன.[1] 'நட' என்னும் ஏவல்வினைமுற்றில், பேச்சைக் கேட்போனே குறிக்கப்படும் பொருளாகவும் இருத்தலின், திணைபால் விளக்கமும் காலமுணர்த்தலும் வேண்டுவன அல்ல.

கார்டினர் என்னும் ஆங்கில அறிஞர் இதற்குச் சொல்லும் காரணம் மிகச் சிறந்து விளங்குகின்றது :— ஒரு வாக்கியத்தில், பேசுவோன், கேட்போன், பேசப்படும் பொருள், அதை விளக்கும் சொற்கள் என நாற் பகுதி உண்டு. கேட்போனுக்குப் பேசப்படும் பொருளை விளக்குவதே பேச்சின் நோக்கம் ஆதலின், அந்தப் பொருள் கேட்போனை விட்டு எவ்வளவு சேய்மையில் உள்ளதோ, அவ்வளவு மிகுதியான சொற்களால் விளக்கம் தேவையாகின்றது. கேட்போனை அடுத்துள்ள பொருளாயின், சில சொற்களால் எளிதில் விளக்கிட முடியும். 'நட' என்னும் ஏவல் வினையில், பேசப்படும் பொருள் கேட்போனாகவே ஒன்றுபட்டு மிக அண்மையில் நிற்பதால் ஒரு சொல்லே வாக்கியமாக நின்று கருத்தை மிக எளிதில் உணர்த்த முடிகின்றது. வெறுங் கண்மூடி இலக்கண முறையால் அதை வாக்கியம் அன்று என மறுத்தல் கூடாது என்பர் அறிஞர் கார்டினர்.[2]

---

1. படர்க்கை வினைமுற்று நாமம் குறிப்பின்
பெறப்படும் திணைபால் அனைத்தும்; ஏனை
இடத்தவற் றொருமை பன்மைப் பாலே.

—நன்னூல், சொல். உசுடு.

2. Alan H. Gardiner, The Theory of Speech and Language, pp. 49, 125.

Why is it that grammarians are so reluctant to accord the rank of sentence to utterances such as these ? I believe the reason is that syntax still labours under the domination of formal logic, despite all efforts to free itself.—Ibid. p. 212.

எனவே, மொழியியல் ஆராய்ச்சியின்படி, பகுதி யாகிய 'நட' என்பதே தனித்து நின்று வாக்கியமாக அமைகின்றது.[1] ஆதலின், 'நீ நடவாய்' என்பது இலக்கணத்தின் படைப்பாகவும், 'நட' என்பது உண்மை மொழியாகவும் இருக்கக் காண்கின்றோம்.[2]

இதற்கு அடுத்த நிலையில் வளர்ந்து அமைந்த வாக்கியம் எழுவாயும் பயனிலையுமாக இரண்டு சொற்கள் தொடர்ந்த எளிய வாக்கியம் ஆகும்.[3] பல சொற்கள் தொடரும் எளிய வாக்கியங்களை ஆராயின், அங்கும் எழுவாயும் பயனிலையுமாகிய இரு சொற்களே வாக்கிய அமைப்பிற்கு இன்றியமையாதனவாக விளங்கும். மற்றச் சொற்கள் எழுவாய்க்கோ, பயனிலைக்கோ இரண்டற்குமோ அடையாக நிற்பன.

இவ்வாறு அமையும் வாக்கியங்களை முழு வாக்கியங்கள் (full sentences) என்றும், மற்ற வாக்கியங்களைக் குறை வாக்கியம் (minor sentences) என்றும் புளூம்பீல்ட் பாகுபாடு செய்கிறார். முழுவாக்கியம் செய்பவன்—செயல் (actor-action) என்ற முறையில் அமைவது என்றும்,

1. Jespersen, A Modern English Grammar, p. 67.

2. We cannot say that 'come' is an elliptical form of 'come thou'; 'come thou' is rather an extended or redundant form of 'come,' for as the pronoun is really superfluous—commands being generally addressed to some one person—'come is the normal form of expression.'—A. E. H. Swaen, Grammatical Miscellany to Otto Jespersen, p. 275.

3. As the psychological subject is that idea or group of ideas which first comes to the speaker's mind, and as there is no predicate without an underlying subject, the natural order of words in the simple sentence is: first subject, then predicate—L. Kellner, Historical Outlines of English Syntax, p. 286.

மற்றது ஏவல் முறையில் அமைவது என்றும் கூறுகிறார். சில வாக்கியங்களில் செய்பவன் செயல் இரண்டும் ஒரே சொல்லில் அமைவது உண்டு என்றும் குறிக்கிறார். 'செய்தான்' என்னும் தமிழ்ச்சொல்லின் பகுதியில் செயலும், விகுதியில் செய்பவனும் ஆக இரண்டும் அடங்கியிருத்தல் காண்க.

அவன் செய்தான்

என்பதில் பெயரும் வினையுமாக இருத்தல் போல,

அவன் நண்பன்
அவன் ஊரான்

என்பவற்றில் பெயரும் பெயருமாக இருத்தலும் காணலாம். ரஷ்யமொழியிலும் இவ்வாறான வாக்கியங்கள் உண்டு எனக் காட்டி, அவற்றை narrative predication என்றும் equational predication என்றும் குறிப்பிடுகிறார் புளூம்பீல்ட்.[1]

எல்லா மொழிகளிலும் பொதுவாக வாக்கியம் நான்கு வகைப்படும் என்பது அறிஞர் கருத்து.[2] அவை:—

செப்பு, வினா விருப்பு, வியப்பு

என்பன. விருப்பு, என்னும் வகையில் ஏவல், வியங்கோள், வேண்டுகோள், விழைவு என்பன அடங்கும்.

---

1. Language, pp. 172, 173.

2. Four kinds of sentences:—(a) statements, (b) questions, (c) desires which are explained to include commands, requests, entreaties and wishes, and (d) as a less impor, tant group, exclamations.

The report of the Joint-Committee on Grammatical Terminology recommended that sentences should be divided into these four classes—Alan H. Gardiner, The Theory of Speech and Language, p. 188.

அவர் புலவர் — செப்பு
அவர் யார்? — வினு
அவர் வாழ்க — விருப்பு
என்னே புலமை! — வியப்பு

தமிழ்மொழியில் சொற்கள் தொடரும் முறையில் அடிப்படையாக உரைத்தக்கவை சில உள. அவை யாவன :—

1. தமிழ் வாக்கியத்தில் எழுவாய் எங்கேனும் அமையும். அது பெயராகவே இருக்கும். (தொழிற்பெயரும் வினையாலணையும் பெயரும் பெயராய் அடங்கும்.)[1]

வந்தார் புலவர்

என வற்புறுத்திக் கூறுமிடத்து எழுவாய் வாக்கியத்தின் இறுதியில் பயனிலைக்குப் பின் நிற்றலும் உண்டு. (எகிப்து மொழியில் பெரும்பான்மையும் பயனிலைக்குப் பின் நிற்றலே இயல்பாக உள்ளது.)

2. பயனிலை பெரும்பாலும் இறுதியில் நிற்கும்.[2] விரைவு முதலான குறிப்பைப் புலப்படுத்த நேரும்போது முதலிலும் இடையிலும் நிற்றல் உண்டு. பயனிலை பெரும்பாலும் வினைமுற்றாக இருத்தல் இயல்பு. சிறுபான்மை பெயராக இருக்கும்.

நக்கீரர் வந்தார் — { பயனிலையாக வினைமுற்று இறுதியில் வரல்
வந்தார் நக்கீரர் — முதலில் வரல்
அது பூனை — பெயர் பயனிலையாதல்

---

1. A verbal noun is a noun because it is a word that is used as a name.—H. R. Stokoe, The Understanding of Syntax, p. 156.

2. 'கூ' முதலான மற்றத் திராவிட மொழிகளிலும் இவ் வியல்பு மாறவில்லை.—Winfield, Grammar of the Kui Language, p. 158.

பெயர் பயனிலையாக அமையும் வாக்கியத்தில் வினைச் சொல் இல்லாமை காணப்படும். இது ஆங்கில முதலான பல மொழிகளுக்கு வேறுபட்ட வழக்காகும். ஆங்கிலம் முதலான மொழிகளில் 'இருக்கின்றது' என்னும் பொருளுடைய வினை ஒன்று இடையே சேர்க்கப்படும். அந்த வினை ஒரு தொழிலையும் உணர்த்தாது பொருளின்றி வரும்; அதன் பயன், வாக்கிய இலக்கணம் நிரம்புதலே ஆகும்.[1] அதனைக் 'கோபுலா' (copula) எனக் குறிப்பர்.[2] எகிப்து மொழி, ரஷிய மொழி முதலியவற்றிலும் திராவிட மொழிகளிலும் அது இல்லை.

It cat

அது பூனை

என்னும் வழக்கு அங்கு இல்லை.

It is (a) cat

என்பதே அங்கு வழங்குவது. இவ்வுண்மையை அறியாத சிலர், தமிழின் சொற்றொடரமைப்பை உணராமல் தமிழில் மொழிபெயர்க்கும்போது இதுபோன்ற அமைப்பைப் புகுத்தித் தவறுவர்.

அது பூனையாக இருக்கின்றது

என்பதுபோல் தவறாக அப்படியே பெயர்த்து எழுதுவர்.

---

1. It is quite consistent with the psychological facts as well as with the Science of language, that the simple juxtaposition of subject and predicate is anterior to the connection by means of a copula. The original state is still kept in proverbs and similar expressions: "first come first served" etc. L. Kellner, Historical Outlines of English Syntax, p. 44.

2. Copula is the term applied to a verb so used that it serves as a link joining a noun or a pronoun or an adjective to the subject in such a way that the noun, pronoun or adjective may be said to agree with the subject.—Stokoe, The Understanding of Syntax, 189.

பயனிலையாகிய வினைமுற்று வாக்கியத்தின் இறுதியில் நிற்கும் தமிழ் அமைப்புமுறை உளநூலுக்கு (psychology) இயைந்த முறையாகவே உள்ளது. ஊமைகளின் மொழியில் வினைச்சொல்லை உணர்த்தும் இடம் எங்கே என்று ஆராய்ந்தால், எழுவாய், செயப்படுபொருள், இடம், காலம் முதலான எல்லாவற்றையும் அதற்கு முன்னே உணர்த்தி விட்டு இறுதியில்தான் வினையை உணர்த்துகின்றனர் என்பது விளங்குகின்றது.[1] ஆகவே, அது பேசுவோர் உள்ளத்தில் எழும் எண்ணங்களின் இயற்கையான அமைப்பு என்பது தெளிவு.

3. செயப்படுபொருள் எழுவாய்க்கும் பயனிலைக்கும் இடையில் நிற்கும். சிறுபான்மை மாறி நிற்றலும் உண்டு. வினை, எச்சமாக நிற்கும்போது, செயப்படுபொருள் தவறாமல் வினைக்குமுன் நிற்கும்.

அவர் சிலம்பை இயற்றினார்.
சிலம்பை அவர் இயற்றினார்.
அவர் இயற்றினார் சிலம்பை.
அவர் சிலம்பை இயற்றி உதவினார்.
சிலம்பை இயற்றிய அவர் சிறந்தவர்.

4. எழுவாயும் பயனிலையும் திணை பால் இடம் என்பவற்றால் ஒத்திருத்தல் திராவிட மொழிகளின் இயல்பு.[2]

---

1. Indeed, the verb seems to fix itself at the end of the sentence almost naturally, since the deaf-mute when taught to communicate with others invariably sets the verb in this position, the subject and object to which his thought is chiefly directed being the first to occur to his mind.—Sayce, Introduction to the Science of Language, p. 1902.

2. வினையின் தோன்றும் பாலறி கிளவியும்
பெயரின் தோன்றும் பாலறி கிளவியும்
மயங்கல் கூடா தம்மர பினவே. —தொல். சொல். கக.

ஐரோப்பிய மொழிகளில் எழுவாய் பயனிலைகளே அல்லாமல் பெயரடையாக வரும் சொற்களும் அவ்வப் பெயர்களோடு திணைபால் ஒத்திருத்தல் வேண்டும். ஆங்கிலத்திலும் அவ்வாறு இருந்த காலம் உண்டு. இப்போது 'good' முதலான பெயரடைகள் எல்லாப் பெயர்களுக்கும் பொது வாக உரியனவாய்த் திணை பால் வேறுபாடு உணர்த்தாதன வாய் வழங்குகின்றன.[1] ஆங்கிலம் அந்த நிலையும் கடந்து வளர்ந்துவிட்டது. பயனிலையாகிய வினைமுற்று ஆங்கிலத் தில் திணை பால் உணர்த்துவதில்லை. இறந்தகால எதிர்கால வினைகளான 'went' 'will go' முதலானவை எல்லாத் திணைபாலிடங்களுக்கும் பொதுவானவை. நிகழ்கால வினைகள் மட்டும் படர்க்கையில் ஒருமை பன்மை உணர்த்து கின்றன (go, goes; come, comes). திராவிட மொழிகளுள் மலையாள மொழி ஆங்கிலத்தையும் கடந்து வளர்ந்து விட்டது. மலையாளத்தில் எல்லா வினைமுற்றுக்களும் இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவானவை. தமிழில் அவ்வாறு இல்லை.

நண்பன் வந்தான்

என்னும் தமிழ் வாக்கியத்தில் இரு சொல்லும் படர்க்கை உயர்திணை ஆண்பாலாக ஒத்து அமைந்து வாக்கியமாயின.[2]

நண்பன் உண்டு
நண்பன் இல்லை

---

1. Every adjective and adjective-pronoun was declined in the three genders and made to agree with its noun in gender as well as in number and case, just as if it were Latin or Greek. This completely passed from our memory and our conception, leaving not a trace behind.—Whitney, Language and the Study of Language, p. 78.

2. பேச்சு வழக்கில் அஃறிணைப் பன்மையில் மட்டும் இவ் வாறு ஒத்திருக்கவில்லை. 'பத்து மரம் விழுந்தது' எனப் பன்மை

என்ற வாக்கியங்களில் நண்பன் என்பதற்கேற்ப ஆண்பா லுணர்த்தும் பயனிலை இல்லை எனினும், இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாக வழங்கும் சொற்கள் ஆதலின் பொருந்தும்.

5. பெயரடை எல்லாம் பெயர்க்கு முன்னும், வினையடை எல்லாம் வினைக்கு முன்னும் அமைகின்றன.

நல்ல நண்பன்—பெயரடை (adjective)
விரைந்து சென்றான்—வினையடை (adverb)

6. ஆறும் வேற்றுமை உருபும், எல்லைப்பொருளை உணர்த்தும் ஐந்தாம் வேற்றுமை உருபும் பெயர் கொண்டு முடிவன. மற்ற வேற்றுமையுருபுகள் வினைகொண்டு முடிவன.[1] நான்காம் வேற்றுமையில் சில இடங்களில் உருபு பெயர் கொண்டு முடிதலும் உண்டு.

எனது கை—ஆறும் வேற்றுமை
சென்னையின் மேற்கு அம்பத்தூர் - ஐந்தாவது எல்லை 'இன்'
தலைவனைக் கண்டேன் } செயப்படுபொருள்
மண்ணால் செய்த குடம் } கருவி முதலியன
உனக்குத் தந்தேன் }
அவனுக்குப் பகை—நான்காம் வேற்றுமை பெயரொடு முடிதல்

---

எழுவாயும் ஒருமைப் பயனிலையுமாக இயைகின்றன. பழைய கிரேக்க மொழியிலும் இவ்வாறு இருந்தது என்பர் :—

It is well known that the predicate must agree with the subject in number, gender, and case. In ancient Greek we observe an apparent exception from this rule, if the subject is a neuter plural. The predicate is then not in plural, but in singular.—A. F. Semenov, The Greek Language in its Evolution, p. 160.

1. எல்லை இன்னும் அதவும் பெயர்கொளும்
அல்ல வினைகொளும். —நன்னூல். சொல். ௩௧௧.

7. செப்பாக வரும் வாக்கியங்களுக்கும் வினாவாக வரும் வாக்கியங்களுக்கும் வேறுபாடு இல்லை எனலாம். செப்புவாக்கியத்தின் ஈற்றில் ஆ ஓ முதலாயின வினா இடைச்சொற்களாகச் சேர்க்கப்படும். அல்லது, செப்பு வாக்கியத்தில் சுட்டுப்பெயர் நிற்குமிடத்தில் வினாப் பெயர் அமைக்கப்படும்.

இளங்கோ வந்தான்—செப்பு
இளங்கோ வந்தானா?—வினா
அங்கே கண்டான்—செப்பு
எங்கே கண்டான்?—வினா

8. இணைத்தற்கு வரும் உம்மை இடைச்சொல் (ஆங்கிலத்தில் 'and' வருவதுபோல்) ஓரிடத்தில் வருதல் போதாது; இணைக்கப்படும் பல சொற்களோடு வரும்.

சேரனும் சோழனும் பாண்டியனும் வந்தனர்.
(The Chera, the Chola *and* the Pandia came.)

9. இவ்வளவு என்று வரையறுத் துணரப்பட்ட வற்றின் பெயரைத் தொடர்ந்து வினை வரும்போது, அத் தொகுதிப் பெயருக்கு உம்மை கொடுத்துக் கூறல் வேண்டும்;[1]

ஐந்து விரலும் சிவந்தன.
மூவேந்தரும் போற்றினர்.

எல்லாம் என்ற சொல்லும் இவ்வாறு தொகுதிப் பொருளுணர்த்துவதால், வாக்கியமாக அமையும்போது தொகுதிப் பெயரைச் சார்ந்து உம்மை வரும்.

எல்லா நாடுகளுக்கும் சென்றனர்.

---

1. இனைத்தென் றறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்.
—தொல். சொல். ௩௩.

10. திடீரென்று பேசுவோனுக்கு ஓர் உணர்ச்சி ஏற்பட, கேட்போனுடைய கவனத்தை ஈர்த்து அவனுக்கு உணர்த்த விரும்பும்போது[1] வாக்கியத்தில் முன்னும் பின்னும் சொற்கள் அமைக்காமல், ஒரு சொல்லையே திரும்பத் திரும்ப இருமுறை மும்முறை பலமுறை கூறுதல் உண்டு.

பாம்பு பாம்பு
தீ தீ தீ
சே சே சே

பிற : வேற்றுமையுருபுகள் பெயர்க்குப்பின் தொடர்தலையும், இவ்வாறே பிற இடைச்சொற்கள் பெயர் வினைகளைத் தொடர்தலையும் முன்பு கண்டோம். இவையும் தமிழ்ச் சொற்றொடரின் அமைப்பு முறைகளாகும்.

விளக்கும் பெயரடைகள் இரண்டாக அமைந்து, அவற்றுள் ஒன்று பண்பை உணர்த்தும் அடையாகவும், மற்றொன்று உறுப்புப் பெயரடையாகவும் வரின், பண்படை முதலாவதாகவும் உறுப்பு இரண்டாவதாகவும் அமைய வேண்டும் என்கிறார் தொல்காப்பியனார்.[2]

செங்கால் நாரை
வெண்கோட்டுக் களிறு

இவ்வாறு சொற்கள் தொடர்ந்து அமையும் சொற்றொடரமைப்பு முறை ஒவ்வொன்றையும் தனித்தனியே ஆராயின், இன்னும் பல அமைப்பு நுணுக்கங்கள் புலனாகும்.

---

1. Tautalogy is the natural vehicle of emphatic speech.—L. Kellner, Historical Outlines of English Syntax, p. 21.

2. அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்.
—தொல். சொல். ௨௰௬.

எடுத்துக்காட்டாக: பெயரடைகள் பெயர்க்கு முன் அமையும் எனக் கண்டோம்.

நல்ல நாள்
பெரிய வீடு
புதுப் பால்
} விளக்கும் பெயரடைகள் (descriptive adjectives)

என்பவற்றோடு, அந்த, ஒரு, சிறிது என்பவை சேருமாயின்,

நல்ல அந்த நாள்
பெரிய ஒரு வீடு
புதுச் சிறிது பால்
} வரையறுக்கும் பெயரடைகள் (limiting adjectives)

எனச் சொற்றொடர்கள் பெரும்பாலும் அமைவதில்லை. (புதுச்சிறிதுபால் என அமைவதே இல்லை.)[1]

அந்த நல்ல நாள்
ஒரு பெரிய வீடு
சிறிது புதுப் பால்

என்றே அமையும். ஆக, பெயரடைகள் அமையும் முறையில், வரையறுப்பன முன் அமைந்து, அவற்றை அடுத்து விளக்குவன அமையக் காண்கிறோம். இவ்வாறே ஒவ்வொரு வகையிலும் சொற்றொடரமைப்பு முறையின் நுணுக்கங்கள் பல உள்ளன.

இவ்வாறு அமையும் வாக்கியங்களில் பேசுவோரின் உணர்ச்சி காரணமாகச் சில சொற்கள் விடுபட்டுப் போதலும் உண்டு; வாய் தவறி வேறு சொற்களை—தவறான அல்லது பொருந்தாத சொற்களைப் பேசிவிடுதலும் உண்டு. அவை நம்மை அறியாமல் பிறந்துவிடும் தவறுகளும் குறைகளும் (lapses) ஆகும். மொழியியலை ஆராய்வோர் சிலர் அவற்றையும் விடாமல் ஆய்ந்து வருகின்றனர்.[2] அவற்றால் சொற்றொடர்கள் தவறாக அமைந்துவிடுதலும் உண்டு.

---

1. Bloomfield, Language, p. 202.

2. Sturtevant, An Introduction to Linguistic Science, pp. 37, 38.

பேசுவோர் வேகமாக எண்ணுவதால், எண்ணங்கள் ஓடிப்போக, அவற்றிற்குரிய சொற்கள் சொல்லாமல் விடுபட்டுப் போக, ஒரு வாக்கியத்தின் முற்பகுதியில் குறைகள் நேர்தலும் உண்டு. பேசிக்கொண்டிருந்து வாக்கியத்தை முடிக்கும்போது, திடீரென்று ஏற்பட்ட உணர்ச்சி காரணமாக வாக்கியத்தை முடிக்காமலே நிறுத்துதலும் உண்டு. (இவற்றை prosiopesis, aposiopesis என்பர்.)[1] விடுபட்ட சொற்கள் இல்லாமலே கேட்போர் தன் கருத்தை உணர முடியும் என்னும் நிலையிலேயே ஒருவன் இவ்வாறு பேசுதல் நிகழும்.

சொற்றொடர் முறை பலவற்றிற்கும் காரணங்கள் இன்ன இன்ன எனத் தருக்க முறையால் ஆராய்ந்து கூறல் இயலாது. மொழியைப் பேசும் மக்கள் காரணங்களை ஆராய்ந்தே சொற்களையும் சொற்றொடர்களையும் அமைத்துப் பேசுகின்றனர் என்று சொல்வதற்கில்லை. காரணங்களை ஆராய்ந்து அமைக்கும் முறையும் உண்டு. ஆனால் அதனினும் சிறப்பாக அவர்களின் உள்ளத்தில் உள்ளது ஒன்று; அஃதாவது ஒருவரைப்போல் ஒருவர் பேசுதல், ஒருவர் முறையை ஒருவர் பின்பற்றல் என்று சொல்லத் தக்க ['போலச்செய்தல்' (imitation) என்னும்] இயற்கை ஆற்றலே ஆகும். இது விலங்குகளிடத்தும் பறவைக ளிடத்தும் வளர்ச்சி பெறாமல் மக்களிடத்து மட்டுமே சிறந்து விளங்குவது. மொழியின் தோற்றத்திற்கும் பெருக் கத்திற்கும் இதுவே காரணம் என்பது முன்பு கண்டோம். மொழியின் வளர்ச்சிக்கும் சிறப்புக்கும் அமைப்புக்கும் இதுவே காரணம். இதுவே ஒப்புமை யாக்கம் (analogy)

---

1. Jespersen, Language etc, pp. 273, 274.

என் மொழிநூலார் விளக்குவதாகும்.[1] இதனாலேயே சொற்றொட ரமைப்பு முறை தொன்றுதொட்டுச் சில வாய்பாடுகளாக நிலைத்துவருகின்றது.





1. There have been attempts to find a sort of logical framework behind the rules of grammar, but language is too rich and not sufficiently rectilinear to tend itself to this presentment. It overflows the bounds of logic on every side. Moreover, its categories do not coincide with those of reasoning, having a method of procedure peculiar to itself; it at times constitutes grammatical groups which are not reducible to any abstract conception.

This logic rests entirely on Analogy, Analogy, being the method of reasoning of children and the multitude. An expression is given; they form another somewhat like it. This one in its turn produces a third, slightly different, which again provokes imitations, the first and the second not having in the meantime ceased to be productive. Language can go far in this way...What we must do is to retrace the road over which language has travelled, striving to recognise the turnings, and never forgetting that language being the work of the people, we must, to understand it, put off the logician and become one with the people ourselves.—M. Breal, Semantics, pp. 220, 227, 228.

**கால்டுவெல் ஒப்பிலக்கணம் (முதற் பகுதி)**

—திரு. கா. கோவிந்தன், எம். ஏ.

திராவிட மொழிகளின் ஒலி அமைப்பு, வேர்ச் சொற்கள் ஆகியவைபற்றி அறிஞர் கால்டுவெல் இயற்றிய சிறந்த ஆராய்ச்சி நூலாகிய கால்டுவெல் ஒப்பிலக்கணத்தின் மொழி பெயர்ப்பே இந்நூல். விலை ரூ. 2-50

**திரவிடத்தாய்: திரு. ஞா. தேவநேயன், எம். ஏ.**

கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளு ஆகிய திராவிட மொழிகளுக்கெல்லாம் தாயாக விளங்குவது தமிழே என்பது இந்நூலினால் தெளியப்படுகிறது. திராவிட மொழிகளின் தோற்றமும் அடிப்படை ஒற்றுமைகளும் விளக்கப்பட்டுள்ளன. விலை ரூ. 1-75

**இலக்கியச் செவ்வி: திரு. J. முத்துவீராசாமி, பி. ஏ.**

இஃது ஓர் இலக்கியத் திறனாய்வு நூல். இலக்கியத்தின் தோற்றம் வளர்ச்சி முதலியன நன்கு ஆராயப்பட்டுள்ளன. ஆராய்ச்சியாளர்க்கும் மாணவர்கட்கும் பயன்படும் சிறந்த நூல். விலை ரூ. 5-00

**The Tamils Eighteen Hundred years Ago:**

V. Kanakasabhai, B.A., B.L.

இது தமிழ் நாட்டின் அமைப்பு, பண்பாடு, பிறநாடுகளுடன் தமிழர்கள் கொண்டிருந்த தொடர்பு, சேர சோழ பாண்டிய மன்னர்களைப் பற்றிய குறிப்புக்கள், தமிழரின் குடியியல்பு, அரசியல் மாண்பு, இலக்கியச் சிறப்பு, சமயக் கொள்கை இன்ன பிறவற்றைப் பற்றி ஆங்கிலத்தில் திரு. வி. கனகசபை, பி. ஏ., பி. எல். அவர்கள் ஆக்கியுள்ள நூலாகும். விலை ரூ. 8-00




